# நீங்களும் பொம்மைகள் செய்யலாம்!

## கொள்ளை அழகுடன் கோழிக் குஞ்சுகள்

**போட்**டோவில் காணப்படுவது போல் கலர் கலராகக் கோழிக் குஞ்சுகள் செய்வது மிகவும் எளிது. முதலில் நிறங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். வெளிர் நிறங்கள் (Light Colours) வசீகரமாக இருக்கும். ஏனெனில் கண்ணிற்கு வைக்கும் கருப்பு மணிகள் எடுப்பாகத் தெரிய வெளிர் நிற (கம்பளி நூல்) உல் உதவும்.

தேவையான பொருட்கள் (Single knitted wool)

கம்பளி நூல் 10 கிராம் (பத்து கிராம் மட்டும்) இருந்தால் இரண்டு குஞ்சுகள் செய்து விடலாம்.

கண் வைக்க கருப்பு மணிகள் இரண்டு.

மூக்கு வைக்க 15 மிமீ. வட்ட சம்கி ஒன்று. (தங்க நிறம் அல்லது சிவப்பு நிறம்)

சின்ன கத்திரிகோல் அல்லது பிளேடு.

குழந்தைகளின் பழைய நோட்டுக் அட்டை.

உல்லன் நூல் நுழையக் கூடிய சற்று பெரிய ஊசி.

செய்முறை : குஞ்சின் உடல் பகுதி - நோட்டுக் அட்டையில் $3/4$ அங்குல ஆரத்தில் இரண்டு வட்டங்கள் வரைந்து கட் செய்து

கொள்ளவும். இரண்டின் நடுவிலும் $\frac{1}{4}$'' ஆரத்தில் சிறிய வட்டங்கள் வரைந்து கட் செய்து எடுத்து விடவும். (படம் : 1)




இவ்விரண்டு வட்டத் துண்டுகளும் குஞ்சின் உடலுக்குத் தேவை.

டெய்லரிங் டேப்பினால் (60'' வரை உள்ளது) 10 டேப் அளவு உல்லன் நூலை அளந்து எடுத்துக் கொண்டு நான்கு மடிப்பாக ஊசியில் கோர்த்துக் கொள்ளவும். 15'' அங்குல நூல் துண்டு ஒன்று முடிச்சு போடுவதற்காகக் கட் செய்து கொள்ளவும். இந்த முடிச்சு நூலை இரண்டாக மடித்து, சாதாரண முடிச்சு போட்டு வட்ட அட்டைத் துண்டுகள் இரண்டின் நடுவில் துளையைச் சுற்றி வைக்கவும். இறுக்காமல், தளர வைக்கவும். (படம் : 2)




துளை வழியே முடிச்சு நூல் தெரியக்கூடாது. முடிச்சு போக மீதி நூல் கீழே தொங்கிக் கொண்டிருக்க வேண்டும்.

ஊசியில் கோர்த்த நூலை துளை வழியே விட்டு இரண்டு அட்டைகளையும் சேர்த்து சுற்றிக் கொண்டே வர வேண்டும். ஆரம்பிக்கும் போது நூலின் மேல் இரண்டு, மூன்று முறை சுற்றி விட்டு, பின் வரிசையாகச் சுற்ற ஆரம்பித்தால் நழுவாமல் இருக்கும். அட்டை மடங்கும் அளவுக்கு இறுக்காமலும், லூசாகவும், இல்லாமல் ஒரே சீராகச் சுற்ற வேண்டும். கீழே தொங்கும் முடிச்சு நூலை ஒன்று சேர்த்தாற் போல் வைத்து விட்டு விட்டு பக்கத்திலிருந்து சுற்றிக் கொண்டு போக வேண்டும். (படம் : 3)




ஒரு சுற்று முடிந்தபின் மீண்டும் மீண்டும் வட்டமாக சுற்றிக் கொண்டே வர வேண்டும். நடுவில் உள்ள துளை வழியே ஊசி நுழைய முடியாத அளவுக்கு நிறைந்தபின் நூலிலிருந்து ஊசியைக் கட் செய்து எடுத்து விடவும். நூல் சுற்றிய அட்டையை இடது கையால் பிளேடினால் அட்டைகளுக்கு நடுவில் கத்திரிக்க ஆரம்பிக்கவும். (படம் : 4)




முழுவதும் கத்தரித்தபின் முடிச்சு நூலை லேசாக இறுக்கிக் கொண்டு, அட்டைகளை ஒரு புறம் சிறிது பிய்த்து எடுத்து விடவும், முடிச்சை நன்கு இறுக்கி 2 முடிச்சு போடவும். இப்பொழுது குஞ்சின் உடல் தயார். வேண்டுமானால் சிறிது ட்ரிம் செய்யலாம்.

தலைப்பகுதி : உடல் பகுதியைப் போலவேதான் தலை செய்யும் விதமும். $\frac{1}{2}$'' ஆரத்தில் 2 வட்டத்துண்டுகள், அவற்றின் நடுவில் $\frac{1}{8}$'' ஆரத்தில் துளைகள் போடவும். 10'' நீளத்திற்கு முடிச்சுநூல் தேவை. $3\frac{1}{2}$ டேப் முழு நீளத்திற்கு உல் நூல் தலை பாகத்திற்குத் தேவை. செய்முறையெல்லாம் மேற் சொன்ன விதமேதான்.

இவ்விரண்டு உருண்டைகளையும் (உடல், தலை) முடிச்சு நூலால் சேர்த்து முடிச்சு போட்டு, பாக்கி முடிச்சு நூலை வெட்டி விடவும்.

கீழே பெரிய உருண்டையும், மேலே தலையுமாக நிற்க வைத்து, இரண்டு கருப்பு மணிகளை பசை(கம்)யில் தோய்த்து முகத்தில் ஒட்டவும். மூக்கிற்கு 15 மிமீ. சம்கியை இரண்டாக மடித்து ஒரு முனையைச் சிறிது வெட்டி விட்டு, அப்பகுதியைப் பசையில் தோய்த்து கண்களுக்குக் கீழே

PARLE

# கால்ஷியம் இல்லையேல் பல் இல்லை?

தமிழ்நாடு மற்றும் ஆந்திரப் பிரதேசத்தில் தேர்ந்தெடுத்த நகரங்களில் மட்டுமே கிடைக்கிறது.



உங்கள் பற்களைப் பாதுகாக்கும் கவசமாக விளங்குகின்ற எனாமல், 35% கால்ஷியத்தினால் ஆனதாகும்.

வாயிலிருக்கும் உணவுத் துணுக்குகள் மற்றும் சர்க்கரை மூலம் ஏற்படும் அமிலத்தினால் அன்றாடம், இந்தக் கால்ஷியம் தொடர்ந்து தாக்குதலுக்கு உள்ளாகிறது. இதன் விளைவு கால்ஷியம் இழக்கப்படுகிறது . . . அதாவது இயல்பாகவே எனாமல் கவசமும் வலு இழக்கும். இதை 'தாதுப்பொருள் இழத்தல்' என்கிறோம்.

**"ஆனால் - நான் எனது பற்களை தவறாமல் பிரஷ் செய்கிறேன்!"**

ஒழுங்காக பிரஷ் செய்தும் பலர் பல் டாக்டரிடம் தவறாமல் செல்கிறார்களே! அதாவது, தாதுப்பொருளை இழந்த பற்களுக்குத்தேவை, மீண்டும் தாதுப்பொருள் பெறுவதுதான். அதைத்தான் ப்ருடென்ட் கால்ஷியம்++ சரியாகச் செய்கிறது.

**"எவ்வாறு கால்ஷியம்++ பற்களின் தாதுப் பொருளை மீட்கிறது ?"**

சுலபம். கால்ஷியம்++ டூத் பேஸ்ட் மட்டுமே, கரையக் கூடிய கால்ஷியம் கொண்டதாகும். இது, எனாமல் வலு இழந்துள்ள இடத்தில், கரைய முடியாத கால்ஷியம் கூட்டுப் பொருளை உருவாக்க உதவுகிறது. இப்புனர் அமைப்பு முறையே 'தாதுப்பொருளை மீட்டுப் பெறுதல்' என்பதாகும். மேலும் வாய் கழுவிக் கொப்பளித்தாலும் மீண்டும் பெற்ற கால்ஷியம் இழக்கப்படாது.







**"பற்சிதைவுக்கு எதிராக இன்ஷ்யூரன்ஸ் எனலாம்..."**

மிகவும் சரி. உங்கள் குடும்பத்தினர் அனைவரும் இதிலிருந்து பயனடைய முடியும். எனவே கால்ஷியம்++ 'குட் ஃபார் யூ' என்பது பற்றி மேலும் அறிந்துகொள்ள விரும்பினால் எங்களுக்கு எழுதுங்கள். உடனே விபரம் அனுப்புகிறோம். எங்கள் முகவரி:

பார்லே ப்ராடக்ட்ஸ் லிட்., 254-B, நிர்லான் ஹவுஸ், டாக்டர் அனி பெஸன்ட் ரோடு, ஒர்லி, பம்பாய்–400 025



புதிய




CLARION/B/PPL/17/216 TAM

முகத்தில் ஒட்டி விடவும்.

கோழிக் குஞ்சு தயார்.

குஞ்சுக்குக் கால் வேண்டுமானால் அட்டையில் கட் செய்து உடலின் கீழே ஒட்டி, நிற்க வைக்கவும்.

இதே போல் பல கலர்களில் நிறைய செய்து ஓலைத் தட்டுகள் பின்னி அல்லது வாங்கி அவற்றில் வைத்து ஷோ கேஸில், கொலுவில் வைத்தால் கொள்ளை அழகு.

முதன் முதலில் ஒன்று செய்யும் போது சிறிது சிரமமாகத் தோன்றினாலும், இரண்டாம் முறை செய்யும் போது எளிதாகி விடும்.

தற்போது சில ஊர்களில் பிளாஸ்டிக் ரவுண்டுகள், திறந்து மூடும் கிளிப் வசதியுடன் கிடைக்கிறதாம். அது கிடைத்தால் அட்டைத் துண்டுகளுக்குப் பதில் அதில் நூலைச் சுற்றி, கத்தரித்த பின், முடிச்சு நூலை நுழைத்து முடிச்சு போடலாம். ஒரே மாதிரி அச்சாகக் குஞ்சுகள் செய்து அலங்கரித்து விடலாம்.

இதே முறையில் நாய், பூனை, கரடி, யானை, குரங்கு, முயல் போன்றவைகளை வட்டத்தின் அளவு, மூக்கு, காது இவற்றை வேறுபடுத்துவதன் மூலம் உருவாக்கலாம்.

## சில குறிப்புகள் :

1. வட்டத்தில் சுற்றும் போது உல் (நூல்) போதாவிட்டால், மேலும் கொஞ்சம் எடுத்து ஊசியில் கோர்த்துக் கொள்ளவும். பழைய நூலையும் புது நூலையும் முடிச்சு போட வேண்டாம். பழைய நூலின் மேல் புது நூலை வைத்து 2 சுற்று அதிகமாகச் சுற்றிவிட்டுத் தொடர்ந்தால் போதும்.

2. ஒட்டைக் காலணா, அல்லது சரியான அமைப்பில் வாஷர் கிடைத்தால் கூட பயன் படுத்தலாம். ஆனால், நூல் சுற்றி, கட் செய்து முடிச்சு போட்டபின் கவனமாக வெளியே இழுத்து எடுக்க வேண்டியிருக்கும்.

3. பூனை செய்தால் காதிற்கு நீளமான சம்கிகளைத் தலையின் மேல் அமுக்கி ஒட்ட வேண்டும். மீசைக்குப் பளபள பேப்பரைக் கத்தரித்து ஒட்ட வேண்டும்.

4. சந்தனக்கலரில் சின்ன உருண்டைகள் செய்து ஊசி நூலால் கோர்த்து சுவாமி படங்களுக்கு மாலை போடலாம்.

5. அட்டையின் உள், வெளி வட்டங்களைச் சீராக கட் செய்வதன் மூலமும், நூலைச் சீராக சுற்றுவதன் மூலமும், உருண்டைகள் அழகாக அமைந்து, உருவங்கள், சிறக்கும்.

6. நாய் பொம்மைக்கு உடல் : 1½'' ஆரத்தில் 2 உருண்டைகள். இவற்றை முடிச்சு நூலால் இணைக்கவும். தலை : ¾'' ஆரத்தில் ஒரு உருண்டை. மூக்கு : ½'' ஆரத்தில் ஒரு உருண்டை. காதுகள்: ¼'' ஆரத்தில் (வாஷர்) 2 உருண்டைகள். வால் : ½'' ஆரத்தில் ஒரு உருண்டை. 4 கால்கள் : ½'' ஆரத்தில் 4 உருண்டைகள். படம் : 5 ல் உள்ள வரிசை




யில் அமைத்து, ஊசி நூலால் கோர்த்து முடித்து விடலாம்.

- ராஜி ரகுநாதன்.




புதியவை அறிமுகம் :

அழகு சாதனங்களுக்குப் பெயர் பெற்ற பாண்ட்ஸ் இண்டியா நிறுவனம் இப்போது புதிய வாஸலின் ப்ரிக்லி பவுடர் ஒன்றை அறிமுகப்படுத்தியுள்ளது. மிருதுவான குழந்தையின் தேகத்திற்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளது என்கிறார்கள்.

பாண்ட்ஸ் நிறுவனம் சந்தன மணம் கொண்ட பவுடரையும் அறிமுகப்படுத்தியுள்ளது. தூய சந்தனம் கலந்துள்ளதால் பெண்களின் சருமத்திற்கு மிகச் சரியானது என்கிறார்கள்.

# கொலுவில் என்ன வைக்கலாம்?

நவராத்திரிக் கொலு என்பது என்ன? பொம்மைகளை மட்டுமேதான் வைத்து வழிபட வேண்டும் என்கிறார் சிங்காரம். கை வேலைப்பாடுகளை மட்டுமே வைத்திருக்கிறார் பேபி. இவ்விரண்டு பேரும் அவரவர் கருத்தை இங்கே கூறியிருக்கிறார்கள். இதைப் பற்றி மஞ்சக்குடி இராஜகோபால சாஸ்திரிகளும் கூறியிருக்கிறார் :-

## சிங்காரம் சீனிவாசன்

"நாற்பது வருடங்களுக்கும் மேலாக ஒரே வீட்டில் நான்கு தலைமுறைப் பெண்கள் நவராத்திரியைக் கொண்டாடி வருகிறோம். எங்கள் வீட்டுக் கொலுவில் உள்ள பொம்மைகள் எல்லாமே மண் பொம்மைகள்தான். மூன்று கட்டுக்களைக் கொண்ட நீளமான வீடு. மாடியில் ஒரு அறை முழுவதும் ஒன்பது படிகள் அமைத்து 'சீரியல் செட்' விளக்குகளைப் பொருத்துவோம். அறையின் இரண்டு மூலைகளிலும் '500 வால்ட்ஸ்' சக்தியுள்ள ஃபிளாஷ் லைட்டுகள் இரண்டைப் போட்டு அந்த அறையைக் கோவில் போல ஜெகஜோதியாய் வைத்திருப்போம். தெய்வீக மணம் கமழும் படி தினமும் நிறைய ஊதுவத்திகள் ஏற்றி கற்பூர ஆரத்தி எடுத்து முடித்து வைப்பது வழக்கம். தினமும் ஒரு வகைப் பழம், குழந்தைகளுக்குச் சுண்டல், பட்சணங்கள் செய்து கொடுப்பது வழக்கம்.

அந்த அறையை அடுத்துள்ள திறந்த இடத்தில் மேடை அமைத்துத் தினமும் (பத்து நாட்களும்) தெய்வ பக்தியான இசை, பக்திப் பாடல்கள், கதாகாலட்சேபம் போன்ற நிகழ்ச்சிகளை நடத்துவதும் உண்டு. வருடந்தோறும் சில பொம்மைகள் வாங்குவோம். மணமாகி வீட்டுக்கு வரும் புது மருமகள்கள் சீர் கொண்டு வரும் பொம்மைகளும் சேர்ந்து விடும். பழசாகிப் போன உடையாத பொம்மைகளைத் தூக்கி எறிய மனசில்லாமல் வர்ணம் பூசி வைப்பதுண்டு.

எங்கள் பெண்கள், பேத்திகள் எல்லோரும் நவராத்திரிக்கு அழைக்கப் போவார்கள். இப்போதுள்ள தலைமுறைப் பெண்கள் அழைக்கப் போவது குறைந்து விட்டது. வெட்கப்படுகிறார்கள். அதனால் கடிதம் எழுதிப் போட வேண்டியுள்ளது. அதுதான் வித்தியாசம். மீதி எல்லாம் எப்போதும் போல்தான் நடத்துகிறோம்.


பேபி சுப்ரமணியம்

## பேபி சுப்ரமணியம்

என் கணவர் வங்கியில் வேலை பார்த்ததால் பல ஊர்களுக்கும் மாற்றலாகி விடுவோம். மணமாகி முதல் வருடம் நவராத்திரி வந்த போது சாஸ்திரப்படி மண் பொம்மைகளும், ஓரிரு மரப்பாச்சி பொம்மைகளும் என் தாய் வீட்டில் வாங்கிக் கொடுத்தனர்.

பல ஊர்களுக்கும் மாற்றலானதால் மண் பொம்மைகள் உடைந்தும், வர்ணம்



இழந்தும் போய் விட்டன. என் இரண்டாவது மகன் படு வால்தனம் செய்வான். அவன் குழந்தையாக இருந்த போது நாங்கள் கவனிக்காத போது கொலுப்படி மேல் போட்டிருந்த துணியை இழுத்து விட்டான். கடைசிப் படியில் வைத்திருந்த பீங்கான் பொம்மைகள் அனைத்தும் உடைந்து விட்டன.

கைவேலைகள் செய்வது எனக்கு மிகவும் பிடிக்குமாதலால் அவற்றை தாம்பூலத்தில் முக்கியப்பட்டவர்களுக்கு வைத்துக் கொடுக்க ஆரம்பித்தேன். (ஒயர் கூடைகள், ஒயர் பர்ஸுகள், மணிப் பைகள், மணி பர்ஸுகள்) மணியால் செய்த பெரிய பொம்மைகளைக் கொலுவில் வைக்க ஆரம்பித்தேன். என் பேத்தி பிறந்து அவளுக்குப் பத்து வயதாகும் போது நினைவு தெரிந்து அவளுக்கும் கொலு வைப்பது பிடித்திருந்தபடியால் தொடர்ந்து சிறப்பாக வைத்தேன். நான் செய்யும் கை வேலைகளை, கைவினைப் பொருட்களைப் பார்த்த என் பேத்தி இதையெல்லாம் கொலுவில் வைத்தால் பார்ப்பதற்கு அழகாகவும் இருக்கும் நிறைய பேர் வந்தும் பார்ப்பார்கள் உனக்கும் சந்தோஷமாக இருக்குமே'' என்பாள்.

அவள் ஆசைப்படி வருடா வருடம் புதிய கைவினைப் பொருட்கள், பல டிசைன்களில், பலவித பொருள்களால் உருவானவற்றை வைக்க ஆரம்பித்தேன். படிகளும் அகலமாகக் கட்டும்படி ஆயிற்று. என் மகனும், மருமகளும் கூடமாட ஒத்துழைப்பதால் ஒரு ரூம் நிறைய பொருட்களைக் கண்காட்சி போல வைத்து கலர் உல்லனில் போட்ட கார்பெட்டுகளை சுவற்றில் கட்டி வைப்பேன்.

நான் அழைத்து மஞ்சள் குங்குமம் வாங்க வருபவர்கள் அவர்களுக்குத் தெரிந்தவர்களையும் அழைத்து வர ஆரம்பித்து எங்கள் வீட்டுக் கொலுவைப் பார்க்க வராதவர்களே கிடையாது என்று சொல்லும்படி கூட்டம் வரும். பத்து நாட்களும் ஜே, ஜே என்று இருக்கும். நானே செய்த பொம்மைகள் என்பதால் பலரும் வந்து பாராட்டும் போது உற்சாகமாக இருக்கும்.

சாஸ்திரப்படி முதல் படியில் பிள்ளையாரும், ஓரிரு கடவுள் பொம்மைகளையும் வைத்து விட்டு மீதி இடம் முழுவதும் என் சுயவேலை பொம்மைகள்தான் கடந்த பத்தாண்டுகளாக. நான் செய்யும் எல்லாப் பொருள்களையும் மற்றவர்கள் ஒரே நேரத்தில் பார்க்கவும் ஒரு வாய்ப்பு கிடைக்கிறது. பொம்மைகள் உடைந்து விடுமோ, வர்ணம் அழிந்து விடுமோ என்ற பயமும் இல்லை.

## மஞ்சக்குடி இராஜகோபால சாஸ்திரிகள்

''கொலு என்றால் என்ன? பொம்மைகள் வைப்பதும், கண்டல் விநியோகம்

இம் மங்கலச்
சின்னத்திலிருந்து எழும்
நறுமணத்தை
உங்களால் உணர
முடிகிறதா ?



ஐடெக்ஸ்

# திவ்யா
## குங்குமம்

ஆம் ! தெய்வீக மணம் வீசும் திவ்யா !
பல லட்சக்கணக்கான இந்திய மங்கையரின்
நம்பிக்கைக்குகந்த குங்குமம்.
நீங்கள் விரும்பும் நிறத்தில், நீங்கள் எதிர்பார்க்கும்
வெல்வெட் பளபளப்புடன்.

உங்கள் மென்மையான சருமத்திற்கு ஏற்றது
முற்றிலும் பாதுகாப்பானது.

ஐடெக்ஸ் - 50 ஆண்டுகளுக்கு மேலாக உங்கள்
நம்பிக்கையின் மகத்தான சின்னம்.



அரவிந்த் லாபரடரீஸ், சென்னை 600 033.

Imageads 3090 Tam



சிங்காரம் சீனிவாசன்



செய்வதும் மட்டும்தான் என்று நினைப்பது தவறு. அம்பாள் சிம்மாசனத்திலே வீற்றிருக்கிறாள். அவளோடு உலகம் முழுவதும் இருக்கிறது என்பதைக் காட்டவே தெய்வ உருவங்களைக் கொண்ட பொம்மைகளோடு குயவன், குறவன், குறத்தி, செட்டியார் என்று எல்லாவித பொம்மைகளையும் வைக்கிறோம். மண் கலந்த குறையில்லாத (கை, கால் ஒடிந்து தலை ஒடிந்து இருப்பதை வைக்கக் கூடாது) பொம்மைகளை வைத்து அம்பாளை பூஜிக்க வேண்டும்.

கதம்பவனத்தில் சிந்தாமணி கிருஹத்தில், சிம்மாசனத்திலே மணி தீபமாய் அம்பாள் ஜகன் மாதா வீற்றிருக்கிறாள். அவளோடு லக்ஷ்மி, சரஸ்வதியும், அறுபத்தி நாலு கோடி யோகினி கணங்களும் சுற்றிலும் இருக்கிறார்கள். தெய்வீகமாக, தெய்வ மணத்தோடு பூஜைகள் செய்வதே நவராத்திரியாகும். கடைசி நாளன்று அம்பாள் பதினெட்டு கைகளுடன் கூடிய சொரூபமாகக் காட்சி அளிப்பதாக தேவி மஹாத்மீயம் சொல்கிறது.

நவராத்திரி கொலுவில் தெய்வாம்சமான பிம்பங்களையும் அதைப் பூஜிக்கும் பக்தர்களின் பிம்பங்களையும் வைக்கலாம். உதாரணமாக பாரதியார் காளி உபாஸகர். காந்திஜி சத்தியத்தைச் சொன்னவர். புத்தர் போன்ற மகான்களின் பிம்பங்களையும் வைக்கலாம்.

வீட்டை நவராத்திரி சமயம் அலங்கரிப்பது அவரவர் சிரத்தையையும், கலை உணர்வையும் பொறுத்தது. பொம்மைகள் வைத்தது போக மீதி இடங்களை அலங்கரிப்பதில் தவறில்லை. மண் பொம்மைகள்தான் விசேஷமானவை.

நவராத்திரியில் அம்பாளைப் பூஜை செய்வதற்கு வேறு காரணமும் சொல்வார்கள். எமதர்மராஜன் தன்னுடைய தெற்றுப் பல்லை நறநறவெனக் கடித்துக் கொண்டு தோன்றுவதால் சரத், வசந்த நவராத்திரி சமயங்களில் அம்மை போட்டுதல், காலரா போன்ற வியாதிகள் வருமாம். அம்மை, காலராவுக்குத் தடுப்பாக விளங்குவதே அம்பாள் பூஜை. ஆகவே பொம்மைக் கொலுவை விட பூஜையே நவராத்திரியில் விசேஷம் என்று சொல்லலாம்.

தொகுப்பு : பானுமதி ராமச்சந்திரன்.

★ நவராத்திரியின் போது பழனி மலை போன்று ஏதாவது ஒரு மலை செய்வதானால், இயற்கையாக புல் முளைத்தது போலச் செய்ய வே ாடியது இருக்கும். இதற்குக் கூடையைக் கவிழ்த்து அதன் மேல் மண்ணைக் கொட்டி, தண்ணீர் தெளித்து ஈரப்படுத்தி, கேப்பையை நெருக்கமாகத் தூவினால் நான்கு நாட்களில் முளைத்து, அழகாக நெருக்கமாக புல் முளைத்தது போல இருக்கும். மலையும் பார்ப்பதற்கு இயற்கையாக இருக்கும்.

- கீதா.

# தொற்கெடுத்தாலும் ஒரு டெஸ்ட்!

**பொ**துவாக இன்றைக்கு மருத்துவர்களைப் பற்றிய ஒரு பெரிய குறை மக்களிடையே இருக்கிறது. 'ஏதாவது ஒரு தலைவலி என்று போனால் கூட ஆயிரத்தெட்டு டெஸ்ட்டுகளுக்கு எழுதிக் கொடுத்து விடுகிறார்கள். ப்ளட் டெஸ்ட், யூரின் டெஸ்ட்டிலிருந்து ஆரம்பித்து ஸ்கேனிங் வரை போய் விடுகிறது' இதற்கு ஏகப்பட்ட செலவு.

டாக்டர் ரங்காச்சாரியைப் போன்றவர்களைப் பற்றியெல்லாம் பல கதைகளே உண்டு. நோயாளி நடந்து வரும்போதே இவருக்கு என்ன வியாதி என்று சொல்லி விடுவார்கள் என்றெல்லாம் சொல்வார்கள். 'இன்றைய டாக்டர்கள் பரிசோதனைக் கூடங்களை நம்பியே இருக்கிறார்கள். இவர்களே இன்ன வியாதி என்று கண்டுபிடித்து மருந்து கொடுப்பதில்லை' என்பது பொது மக்களின் பரவலான அபிப்பிராயம்.

இது எந்த அளவு உண்மை? மருத்துவர்கள் எழுதிக் கொடுத்துப் பல்வேறு பரிசோதனைகளைச் செய்யும் அந்தத் துறையை 'பெதாலஜி' என்று சொல்வார்கள். இன்றைய நவீன விஞ்ஞான உலகில் பெதாலஜி மிக அதிக அளவில் வளர்ந்து இருக்கிறது. பெதாலஜிஸ்டை ஆதாரமாகக் கொண்டுதான் இன்றைய மருத்துவர்கள் இயங்குகிறார்களா?

தமிழ்நாடு ஹாஸ்பிடலின் பெதாலஜி டிபார்ட்மெண்ட் அதிநவீன முறையில் அமைக்கப்பட்டுள்ளது. இதன் தலைமைப் பொறுப்பில் இருக்கும் திருமதி ராதி லாரன்ஸிடம் இதைப் பற்றிச் சொன்ன போது சிரித்தார் :-

''டாக்டர்கள் எங்களைச் சார்ந்து இயங்குகிறார்கள் என்று சொல்வது தவறு. டாக்டர்களுக்கு நாங்கள் துல்லியமாக நோயாளியின் வியாதியைக் கண்டுபிடித்துச் சொல்கிறோம், அவருக்கு உதவுகிறோம். அவ்வளவுதான். அதற்கு இன்றைய விஞ்ஞானம் உதவி செய்கிறது.

முன்பெல்லாம் தலைவலி என்றால் அது கண் பார்வை காரணமாக இருக்கலாமோ எனக் கண்ணாடி போட்டுப் பார்ப்பார்கள். அதற்கும் சரியாகவில்லையென்றால் மூளையில் ஏதேனும் பாதிப்போ எனப் பார்ப்பார்கள். இப்படியே போய்க் கொண்டே இருக்கும். இப்போது நாங்கள் அதை ஆராய்ச்சிக் கூடத்தில் நான்கைந்து மணி நேரங்களில், சில சமயங்களில் பத்து நிமிடங்களில் கூடக் கண்டுபிடித்து விடுகிறோம்'' என்கிறார்.



ராதி



அவருடைய உதவியாளர் திருமதி வசுந்தரா ஒரு நிகழ்ச்சியைச் சொன்னார்,

''சென்னையில் ஒரு இஞ்ஜினியருக்குத் திடீரென கண் பார்வை போய் விட்டது. பழைய காலமாக இருந்தால் 'செய்த பாவம், அதுதான்' என்பார்கள். அல்லது வேறு காரணம், சிகிச்சை எனத் தொடரும். அவரை உடனடியாகப் பரிசோதித்தோம். உடனடியாக ஆபரேஷன் தியேட்டருக்கு எடுத்துச் சென்றோம். மைக்ரோஸ்கோப் பொருத்தப் பட்ட கருவியை மூக்கின் வழியாக எடுத்துச் சென்று மூளையை அடைந்தோம். பிட்யூட்டரி சுரப்பியில் ஒரு கட்டி இருந்திருக்கிறது. அது வளர்ந்து கொண்டே வந்து பக்கத்தில் கண்ணுக்குச் செல்லும் நரம்பைத் தொட்டவுடன் இவர் பார்வை பறிபோய் விட்டது. உடனடியாக அதை வெளியே எடுத்து (அவர் ஆபரேஷன் தியேட்டரில் மயக்க நிலையிலேயே இருந்தார்) எங்களின் பரிசோதனைக் கருவியில் பார்த்து அந்த புற்றுநோய்க் கட்டியை எடுத்து விட்டோம். இவை அனைத்தும் தலைக் கபாலத்தைத் திறக்காமலேயே நடந்தது. ஆபரேஷன் முடிந்து விட்டது! அன்று மாலை அவருக்கு நினைவு திரும்பிய போது நன்றாகக் கண் பார்வை தெரிந்தது...''

இதே போல புற்றுநோய்க் கட்டி என நினைத்தது வெறும் நீர்க் கட்டி எனக் கண்டு பிடித்தது, சாதாரணமாகச் சிறிய காயம் என வந்தவருக்கு தீவிர மஞ்சள் காமாலை என அறிந்தது என நிறையச் சொன்னார்கள்.

பெதாலஜியால் நன்மையே தவிர, அது செலவு அம்சம் அல்ல என்கிறார்கள். நோய் இன்னது என்பது அறியாமல் முற்றிப் போய் ஆயிரக்கணக்கில் பணம் செலவாகி அவஸ்தைப்படுவதை விட, ஒரே நாளில் இன்ன நோய் எனத் தெரிந்து கொண்டு விடலாமே என்கிறார்கள்.

எங்கள் பரிசோதனைச் சாலையை நீங்கள் சுற்றிப் பார்த்தால் இன்னும் கூட நீங்கள் இதன் அவசியத்தைப் புரிந்து கொள்வீர்கள் என்றார் ராதி.

லேப் பெதாலஜி எனப்படும் பரிசோதனைக் கூடம் ஐந்து வகையாக உள்ளது.

## Lab Pathology

| கெமிஸ்ட்ரி | ஹிமடாலஜி | மைக்ரோபயாலஜி | யூராலஜி | இரத்த சேமிப்பு வங்கி. |
|---|---|---|---|---|
| சர்க்கரை, கொலஸ்ட்ரால் இவற்றைக் கண்டுபிடிக்கலாம். | ரத்தத்தில் இருக்கும் ஹீமோகுளோபின், அனீமியா இவற்றைக் கண்டுபிடிப்பது. | வியாதிக்குக் காரணமான நுண்கிருமிகள், சிறுநீர், ரத்தம் இவற்றைப் பரிசோதிப்பது. | சிறுநீர், மலம், அமீபியாஸிஸ் இக் கிருமிகளை ஆராய்வது | |

இவ்வைந்து பிரிவுகளிலும் இருக்கின்ற சில சிறப்பான கருவிகளைப் பற்றி இவர்கள் பேசும் போது சுவையாக இருந்தது.

இரத்தத்திலே சில மருந்துகள் அதிகமாக ஆகி விடுமானால் அதனால் மரணம் நேரலாம். சைக்ளோஸ்போரின் இது போன்றது. இந்த நோயாளிக்கு மருந்து எந்த அளவு ரத்தத்தில் இருக்கலாம் எனச் சொல்கிறது ஒரு கருவி.

ப்ளட் ஸ்கிரீனிங் செய்ய ஒரு கருவி. இது ரத்தத்தில் ஜான்டீஸ், எய்ட்ஸ், இவையெல்லாம் இருக்கின்றனவா எனப் பார்க்கிறது.

எலக்ட்ரோ ப்ராஸஸ் என்ற கருவியில் ரத்தத்தைக் கொடுத்தால் ரத்தத்திலுள்ள சிவப்பணுக்கள், வெள்ளை அணுக்கள், பிளாஸ்மா எனத் தனித் தனியாகப் பிரித்துக் கொடுத்து விடும்.

சரி, இப்படி இரத்தத்தைப் பிரிப்பதால் என்ன லாபம்? ரத்த சேமிப்பு வங்கியின் பொறுப்பாளர் பார்த்தசாரதி சொல்கிறார் -

''சாதாரணமாக ஒரு நோயாளிக்கு முழு ரத்தமுமே தேவையென்று சொல்ல முடியாது. நோயின் தன்மைக்கு ஏற்ப சிலருக்குச் சிவப்பணுக்கள் மட்டும் தேவையாக இருக்கும். தீக்காயம் பட்டவர்களுக்கு ப்ளாஸ்மா மட்டும் போதும். சிலருக்கு வெள்ளையணுக்கள் மட்டும் தேவைப்படும். ஆனால் சாதாரணமாக என்ன செய்வார்கள், ஒரு நோயாளிக்கு ரத்தம் தேவையென்றால் முழு ரத்தத்தையும் கொடுத்து விடுவார்கள். இது அவசியமில்லை. இப்படித் தனித்தனியாகப் பிரித்து முறையாகச் சேமித்து வைத்துத் தேவையானதை மட்டும் கொடுக்கலாம்'' என்கிறார். அந்த வகையில் மிக நவீன சேமிப்பு நிலையங்களில் சேமித்து வைத்துள்ள தனித்தனி ரத்த அணுக்களைக் காட்டினார்.

அங்கே ஏ பாஸிடிவ், ஏபி, ஓ பாஸிடிவ் என்றெல்லாம் போட்டிருப்பதைப் பார்த்து ஒரு சந்தேகம் வந்தது -

''ஏன் சார், ரத்தத்தில் ஏ, பி. ஓ என எப்படிக் கண்டுபிடிக்கிறீர்கள்?'' எனக் கேட்டோம்.

''ரத்தத்தின் நிறம் சிவப்பு'' எனக் கடகடவெனச் சிரிக்கிறார் பார்த்தசாரதி.

''பெரும்பாலான மிருகங்களுக்கும், மனிதர்கள் அனைவருக்கும் ரத்தம் ஒரே நிறம் தான். ஆனால் ரத்தத்திலுள்ள சிவப்பணுக்கள் உள்ளதே அதன் மேல் ஒரு கோட்டிங் ஆண்டிஜென் இருக்கும். அது எந்த வகை என்பதைப் பார்த்துத்தான் இது ஏ, இது ஓ எனப் பிரிக்கிறோம். அதே போல உடலின் சில பாகங்களிலும் வித்தியாசப்படும். அதனால்தான் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை செய்யும் போது வெறும் ரத்த குரூப் மட்டும் பார்க்காமல், மேலும் அதே வகையைச் சேர்ந்த ஆண்டிஜென்கள் சிறுநீரகப் பகுதியில் உள்ளதா எனவும் பார்க்கிறார்கள்'' என்றார். HLA Test என்று சொல்வார்கள்.

மூக்கிலிருந்து ரத்தம் வடிவதைப் பற்றியும் பேச்சு திரும்பியது. திடீரென்று சிறுவர்களுக்கும், பெரியவர்களுக்கும் மூக்கிலிருந்து ரத்தம் வடிவதற்குக் காரணம் ரத்தம் உறையும் தன்மை இல்லாமல் போவது தான். சாதாரணமாக இது நின்று விடும். பயப்பட வேண்டியதில்லை. அதிக ரத்தப் போக்கு இருந்தால் உடனடியாக மருத்துவமனையில் சேர்க்க வேண்டும் என்கிறார்கள்.

''எல்லாவற்றிற்கும் மேலாக எந்த நோயாக இருந்தாலும் அந்தக் குறிப்பிட்ட சதையை எடுத்து பயாப்ஸி செய்வோம். அதிலேதான் இந்தக் குறிப்பிட்ட காரணம் எனக் கண்டுபிடிக்க முடியும். பயாப்ஸிதான் எங்களுடைய தீர்மானமான முடிவாக இருக்கும். இதற்கு இந்த மருந்து ஒத்துக் கொள்ளும், ஒத்துக் கொள்ளாது என்று கூடச் சொல்லி விடலாம்.

முன்பு மருத்துவப் பரிசோதனைக்கு நாட்கணக்கில் ஆகும். புற்றுநோய்க்கு ஐந்து நாட்கள் ஆகும். ஐந்து நாட்களும் இது புற்று நோயா, இல்லையா என டென்ஷனாக இருக்கும். ஆனால் காலையில் இங்கே வரும் பேஷண்டிற்கு உடனடியாகப் பரிசோதனைக்குக் கொடுத்து மதியமே ரிசல்ட் சொல்லி விடுவோம். உடனடியான ஆபரேஷன் தேவையானால் அப்பொழுதே ஏற்பாடு செய்து விடுவார்கள். இல்லையென்றால் இன்ன மருந்து எனத் தீர்மானிக்கப்பட்டு மாலையில் நிம்மதியாக வீட்டுக்குப் போகலாம். அதே போல ஆபரேஷன் தியேட்டரில் நோயாளியிடம் இருந்து எடுக்கப்பட்ட டிஷ்யூவை ஃப்ரோசன் செக்ஷனில் கொடுத்து அப்பொழுதே இது என்ன எனக் கண்டுபிடித்து விடுவார்கள். இதனால் மீண்டும் ஒரு ஆபரேஷன் தேவைப்படுவதில்லை.

அமெரிக்காவில் பணிபுரிந்து விட்டு இங்கே வந்திருப்பவர் இவர். இவருடைய அயல்நாட்டு அனுபவங்களைக் கேட்ட போது -

''அங்கே மனநோய்தான் அதிகமாக இருக்கிறது. அடுத்தபடி டென்ஷன், ப்ரஷர். ஆனால் நம் நாட்டில் தொற்றுநோய் மிக அதிகம். சுத்தம், சுகாதாரம் இல்லாத காரணத்தினால் எத்தனை வகையான தொற்று வியாதிகள். வயிற்றில் அமீபியாஸிஸ் எனச் சொல்லப்படும் பூச்சி இல்லாத மனிதனே இல்லை என்று கூடச் சொல்லி விடலாம். ஆனால் நல்லவேளையாக அவர்களுக்கிருக்கும் மனநோய் இங்கு இல்லை'' என்கிறார்.

– மஞ்சுளா ரமேஷ்.



# அரசியல் கொலு

"என்னுடைய கணவருக்கு தான் எடுத்துக் கொண்ட கடமைதான் முதலில். அப்புறம்தான் மனைவி, குடும்பம் எல்லாம்'' என்கிறார் தேவகி பட்டாபிராமன்.

இந்த நவராத்திரி கொலு போலவே, சட்டசபையும் ஒரு கொலுதான். நவராத்திரியில் சக்தி முதன்மையாக இருந்து ஆட்சி செய்வது போலத்தான் சட்ட சபையிலும் முதல்வர் ஜெயலலிதா பிரதானமாக இருந்து ஆட்சி செய்து கொண்டு இருக்கிறார். எம்.எல். ஏ.க்களின் ஒருங்கிணைப்பாளராக விளங்கும் (தலைமை அரசுக் கொறடா) திரு. பட்டாபிராமன் இந்த அரசியல் கொலுவைப் பற்றிப் பேசும் போது -

''நான் அரசியலுக்கு வந்ததற்கே அம்மாதான் காரணம். ஒரு வார்த்தைக் கூட முறை தவறிப் பேசாமல், ஒரு நிகழ்ச்சியில் கூட முறைபிறழ்ந்து நடக்காமல் எங்கள் எம்.எல். ஏ.க்கள் நடந்து கொள்கிறார்கள். இவை எல்லாவற்றிற்கும் காரணம், எம்.எல். ஏ.க்கள் ஒவ்வொருவரையும் அந்த அளவிற்குக் கவனித்து அம்மா தேர்ந்தெடுத்து இருப்பதுதான். அதே போல சட்டசபை நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிக்கிறார். ஒரு அமைச்சர் பேசும் போது மூன்று வார்த்தைகளை விட்டு விட்டார். மௌனமாக அவற்றைக் கவனித்துக் கொண்டிருந்த முதல்வர் அவர் பேசி முடித்தவுடன், இன்னஇன்ன இடத்தில் இந்த இந்த வார்த்தைகளை மாண்புமிகு. அமைச்சர் விட்டு விட்டார். சபாநாயகர் இவற்றைச் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன் என்றார். நிச்சயம் நமது சட்டசபை சக்தி கொலுவிற்றிருக்கும் சபைதான்'' என்கிறார் உணர்ச்சிவசப்பட்டு.

திருமதி. தேவகி பட்டாபிராமன் மேடை, டி.வி. நாடகங்களில் நடித்துப் புகழ் பெற்றவர். மேடை நாடகங்களில் நடித்துக் கொண்டிருந்தபோதுதான் பட்டாபிராமனைப் பார்த்து விரும்பி இருவரும் கலப்புத் திருமணம் செய்து கொண்டவர்கள்.

''சென்ற வருடம் வரை நவராத்திரியைக் கோலாகலமாகக் கொண்டாடுவேன். நிறைய பொம்மைகள் வைத்திருக்கிறேன். நவராத்திரி என்றில்லை, எல்லா பண்டிகைகளையுமே என் அம்மா வீட்டு வழக்கப்படிச் செய்வேன். அவர் என் மத நம்பிக்கைகளிலே தலையிடவே மாட்டார். அவருக்கு நேரம் இருக்குமானால் உற்சாகத்தோடு கலந்து கொள்வார். இந்த வருடம்தான் என்ன செய்யப் போகிறேன் என்று தெரியவில்லை. அவர் பொறுப்பான பதவியில் இருப்பதால் முழு நேரமும் வேலையிலேயே மூழ்கி இருக்கிறார். எப்போதுமே எந்த வேலை எடுத்துக் கொண்டாலும், அதைச் சிரத்தையாக முழுமையாகச் செய்ய வேண்டும் என்பதில் ஆர்வம் உடையவர் அவர். அதனால் என்னாலான உதவிகளை அவருக்குச் செய்கிறேன்'' என்கிறார்.

இவருடைய ஒரே மகள் ஹேமாவிற்குத் தன் தந்தையைப் போல வர வேண்டும் என்பது இலட்சியமாம்.

- பவித்ரா.





# அடாது அயல்நாடு சென்றாலும் விடாது பண்டிகைகள்...

நம் நாட்டில் இருந்தவர்கள் அநேகம் பேர் வெளிநாடுகளில் சென்று குடியேறி இருக்கிறார்கள். அவர்கள் இங்கிருக்கும் பொழுது செய்து வந்த பூஜை, புனஸ்காரங் களை அங்கும் தொடர்கிறார்களா?

பல முறை பூஜை காரியங்களில் பங் கேற்கும் நிமித்தம் வெளிநாடுகள் சென்று வந்திருக்கும் திருமதி புவனேஸ்வரி சாம்ப மூர்த்தி சிவாச்சார்யார் கூறுகிறார் : - ''வெளி நாடுகளுக்குச் சென்று விடுவதால் நம் மக்க ளிடையே கலாசாரமும், பக்தியும் என்றுமே குறைந்து போகவில்லை. மேலும் பக்தி கூடி விடுகிறது என்று கூடச் சொல்ல லாம்.

காலை ஏழு மணி முதல் மாலை ஏழு மணி வரை காலில் சக்கரத்தைக் கட்டிக் கொண்டது போல் நாள் முழுவதும் பிசியாக இருப்பவர்கள் சாப்பிட மறந்தாலும் மறப் பார்களே தவிர இந்த மாதிரி பூஜைகளை விடுவதில்லை. எந்தவிதக் குறையும் இல்லா மல், கிடைக்கும் பொருட்களைக் கொண்டு, குறைவின்றி பூஜைகளைச் செய்து வருகி றார்கள்.

தினமும் காலை வேளையில் இரண்டு ரொட்டித் துண்டங்களை விழுங்கிவிட்டு அவசரத்துடன் ஓடும் பெண்களால், இரவு நேரத்தில் தான் நிம்மதியாகச் சமைத்துச் சாப்பிட முடிகிறது. அப்படி இரவு நேரத்தில் மீந்து போகும் உண்வுகளை ஃபிரிட்ஜில் வைத்து மறுநாள் உபயோகித்துக் கொள்வது வழக்கம்.

ஆனால், பூஜைக் காரியங்கள் என்று இருந்தால், பழசு, மீந்து போனவை முதலியவை பக்கமே அவர்கள் போவதில்லை.

வரலக்ஷ்மி விரதம், காரடையான் நோன்பு என்ற வழக்கமான பூஜைகள் தவிர, திருவிளக்குப் பூஜை, சுவாசினி பூஜை, தம்பதி பூஜை, பிரம்மச்சாரி பூஜை, கோ பூஜை என்று இவைகளையும் செய்து வருகிறார்கள்.

வெயில் நாட்களில் அவரவர் வீட்டிலேயே பூக்கும் பூக்களை எடுத்து வருவார்கள். ஆனால் குளிர் நாட்களில் பூக்கள் வீட்டுத் தோட்டத்தில் பூக்காத தருணத்தில் அவர்கள் ஒரு பூ, ஒரு டாலர் என்றாலும் வாங்கிக் குறைவில்லாமல் செய்கிறார்கள்.

இதையெல்லாம் பார்க்கும்பொழுது நம் பெண்கள் எங்கிருந்தாலும், பூஜை விஷயத்தில் கெட்டியாக இருக்கிறார்கள் என்றே சொல்லலாம்.

அடுத்த வருடத்தில் வரப் போகும் பண்டிகை நாட்களை, முன்கூட்டியே இங்கிருப்பவர்களுக்கு எழுதிக் கேட்டறிந்து கொண்டு விடாமல் செய்து வருகிறார்கள்.

இன்னொரு முக்கிய சமாசாரம் என்னவென்றால் ஒவ்வொரு பூஜையின் முடிவிலும் வந்தவர்கள் அனைவருக்கும் சாப்பாடு உண்டு. சாப்பிட முடியாதவர்கள் பிரசாதமாவது பெற்றுக் கொள்ளத் தவற மாட்டார்கள். மேலும் அங்கு ஆண்களும், பெண்களின் பூஜை முறை விட்டுப் போகாமல் சிறந்து விளங்கத் தங்களால் இயன்ற வேலைகளைச் செய்து கொடுக்கிறார்கள்.



பேட்டி : மாலதி சந்திரசேகரன்.

---

# இம்மாத இல்லத்தரசி

## சமையல் கூப்பன்

பொருள்: விசேஷ பட்சணம் கடைசி தேதி: 15.10.'91

____________ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# சாதா தோசை?

# நிர்லெப் தோசை!



வாருங்கள், மாதருக்கு மாதர் என்ற முறையில் என்னுடைய ரகசியத்தைப் பகிர்ந்து கொள்ளுங்கள். சுரண்டுவதை நிறுத்துங்கள். எரிந்து போவதை நிறுத்துங்கள். மேலும், பருமனை மற்றும் கொலெஸ்ட்ராலை விரும்பி அழைத்திடும் எண்ணெய்யினை ஊற்ற வேண்டாம். என்னைப் போல், சுவைமிக்க மற்றும் மொறு மொறு வென்ற நிர்லெப் தோசைகளை தவ்வாவிலிருந்து எளிதாக எடுங்கள். நிர்லெப் அளித்திடும் வசதியினை நீங்களாகவே அனுபவியுங்கள்.

நிர்லெப் உபயோகிப்பதின் மூலம், அதே எடையுள்ள வெண்ணெய்க்கு அதிக நெய் கிடைப்பதை நீங்களே கண்டு கொள்வீர்கள் — தொல்லை கொடுக்கும் எந்த வித பிசுக்கும் தவ்வாவில் ஒட்டிக் கொள்ளாது.

மேலும் என்ன, நிர்லெப் உபயோகிப்பதினால், உங்களுடைய தினசரி சமையலும் மிக எளிதாவதைக் காண்பீர்கள். அத்தியாவசியமான ஊட்டச் சத்துக்களை நிலைக்கச் செய்வதாலும் (ஏனெனில் உணவுப் பொருட்கள் எரிந்து போவதில்லை) மற்றும் கடைசியில் சுத்தப் படுத்துவது எளிதாக அமைவதாலும், இது ஒரு உண்மையான சமயலறைத் தோழன் — 20 வருடத்திற்கு மேலாக பொறுப்புடன் உங்களுடன் ஊழியம் செய்து கொண்டிருப்பவனாவான்.

*அதனால் தான் என்னுடைய குடும்பம் ஒரு நிர்லெப் குடும்பம்.*
*உங்களுடையதோ?*
*இல்லையென்றால், இதைப்பற்றி சிந்திக்கவும் மிகத்தீவிரமாக.*



# NIRLEP

## ஒரு வசதியான படைப்பு

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: பாஃப்னா மார்க்கெட்டிங், சென்னை: தொ. பேசி: 588394 ஏ.ஜி.எ. (எர்ணாகுளம்), கொச்சி. தொ. பேசி: 354785 மஹாவீர் டிரேட் லிங்க்ஸ், ஹைதராபாத். தொ. பேசி: 231196, 231747 மஹாவீர் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ், பெங்களூர். தொ. பேசி: 600650 ஆர்யன் டிரேடர்ஸ், பம்பாய். தொ. பேசி: 4141176, 4141430.

SUNIL

# துர்கா பூஜையும்,

கல்கத்தாவில் துர்கா பூஜா - நவராத்திரி வருகிறது என்றாலே மக்களுக்குக் கொண்டாட்டம்தான். புதுப் புடவைகள், துணி மணிகள், புதுச் செருப்பு என்று வாங்குவதோடு மட்டுமல்லாமல் வீட்டையே மிக அழகாக அலங்கரித்து, மகளிர், ஆடவர், சிறியவர், பெரியவர், ஏழை, பணக்காரன் என்று வித்தியாசமில்லாமல் அனைவருமே தங்களை அழகுபடுத்திக் கொண்டு விருந்தினர்களை உபசரிப்பதில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு மகிழ்வார்கள். இதில் தனி உற்சாகமும், மனதில் துள்ளலும் இருப்பதைக் கண்கூடாகக் காணலாம்.

இந்தியாவின் மற்ற பகுதிகளில் நவராத்திரி கொண்டாடுவதில் பக்தி சிரத்தை காணலாம். கல்கத்தாவிலோ அவற்றோடு கூட ஒரு தனி உற்சாகமும், குஷியும், மனத் துள்ளலும் அதிகம்தான். வருடா வருடம் துர்க்கா பூஜா சமயத்தில் செலவழிப்பதற்காகவே வருடம் பூராவும் உழைத்துப் பணம் சம்பாதித்துச் சேர்த்து வைக்கிறார்கள். நவராத்திரிக்கு இரண்டு மாதங்கள் முன்பிருந்தே கல்கத்தா முழுவதிலும் உள்ள பெரிய பெரிய மார்க்கெட்டுகளை நாள் முழுக்க திறந்து வைத்து, வண்ண விளக்குகளில், கடைத் தெருவே பளபளத்து மக்கள் மனதில் ஒரு தனி உற்சாகத்தை ஊட்டுகிறது.



நவீன வடிவம்

சொல்லப் போனால் கல்கத்தா மாநகரமே தனிக் களை கட்டி விடுகிறது. மஹாளய அமாவாசை தினத்திலிருந்து நவராத்திரி ஆரம்பம். அன்று விடியற் காலையில் ஜனங்கள் திரள் திரளாக ஹுக்ளி எனப்படும் கங்கையில் ஸ்நானம் செய்யவும், பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்யவும் சென்று விடுவார்கள். காலை 4.30 லிருந்து ரேடியோவில் 'தேவி மஹாத்மியம்' பல பெரிய பாடகர்களாலும், பண்டிதர்களாலும் இனிமையான குரலில் பாடப் பெறும்.

சஷ்டியன்று துர்க்காதேவியின் சிலை மிகப் பெரிய அலங்காரப் பந்தலுக்குள் வந்து விடும். மகா சப்தமி, மஹா அஷ்டமி, மஹா நவமி என்று மற்றைய தினங்களை மிகவும் பக்தியோடு குறிப்பிடுகிறார்கள்.

துர்க்கையின் அழகும், கம்பீரமும், தெய்வீகத் தன்மையும் மனதைக் கொள்ளை கொள்ளும். மஹிஷாசுரனின் முகத்தில் காணப்படும் கொடூரமோ கேட்க வேண்டாம். கீழே விழுந்த எருமை மேல் அவன் பாதி விழுந்ததும், எழுந்ததுமாக நின்ற தோற்றமும் மகிஷன் தேவியைக் கொல்ல நிற்கும் தோற்றமும் சகல ஆயுதங்களுடன் கூடியவளான தேவி தன் கண்களில் புன்னகையும், கோபமும் கூடிய ஒருவித அபூர்வமான பாவனை கூடியவளாக சூலத்தை மகிஷனின் மார்பில் பதிய வைத்தபடி நிற்கும் தோற்றமும், காண்போரை மெய்சிலிர்க்க வைக்கும்.

அடர்ந்த பிடரியுடன் கூடிய சிங்கம் அட்டகாசமாக எருமையைத் தாக்குவதும் உள்ளத்தில் ஒருவிதமான பயப்பீதியைத் தோற்றுவிக்கும். விநாயகர், கார்த்திகேயர், லட்சுமி, ஸரஸ்வதி முதலிய தேவதா பரிவாரங்களுடன் துர்க்கா தேவி கல்கத்தாவிற்கு அருகிலுள்ள 'குமார்துலி' என்ற இடத்தில் கங்கைக் கரையில் அபூர்வமான கலைச் சிற்பிகளின் கைகளின் உருவாகிறாள்.

ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர்

# குமார்துலியும்

மூன்றும் நல்ல மழைக்காலம். கங்கை பயங்கரத் தோற்றத்துடன், ஆழம் நிறைந்தவளாக, அட்டகாசமாக, தட்சிணேஸ்வரத்தில் நேரே ஓடி வந்தவள் துர்க்கை தன் பரிவாரங்களுடன் தெய்வச் சிலையாக உருவாகும் இடமான குமார்துலியில் சற்றே வளைந்து, பணிந்து அடக்கமாக, தன் காதல் கணவனான சமுத்திர ராஜனை நோக்கி ஓடுகிறாள்.

நானூறு வருடங்களுக்கு மேலாக 200 சிற்பிகள் 'குமார்தூலி'யில் துர்க்கை, காளி, லட்சுமி, விநாயகர், ஸரஸ்வதி, கார்த்திகேயர் சிலைகள் செய்வதில் கைதேர்ந்தவளாக ஈடுபட்டிருக்கிறார்கள். குமார்துலியில் 150 இடங்களில் சிலைகள் செய்யப்படுகின்றன.

வைக்கோல், இரும்புக் கம்பிகள், ஆணிகள் இவற்றின் உதவியால் மூலச் சிலையை செய்து கொண்டு, பின்னர் கங்கையில் கிடைக்கும் ஒருவிதமான மண் (கங்கா மாட்டி) மேதினிபூரில் கங்கைக் கரையில் கிடைக்கும் 'ஒட்டில்' மாட்டி (மண்) என்ற ஒருவித் கறுப்பு மண் இரண்டும் கலந்து இந்த மூல வைக்கோல் சிலைகளுக்கு மேல் அப்பி மெள்ள மெள்ள வழித்து விட்டு உருவச் சிலைகளை செய்கிறார்கள்.

வழித்து உருவகப்படுத்தின சிலைகளின் தோற்றம் மிகக் கம்பீரமாக எழிலுடன் இருக்கின்றன. முகம் மட்டும் பிளாஸ்டர் ஆஃப் பாரிஸில் விதவிதமாக அச்சு செய்து வைத்துக் கொண்டு மிக அழகாக தயாரிக்கிறார்கள். தேவியின் முகம் கைகள், கால் முதலியவற்றை ஆயில் பெயிண்ட் கொண்டும், அலங்கார வளைவுகளை ஆயில் பெயிண்ட், வாட்டர் கலர் கொண்டும் அழகுபடுத்துகிறார்கள்.

தேவிக்குப் புடவை, ரவிக்கை இரண்டையும் ஸாட்டின் என்னும் வழ வழப்பான துணியில்தான் தைக்கிறார்கள். நகைகள் பூராவும், ஜரிகை, சம்கி, மணி, நெட்டி முதலியவைகளால் கிருஷ்ணா நகரில் தனியாகத் தயாராகிறது. இதற்குச் சிலையின் அலங்காரத்திற்குத் தகுந்தாற் போல ரூ 2000-த்திலிருந்து ரூ 6000 வரை செலவாகிறது. அங்கிருந்து வாங்கி தேவிக்கு அணிவிக்கிறார்கள். அரிவாள், மணி, கத்தி, கேடயம், சூலம் போன்றவை சாதாரணமாக தகரத்தினால் ஆனதுதான். வசதியுள்ளவர்கள் பித்தளையில் வாங்கி அணிவித்து விட்டு, தேவியின் சிலையைக் கங்கையில் போடு முன் பித்தளை ஆயுதங்களை



மரபு வழி வடிவம்

வீட்டிலேயே வைத்துக் கொண்டு, தகர ஆயுதங்களை அணிவித்துப் போட்டு விடுவார்கள்.

தலைமுடிக்குத் தேங்காய் நார் போன்ற கறுப்புப் பொருளை முதலில் தலையில் வைத்துப் பின்னர் அதன் மேல் நைலான் கறுப்புத் தலை முடியை வைத்து அழகுபடுத்துவார்கள். முகமதியர்களால் அம்தா என்கிற இடத்தில் இது செய்யப்பட்டு குமார்துலிக்கு அனுப்பப்படுகிறது.

நாம் 'குமார்துலி'யில் கண்ட மண் சிலைக்கும் பின்னர் மிக அழகாக, முழுமையாக அலங்காரம் செய்யப்பட்ட சிலைக்கும் மிக மிக வித்யாசம் இருக்கிறது. ஒரு சிலை செய்ய ஒன்றரை மாதம் ஆகிறது.

ஒரு சிலை செய்ய ஆயிரம் ரூபாயிலிருந்து 30,000, 40,000 ரூபாய் வரை செலவு ஆகிறது. சிலை செய்ய தனியாக எந்த குருகுல பாடமும் இல்லாமல், பரம்பரைத் தொழிலாகச் செய்யப்படுகிறது. தந்தையிடமிருந்து மகன் என்று வழிவழியாக நானூறு வருடங்களாகச் செய்து கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள்.

முன்பு ஒரு பெரிய தலைவரின் கீழ் நிறைய தொழிலாளிகள் ஒரு நாளைக்குப் பதினாறு மணி நேரம் வேலை செய்தார்கள். தற்போது பல தலைவர்களும் தோன்றி யூனியனும் அமைத்துக் கொண்டு விட்டதனால், தொழிலாளர் ஆபீஸ் ஊழியர்கள் போன்று கிருஷ்ணா நகர், சோத்பூர், மேதனிபூர், நவத்வீப் போன்ற தொலைவு இடங்களிலிருந்து, பஸ்ஸில், படகுகளில், லாஞ்ச்சில், ரயிலில் காலை 9 மணிக்கு வந்து மாலை 5 மணிக்கு வீடு திரும்புகிறார்கள். முன்பு இருந்த பெரிய தலைவர் தொழிலாளர்களுக்கு உணவு, உடை அளித்து குடும்பங்களைக் காப்பாற்றி வந்தார். தற்போது குறைந்த நேர வேலையினால் தங்கள் தங்கள் குடும்பங்களைத் தாங்களே கவனித்துக் கொள்கிறார்கள்.

முன்பெல்லாம் சிலைகள் செய்வது குறைவு. போன வருடம் கல்கத்தா நகரத்தில் மட்டுமே 1200 சிலைகள் அலங்கரிக்கப்பட்டன. இது தவிர வெளிநாடுகள், டில்லி, பம்பாய் வாழும் வங்காளிகளுக்காகத் துர்க்கா பூஜாவுக்குச் சிலைகள் குமார்துலியிலிருந்தே அனுப்பப்படுகின்றன.




நாங்கள் சந்தித்த சிற்பி 30 சிலைகளுக்கு இந்த வருடம் ஆர்டர் கிடைத்திருப்பதாகச் சொன்னார். துர்க்கா பூஜாவிற்குப் பின்வரும் காளி பூஜா (தீபாவளி) சிலை, லட்சுமி சிலை, ஜனவரியில் வரும் ஸரஸ்வதி பூஜா சிலை என்று வரிசையாக ஆர்டர் கிடைத்துக் கொண்டேயிருப்பதால், குமார்துலியில் வருடம் பூராவும் மண் சிலைகள் செய்யும் தொழில் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கிறது. ஆனாலும் இலாபம் அதிகம் இல்லாததால் தந்தைக்குப் பின் தனயன் ஈடுபடுவது என்பது சிறிது சிறிதாகக் குறைந்து வருகிறது.

ஒரு சிலை செய்ய இரண்டு கை வண்டி கங்கை மண்ணும், ஒரு கை வண்டி ஒட்டில் மண்ணும் தேவைப்படுகிறது.

கல்கத்தா மாநகரம் பூராவிலும் உள்ள பல அமைப்புக்கள் கீழ் இந்தத் துர்க்கா பூஜா பந்தல்கள் அமைக்கிறார்கள். இவற்றுள் யாருடைய பந்தல் - சிலை, பொது: அமைப்பு, வண்ண விளக்குகளின் அலங்காரம் இவை மிக மிக அழகாக இருக்கிறதோ அந்த அமைப்பின் நிர்வாகத்தினருக்குப் பரிசு, தனியாகச் சிற்பிக்குப் பரிசு, நற்சாட்சிப் பத்திரங்கள், ரொக்கப் பணம் இவை ஒவ்வொரு வருடமும் வங்காள அரசு வழங்குகிறது.

இதனால் சிலைகளை அழகுபடுத்துவதில் அலங்கரிப்பதில் ஒரு தனி உற்சாகம், போட்டி இருக்கிறது. இளைஞர்கள் சஷ்டியன்று அல்லது பஞ்சமியன்று இரவே லாரிகளில், டெம்போக்களில் 'குமார்துலி' சென்று சிலைகளைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வந்து, பந்தலில் உரிய இடத்தில் வைக்கிறார்கள்.

தென்னகத்தில் உள்ளது போல தனித் தனி பூஜையாக வீடுகளில் மட்டும் செய்யாமல், இங்கே கம்யூனிட்டி பூஜாவாக இருப்பதால் எல்லோரிடமிருந்தும் பணம் வசூலித்து, ஒருவருக்கொருவர் தோள் கொடுத்து, உதவி செய்து, ஒற்றுமையாகச் செயல்பட்டு, பூஜை நடத்துகிறார்கள். இதனால், விரோத மனப்பான்மை மறைந்து நட்பு வளர வழிவகுக்கிறது. ஒரு சமயம் ஒரு கோணத்திலிருந்து பார்த்தால் துர்க்கா பூஜாவையே, தேவியையே ஆதாரமாகக் கொண்டு வங்காளத்தில் வாழ்க்கை நடக்கிறது எனலாம்.

சிறியவர், பெரியவர் பாராத எல்லா நிலையிலுள்ள மக்களும் பங்கு பெறுகிறார்கள்.

– புவனா நடராஜன்.

# காலத்தை வெல்லும் காளியின் திறன்

எதனையும் மாற்றாது...

காலையோ, மாலையோ எந்நேரமானாலும் எல்லா உணவுமே நொடியில் தயார் — காளியின் உதவியால்.

காளி காப்பர்-பாட்டம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சமையல் பாத்திரம் —

- எலெக்ட்ரோ பாலிஷிங் முறையை கையாண்டு உலகத்தரம் வாய்ந்த விஞ்ஞான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப்பட்டது.
- குறைந்த நேரம், எரிபொருள் சிக்கனம், அத்துடன் சுவை நிறைந்த சத்தான உணவு.
- சிறந்த தரமான பொருட்களுக்கான இந்திய அரசின் தேசிய விருதினைப் பெற்றது.
- உயர்தர, கனமான சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் ஆனது.

சாஸ்பான் / கடாய் / தோசைக்கல் / ஸ்டீம் குக்கர் / 200)

காளி—என்றும், எப்பொழுதும் உங்கள் இணைபிரியா துணை.



ஐ.எஸ்.ஐ. முத்திரையுடன் கூடிய ஒரே பிராண்ட்.

**காளி** kali kali

**காப்பர்-பாட்டம்**

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சமையல் பாத்திரம்.

விற்பனை ஏஜெண்ட் : ஸ்ரீவித்யா ஏஜென்ஸீஸ், கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136. சில்லறை விற்பனை நிலையம்: ஸ்ரீ எம்.வி.எம். ஸ்டோர்ஸ் (காளி பிராண்ட்), கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136. வட்டார ஏஜெண்ட்: சம்மு & கம்பெனி, த.பெ. எண்: 3622, M.G. ரோடு, எர்ணாகுளம், கொச்சி 682 035. போன்: 361139.

Imageads 3161

# குழந்தைகளுக்கு விஞ்ஞானத்தில் நல்ல பயிற்சிக்கான,முதற்பாடம்





18.56% வட்டி பெறுங்கள்!*



# இப்போது நீங்கள் கூடுதல் வட்டி பெறலாம் — பாதுகாப்புடன்... நம்பிக்கையுடன்!

இப்போது கூடுதலாக 1% வட்டி பெற்று உங்கள் டெபாசிட் KVB-யில் வளர்கிறது. டெபாசிட் வைத்திருக்கும் காலத்தைப் பொறுத்து 13% வரை வட்டி பெறலாம்.

| டெபாசிட் காலம் | வட்டி விகிதம் (4.7.91 முதல் அமலில் உள்ளது) |
|---|---|
| 46 நாட்கள் முதல் 1 ஆண்டுக்கும் குறைவாக | 9% |
| 1 ஆண்டு முதல் 2 ஆண்டுகளுக்கும் குறைவாக | 10% |
| 2 ஆண்டுகள் முதல் 3 ஆண்டுகளுக்கும் குறைவாக | 11% |
| 3 ஆண்டுகளும் அதற்கு மேலும் | 13% |

* KVB-யின் திருமகள் திருமணத் திட்டத்தின் கீழ் நீங்கள் முதலீடு செய்யும் தொகை இப்போது 5½ ஆண்டுகளில் இரட்டிப்பு ஆகிறது. (ஆண்டுக்கு 13% என்னும் விகிதத்தில் காலாண்டுக்கு ஒரு முறை கூட்டு வட்டியாகக் கணக்கிடப்படும். மொத்த வருவாய் 18.56% ஆகும்)

சற்றே சிந்தியுங்கள்! KVB-யின் திருமகள் திருமணத் திட்டத்தில் புதிய ஒரு 'டர்ம் டெபாசிட்' கணக்கை துவக்க இதுவல்லவோ சிறந்த தருணம்!

ஓய்வு பெற்ற நபர்களும்/பென்ஷன்தாரர்களும் தங்கள் ஆயுட்கால சேமிப்புக்கு மிக அதிக வருவாய் பெற இது ஓர் அரிய வாய்ப்பாகும்!

விரைந்திடுவீர்! எங்களது 156 கிளைகளில் ஏதேனுமொன்றிலிருந்து முழு விவரங்களையும் கேட்டறிவீர்!



## கரூர் வைஸ்யா பாங்க்

கரூர் - 639 002.

KVB-கனவுகளை நனவாக்கிய 75 ஆண்டுகள்.

B. பாஸ்கரன்
சேர்மன்

Anugrah 686/91 T

''நவராத்திரின்னா என்ன, சாதாரண நாளிலே, கமார் மேக்கப்போட பிரண்ட்ஸ் வீட்டுக்குப் போயி அரட்டை அடிப்பீங்க. இப்போ அழைப்பு அனுப்பி, பட்டுப்புடை வையைக் கட்டிக்கிட்டு வம்படிக்கிறீங்க. இதுக்குப் போயி ஏன் இப்படி அலட்டிக் கிறே?''

''சொல்ல மாட்டீங்களா, வீட்டு வேலையையும் கவனிச்சுக்கிட்டு, காலை யிலே அம்பாளுக்கு நைவேத்தியம் பண்ண ணும், மத்யானம் சுண்டல் பண்ணணும் வீட்டைச் சுத்தம் பண்ணணும், காயத்ரிக்கு ஏதாவது வேஷம் போடணும், நான் டிரஸ் பண்ணிக்கணும், வரவங்களை சாயந்திரம் கவனிக்கணும், அழைத்தவங்க வீட்டுக்குப் போகணும், இதிலே, ஒண்ணு குறையாம உங்களுக்கு ராத்திரி சமையல் வேற செய்யணும். ஒரு நாள் இந்தமாதிரி செஞ்சு பாருங்க. அப்பப் புரியும் நான் சொல்லறது உண்மையா பொய்யான்னு.''



கடைசி வரியைப் பேசியவாறே என் பிரெண்ட் உமாவும் அவள் கணவர் திரு நடராஜ""ம் பக்கத்து அறையிலிருந்து கொலு வைத்திருந்த ஹாலுக்குள் நுழைந்தார்கள். அப்பொழுதுதான் உள்ளே நுழைந்திருந்த என்னைக் கண்டதும் உமா சமாளித்தாள்.

''கேட்டீங்களா இவர் சொல்றதை? நாளைக்கு சரஸ்வதி பூஜை. இவருக்கு ஆபீஸ் லீவ்தான். தைரியமிருந்தா நாளைக்கு ஒரு நாள் இவர் கொலுவைக் கவனிக்கட்டும்'' என்றாள். நானும் அதை ஆமோதிக்கவே, திரு நடராஜ் மறுநாள் கொலு சம்பந்தமான வேலைகளை கவனித்துக் கொள்வதாக சவால் விட்டார். ஒரே ஒரு கண்டிஷன். கொலுவிற்கு அவர் பிரண்ட்ஸ் தான் வரவேண்டும். உமாவின் பிரண்ட்ஸ் வரக் கூடாது. உமா மகிழ்வுடன் ஒத்துக் கொண் டாள்.

பிற்பகல் மணி இரண்டு. உமா நடராஜை உலுக்கி எழுப்பினாள்.

''காலையிலேதான் சாமிக்குப் பெருக்கு வாழைப்பழத்தை வைத்து நைவேத்தியம் பண்ணிட்டீங்க. எழுந்து சுண்டலை வேக வையுங்க.''

''ஐயையோ, நான் கடலையை ஊறப் போடவே இல்லையே!'' நடராஜ் கையை உதற, உமா ஒரு ஏளனச் சிரிப்பு சிந்தினாள்.

# கொலுவுக்கு வாங்க சார்!



''போனால் போகிறது. வெள்ளை கொத்துக்கடலைதான். அரைமணியில் ஊறி விடும். தண்ணீரில் கடலையை ஊறப் போட்டு விட்டு கொலுவிற்கு முன்னால் ரங்கோலிக் கோலம் போடுங்கள்.''

நடராஜ் தலையைச் சொரிந்து கொண்டு பெரிய ஸ்கேல், சாக்பீஸ், கலர்ப் பொடி சகிதம் கொலுப்படிமுன் அமர, ரகசியமாக மகள் அம்மாவின் கோல நோட்டிலிருந்து ஸிம்பிள் கோலம் ஒன்றை அப்பாவிற்கு வரைந்து கொடுக்கக் கொஞ்சம் கலர் கோலத்திலும் நிறைய கலர் முகம், பனியன், வேஷ்டியிலுமாக ஒரு வழியாகக் கோலத் தைப் போட்டு முடித்தார்.

''கண்டலை குக்கரில் வேகவையுங்க'' உமாகட்டளையிட்டாள். ஒருமுறைப்புடன் வேக வைத்து பிறகு வாணலியில் போட்டுத் தாளித்தார். கையில் அமுக்கிப் பார்த்தால் கடலை வேகவேயில்லை. நடராஜ் முகம் தொங்கி விட்டது. உப்புப் போதுமா என்று நைவேத்தியம் பண்ணும் முன்பு வாயில் வேறு போட்டுப் பார்த்துவிட்டார்.

''நான் போய் என் பிரெண்ட்ஸ் எல்லோ ரையும் அழைக்கணும். டிரஸ் பண்ணிக்கப் போறேன்.''

''அப்பா எனக்கு வேஷம்?'' சின்னவன் கார்த்திக் வந்து நின்றதும் சர்க்கரை போடாத லெமன் ஜூஸ் குடித்தமாதிரி ஆகிவிட்டது நடராஜ் முகம். உமா வேறு வாயைப் பொத்திக் கொண்டு சிரித்தாள்.

''நீதான் கிளப்பிவிட்டதா?'' என்று அவளைப் பார்த்து கோபமாகக் கேட்டு விட்டு, சட்டென்று சபதம் நினைவு வர சமாளித்துக் கொண்டார்.

''வாடா கண்ணா உனக்குப் பாரதியார்



# ஸெரிலாக்

## நாள் முழுவதும் அருந்திட சமநிலைச் சத்துணவு.

# மெனு

உங்கள் குழந்தைக்கு எப்போதும் ஸெரிலாக் வீட் உணவின் நற்பலன்களை அளித்து வருகிறீர்கள். ஆனால் இப்போது உங்கள் குழந்தைக்கு 6 மாதங்களாகிவிட்டதால், குழந்தை உணவில் புதிய சுவைகளை அறிமுகப்படுத்த இதுவே ஏற்ற பருவம். ருசிமிகுந்த, ஊட்டச் சத்துக்கள் சமநிலையிலுள்ள ஸெரிலாக் உணவு வகைகளான-ஸெரிலாக் வீட்-ஆரஞ்சு, ஸெரிலாக் வீட்-வெஜிடபிள், ஸெரிலாக் வீட்-ஆப்பிள் -ஒவ்வொன்றும் உடல் வளர்ச்சிக்கு வேண்டிய முக்கிய ஊட்டச் சத்துக்களும், தாதுப் பொருட்களும், வைட்டமின்களும் சரியான சமநிலையில் கலந்த முழுமையான உணவு. உங்கள் குழந்தைக்கு பரவசமூட்டும் சுவைகளை வகைவகையாக அளிக்கும் ஏற்றதொரு மெனு. இரண்டு வயது வரையிலும், அதற்கு அப்புறமும் தொடர்ந்து தரக்கூடிய மெனு.

### உதயவேளை உற்சாகத்திற்கு

காலைச் சிற்றுண்டிக்கு, ஸெரிலாக் வீட்-ஆரஞ்சின் பழச் சுவை நற்பலன்களை உங்கள் குழந்தைக்கு கொடுக்கலாம். பொறுக்கி எடுக்கப்பட்ட ஆரஞ்சுச் சுவைகளை, கோதுமை மற்றும் பாலுடன் கலந்து சிறப்பாகத் தயாரிக்கப்பட்டது. உங்கள் குழந்தையின் நாள் சுறுசுறுப்பாகத் தொடங்கிட உதவும் முழுமையான உணவு.




### மதிய உணவின் மணநிறைவு

மதிய உணவின்போது மற்ற எல்லாரையும் போல, உங்கள் குழந்தைக்குக் காய்கறிகள் தேவை. பசுமையான கேரட்டுகள் மற்றும் தக்காளியின் நற்பலன்களை கோதுமை மற்றும் பாலுடன் கலந்த ஸெரிலாக் வீட்- வெஜிடபிள், உங்கள் குழந்தைக்குக் கிடைப்பதோ திருப்தியான மதிய உணவு.




### அந்திவேளை ஆனந்தம்

நாள்முழுக்க விளையாடிக் களைத்த குழந்தைக்கு அந்தி வந்ததும் அருமையான விருந்து தேவை. சற்றே வித்தியாசமான உணவு கிடைத்தால் குழந்தைக்குப் பரவசமாகும். இருக்கவே இருக்கிறது ஸெரிலாக் வீட்-ஆப்பிள். ஆப்பிள் பழங்கள், பால் மற்றும் கோதுமையுடன் கலந்த அற்புதச் சுவை. உங்கள் குழந்தைக்கு வித்தியாசமான விருந்து




பேக்குகளின் மீதுள்ள குறிப்புகளைப் பின்பற்றுக
ஸெரிலாக்கின் தரமான தயாரிப்புகள்.



## உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்-ஒவ்வொரு வேளை உணவிலும்

வேஷம் போடுகிறேன்.'' (சமீபத்தில் பள்ளி மாறுவேடப் போட்டிக்காக போட்ட வேஷம். டிரஸ் கைவசம் ரெடியாக இருந்த தைரியம்).

''போப்பா, எனக்குக் கிருஷ்ணன் வேஷம்தான் வேண்டும்.''

கார்த்திக் அழ ஆரம்பித்தால் ஏற்படும் பிரளய சூழ்நிலையை நன்கு உணர்ந்த உமா போனால் போகிறது என்று கூடமாட உதவி னாள். ஒரு வழியாக ஐந்து மணிக்கு அப்பா வும் மகனும் கொலுவிற்கு அழைக்கக் கிளம்பினார்கள்.

தெருவில் இருந்த வீடுகளில் உள்ள இவர் நண்பர்களில் சிலர் இந்த வேடிக் கையில் ஆர்வமாகக் கலந்து கொண்டனர். சிலர் தம் பையன்களை அனுப்புவதாகக் கூறினர். பெண்களிடையே லேசான சல சலப்பு. அட, இப்படிக் கூட ஆண்களை வேலை வாங்கலாமே என்று மனசுக்குள் கணக்குப் பண்ணிக் கொண்டனர். ''என்ன சார், எங்களுக்கு அழைப்பு இல்லையா?'' என்று ஒரிரு கல்லூரி மாணவிகளின் கிண்டல் வேறு!

ஒரு வழியாக அழைத்து முடித்து வீடு வந்ததும், ''சீக்கிரம் தட்டில் வெத்தலை, பாக்கு, சந்தனம், குங்குமம் எல்லாம் எடுத்து வையுங்க. எல்லோரும் வர ஆரம்பித்து விடு வாங்க'' உமா துரிதப்படுத்த நடராஜ் செய லில் இறங்கினார். தன் சபதத்தில் முக்கால் பங்கு தாண்டிய சந்தோஷம் இருந்தாலும் முகத்தில் களைப்பும் கூடவே எட்டிப் பார்த்தது. தான் பிற்பகல் முதல் காப்பி, டிபன் சாப்பிடவில்லை என்பதை வயிறு அவருக்கு நினைவூட்டியது. சபத வெறியில் அதை அலட்சியப்படுத்தினார்.

ஒவ்வொருவராக வரத்துவங்கினர். ஜோதிநாதன், மூர்த்தி, சிவசந்தர் ஆகியோர் முதலில் வந்தனர். பஞ்சாபகேசன் தன் மகன் ரவியை அனுப்பியிருந்தார். சும்மா சொல்லக்கூடாது. ஆண்களும் படு அமர்க் களமாக டிரஸ் செய்து கொண்டு வந்தி ருந்தனர்.

சிறிது நேரம் நடராஜ் எப்படிப் படி களை தான் கட்டிக் கொடுத்தார், ஸீரியல் லேம்ப் கனெக்ஷன் கொடுத்தார், வடபழனி மலையுடன் கூடிய பார்க் எப்படி அமைத்தார் என்று பெருமை பொங்கக் கூறிக் கொண்டிருந்தார். பெட்ரூம் வாசல் பக்கம் வந்ததும் உமா மறைவிலிருந்து தாழ்வான குரலில், ''சுயபுராணம் போதும். ஏதாவது பாட்டு கிட்டு உண்டா?'' என்று எச்சரித்தாள்.

''என்ன சிவசந்தர் நீங்க நல்லா பாடு வீங்களே, தினம் ஆபீஸ் போறப்ப உங்க குரல் கேக்குமே?'' என்று நடராஜ் ஆரம் பிக்க, ஆயிரம் பிகு செய்து கொண்டு ஒரு பாரதி பாடல் சக்தி மீது பாடுவதாக ஒத்துக் கொண்டார். மற்றவர்கள் ஏக எதிர் பார்ப்புக்களுடன் காத்திருக்க,

''ஓம் சக்தி சக்தி சக்தி என்று சொல்லு - கெட்ட

டால்டா, நெய், எண்ணெய், எது வுமே இல்லாமல் மல்லிகையை நாணச் செய்யும், பூப் போன்ற சப்பாத்தி- ருசி யான, கொழுப்பில்லாத சப்பாத்தியைத் தயாரிக்க முடியுமா? முடியும்!

ஆறு சப்பாத்தி தயாரிக்க வேண்டிய கோதுமை மாவில், ஒரு கரண்டி இளந் தோச்சல் (புளிப்பற்ற தயிர்) விட்டு, சிறிது உப்பையும் போட்டு, நன்கு பிசை யுங்கள். ரொம்ப இறுக்கமாக இருந்தால் சிறிது தண்ணீர் சேர்த்துக் கொள ளுங்கள். மாவு ஊற வேண்டுமென்ற அவசியமே இல்லை. உடனே சப்பாத்தி செய்யலாம்.

- திருமதி. தேவனாதன்.



ஆடி வெள்ளிக் கிழமை, தை வெள்ளிக் கிழமை, நவராத்திரி போன்ற சுபதினங்களில் சுமங்கலிகளுக்கு. வெற்றிலை, பாக்கு. தேங்காய், மஞ்சள், கண்ணாடி, சீப்பு, குங்கு மம், (சிமிழ்) எல்லாம் கொடுக்கும் வழக்கம் உள்ளது. இப்பொழுது பெரும் பகுதி பெண்மணிகள் 'ஸ்டிக்கர்' பொட்டு வைத்துக் கொள்கிறார்கள். மேலே சொன்ன பொருட்க ளுடன் ஒரு சிறிய சோப், ஸ்டிக்கர் பொட்டு, வளையல் எல்லாம் வைத்துக் கொடுங்கள். முடிந்தால் ஒரு சிறிய ஷாம்பு பாக்கெட்டும் வைக்கலாமே? உபயோகமாய் இருக்கும். கால் விரல்களுக்குப் புதுமையான மெட்டிகள் வருகிறது. அவற்றையும் கொடுக்கலாம்.

- விசாலம் நாராயணசாமி.



# ரீகல்

சொட்டு நீலம்
வழங்கும்
1001 பரிசுகள்

**வெள்ளி விழா போட்டி**

ரீகல் சொட்டு நீலம் தயாரிப்பாளர்கள் உங்கள் ஆதரவினால் இப்பொழுது வெள்ளி விழா காண்கிறார்கள். இந்நன்நிகழ்ச்சியையொட்டி உங்களுக்கு வருகிறது
ரீகல் சொட்டு நீலம் வெள்ளி விழா போட்டி !

| | |
|---|---|
| முதல் பரிசு | : ஒரு 5 பவுன் தங்க நெக்லஸ் |
| இரண்டாவது பரிசு | : ஒரு கலர் டி.வி. |
| மூன்றாவது பரிசு | : ஒரு ப்ரிட்ஜ் |
| நான்காவது பரிசு | : ஒரு வாஷிங் மெஷின் |
| ஐந்தாவது பரிசு | : மூன்று வெட்கிரைண்டர்கள் |
| ஆறாவது பரிசு | : நான்கு மிக்ஸிகள் |
| ஏழாவது பரிசு | : 990 நபருக்கு தலா 10 கிராம் எடையுள்ள வெள்ளி காசுகள் |

## போட்டியின் விவரங்கள்

1. டி.வி.யில் வரும் 'சொட்டு நீலம் டோய்...' விளம்பரப்படத்தில் மிகச் சிறந்த நான்கு காட்சிகளை குறிப்பிடுக.
2. இரண்டாவதாக பின் வரும் வாக்கியத்தை மொத்தம் 25 வார்த்தைகளுக்கு மிகாமல் பூர்த்தி செய்யுங்கள்
'நான் ரீகல் சொட்டு நீலம் உபயோகிப்பது ஏனென்றால் .......'

இந்த இரண்டு கேள்விகளுக்கும் விடைகளை ஒரு போஸ்ட் கவரில் எழுதி கீழ்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள். கவரில் ''ரீகல் சொட்டு நீலம் வெள்ளி விழா போட்டி'' என்று குறிப்பிட வேண்டும். மறக்காமல் உங்கள் விலாசத்தையும் எழுதுங்கள்.

**நிபந்தனைகள் :**

எங்கள் நான்கு அளவுகளில் உள்ள ஏதேனும் ஒரு பாட்டிலில் உள்ள ஒரு ரீகல் சொட்டு நீலம் லேபிளை இணைத்து அனுப்பவும்
விடைகள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் : 31-1-1992
நடுவர்கள் தீர்ப்பே முடிவானது.

விடைகள் அனுப்ப வேண்டிய முகவரி :

The Southern India
Trading Agencies (India)
P.B. No.133,
Coimbatore - 641 001
Marketers of Regaul Blue
and Liquid Ultramarine Blue




ரீகல்

என்ன வெண்மையோ!
ஆஹா! என்ன வெண்மையோ!

SRI RAGHAVENDRA



சஞ்சலங்கள் யாவினையும் கொல்லு''

என்ற பாட்டைத் தாளம் போட்டுக் கொண்டு (தப்புத் தப்பாய்) ஆரம்பித்தார். ஒவ்வொரு வரியையும் கவியரங்கம் ஸ்டைலில் இரண்டு இரண்டு முறைபாடி ஒரே ராகத்தில் சுமார் பத்து ஸ்டான்ஸா பாடி முடித்த போது கார்த்திக் நின்று கொண்டே தூங்கி விட்டான். முழுசாக 30 நிமிடங்களில் அவர் தன் கச்சேரியை முடித்தார். விட்டால் வேறு யாராவது பாட ஆரம்பித்து விடப் போகிறார்களே என்ற பயத்தில் வெற்றிலை பாக்குத் தட்டைத் தூக்கினார் நடராஜ். அதற்குள் ஏதோ நினைத்தவராய் உள்ளே ஓடியவர் புதிய கர்சீப்களை எடுத்து வெற்றிலை பாக்கின் மீது வைத்தார்.

''அட நான் சொல்லாமலேயே உருப்படியா ஒரு காரியம் செஞ்சிட்டீங்களே!'' உமா பாராட்டினாலும் தொக்கிநின்றது கிண்டல் த்வனிதான்.

எல்லோரும் வெற்றிலை பாக்கு எடுத்துக் கொண்டதும் மிகுந்த தயக்கத்துடன் சுண்டல் பொட்டலங்களையும் நடராஜ் கொடுத்தார். அவர்கள் படியிறங்கியவுடன் அடுத்த குழு உள்ளே நுழைந்தார்கள். இப்படியே ஒருவர் இருவராக விட்டு விட்டு வந்து போக கடிகாரம் இரவு ஒன்பது மணி என்றது.

''என்ன வாசல் கதவைச் சாத்தலாமா, இன்னும் பிரெண்ட்ஸ் பாக்கியா?'' என்ற உமாவின் கேள்விக்குக் கொ[illegible] டன் நடராஜ் சைகையிலேயே ''இவ்வளவுதான்'' என்று பதில் சொன்னார். பேண்ட், ஷர்ட் எல்லாம் கசங்கி அங்கங்கே சந்தனம், குங்குமம் என்று டெக்னிக் கலர் டிஸைன் வேறு. கார்த்திக் கிருஷ்ண உருவத்திலேயே சோபாவில் தூங்கிவிட்டான். ஹால் முழுவதும் பாக்கு சீவல், சுண்டல், காகிதம் என்று குப்பை.

''என்ன அம்பாளுக்கு ஆரத்தி எடுக்கணும். யார் செய்யறது?'' உமா கேட்டாள்.

''அம்மா தாயே. ஆளைவிடு. நீயும் காயத்திரியுமே ஆரத்தி எடுங்க. கூடவே என் சபதத்துக்கும் சேர்த்து மங்கள ஆரத்தி எடுங்க. ஒன்பது நாளும் நீ வீட்டையும் கவனிச்சு, பண்டிகையையும் ஜமாய்த்து விடுவே. என்னாலே ஒரு நாள்லேயே முடியலே. என்ன ஆனாலும் பெண்கள் பெண்கள் தான்'' நடராஜ் தோல்வியை நாசூக்காக ஒத்துக் கொள்ள, அவருக்குத் தெரியாமல் அவரின் ஒரு நாள் திண்டாட்டத்தைக் காமிராவுக்குள் அடக்கிய அவர் பெண் காயத்ரி ''அப்பா நாளைக்கே பிரிண்ட் போட்டுகிட்டு வாங்கப்பா'' என்று காமிராவை நீட்டியதும் நடராஜ் அசந்துவிட்டார். ''இதுவும் உன் வேலையா?'' என்று உமாவைப் பார்வையால் கேட்கும் முன்பே உமாவின் சிரிப்பு அதை ஊர்ஜிதப்படுத்தியது.

- லக்ஷ்மி சங்கர்

பொருள் : எளிய உணவு

## முதல் பரிசு :

### ஸீரியல் குக்கி

தேவையான பொருட்கள் :

பச்சைப் பயறு - 100 கிராம்,
காரட் (துருவியது) - 1 அல்லது 2,
வாழைத் தண்டு - 1'' (இளசாக),
தேங்காய் துருவியது - 1/2 கப்,
பச்சை மிளகாய் - 3,
பெருங்காயம், இஞ்சி - 1 துண்டு,
பெரும் சீரகம் - 1 டீஸ்பூன்,
சமையல் எண்ணெய் - 4 டீஸ்பூன்,
வெங்காயம், தக்காளி - 2,
கருவேப்பிலை, கொத்துமல்லி
- கொஞ்சம்,
உப்பு - தேவைக்கேற்ப.

செய்முறை :

பச்சைப் பயறை 3, 4 மணி நேரம் ஊற வைத்து, களைந்து, இஞ்சி, ப. மிளகாய், பெருங்காயம், உப்பு சேர்த்து கரகரப்பாக கெட்டியாக அரைக்கவும். அரைத்த மாவில் துருவிய, காரட், தேங்காய், நறுக்கிய வாழைத் தண்டு, மல்லி, க. வேப்பிலை, பெரும் சீரகம் சேர்த்து நன்றாகப் பிசைந்து கொண்டு, ஒரு தட்டில் எண்ணெய் தடவி, மாவை, மெல்லியதாக, சமமாக பரப்பவும். பிறகு ஆவியில் வேகவிடவும். வெந்த பிறகு, ஆறியவுடன் சின்ன சின்ன துண்டங்களாகக் கட் பண்ணவும். வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு, வெங்காயம், தக்காளி தாளித்து, வெந்த குக்கிகளைப் போட்டு சிவக்க வறுத்து எடுக்கவும். பிறகு எலுமிச்சை பழத்தைப் பிழியவும். தக்காளி சாஸுடன் சாப்பிட சுவையாக இருக்கும்.

- திருமதி. ரங்கனாதன், சென்னை - 20.


திருமதி ரங்கனாதன்

# இம்மாத

## இரண்டாம் பரிசு :

### பச்சைத் தளிகை

தேவையான பொருட்கள் :

A

சுத்தம் செய்த பச்சரிசி - 400 கிராம்,
முழு பாசிப் பயறு (முளை கட்டவும்) - 100 கிராம்,
உடைத்த மிளகு, சீரகம்
- தலா 1 டீஸ்பூன்,
அரைத்த இஞ்சி விழுது - 1 டீஸ்பூன்.

B

ஆய்ந்த முருங்கைக் கீரை
- 4 பெரிய கைப்பிடி,
வற்றல் மிளகாய் - 4,
மஞ்சள் பொடி - சிறிது,
பெருங்காயப் பொடி - 2 சிட்டிகை,
உப்புப் பொடி - 1 சிட்டிகை.

C

வறுத்த வேர்க்கடலைப் பருப்பு
- 1 சிறு கைப்பிடி,
பொடியாக நறுக்கிய
தேங்காய்ப் பல்லுகள் - 1 சிறு கைப்பிடி,
பொரித்த அப்பளம் (நொறுக்கவும்) - 4,
வறுத்த எள்ளு - 1 டீஸ்பூன்.

செய்முறை :

ஏ பகுதியில் உள்ளவைகளை ஒன்றாகக் கலந்து, அத்துடன் ஒன்றரை லிட்டர் தண்ணீர், 2 மேசைக்கரண்டி எண்ணெய், 1 சிட்டிகை மஞ்சள் தூள் சேர்த்து, குக்கருக்குள் வைத்து, சாதத்திற்கு வைப்பதை விட கூட இரண்டு விசில் வரை வைத்து இறக்கவும்.

வாணலியில் எண்ணெய் விட்டு, மிளகாயைக் கிள்ளிப் போட்டு, முருங்கைக் கீரையை மஞ்சள் பொடி சேர்த்து ஒரு சிட்டிகை உப்புப் போட்டு கருள வதக்கி,

பத்மா கலைமணி





எஸ். பட்டம்மாள்

# இல்லத்தரசி

இதைக் குக்கர் திறந்ததும், வெந்த தளிகையில் சேர்த்து, தேவையான உப்பும் போட்டு நன்றாகக் கிளறி மூடவும்.

பரிமாறும் சமயம்

சி பகுதியில் உள்ளவைகளைத் தூவி னாற் போல கலந்து உடனே பரிமாறவும்.

எளிமையான, முழுமையான இந்த உணவு நீண்ட நேரம் பசி தாங்கும் ஆற்ற லுடையது.

- எஸ். பட்டம்மாள், ஸ்ரீரங்கம்.

## மூன்றாம் பரிசு
## ப்ரெட் - ட்ரீ இன் ஒன்

தேவையான பொருட்கள் :

ஸ்வீட் பிரெட் - 1 பாக்கெட்,
முட்டை - 2,
சர்க்கரை - 100 கிராம்,

சித்ரா முரளீதரன்



ஏலக்காய் - 4,
வனிலா எஸன்ஸ் - 2 சொட்டு.

செய்முறை :

துருவிய தேங்காயுடன் சர்க்கரை, ஏலக் காய் போட்டு மிக்ஸியில் அடித்து கெட்டிப் பாலாக எடுத்துக் கொள்ளவும். அதோடு முட்டையையும் நன்கு அடித்து வனிலா எஸன்ஸையும் கலந்து எடுத்துக் கொள்ள வும். ப்ரெட்டை எடுத்து தேங்காய்ப் பால் கலவையில் முக்கி எடுத்து தோசைக் கல்லில் நெய் விட்டு டோஸ்ட் பண்ணி எடுக்கவும். சுவையான எளிதில் செய்யக் கூடிய உணவு.

காரம்

ப்ரெட் - 1 பாக்கெட்,
முட்டை - 3,
மஞ்சள் பொடி - 1 டீஸ்பூன்,
காரப் பொடி - 1 டீஸ்பூன்,
சோம்பு - 1 டீஸ்பூன்,
இஞ்சி - 1 டீஸ்பூன் (சிறிதாக வெட்டியது),
பச்சை மிளகாய் - 2,
பூண்டு - 5,
உப்பு - தேவையான அளவு,
டால்டா - தேவையானது.

செய்முறை :

முட்டையை உடைத்து பாத்திரத்தில் எடுத்துக் கொண்டு அதில் மஞ்சள் பொடி, காரப் பொடி, உப்பு, சிறிதாக நறுக்கிய இஞ்சி, பச்சை மிளகாய் கலந்து கொண்டு சோம்பு, பூண்டு இரண்டையும் நசுக்கி எடுத்து முட்டையுடன் நன்கு கலக்கவும். ப்ரெட்டை முட்டை கலவையில் நனைத்து எடுத்து தோசைக் கல்லில் போட்டு டால்டா விட்டு பொன்னிறமாக எடுக்கவும்.

- பத்மா கலைமணி, கல்கத்தா - 26.

## ஆறுதல் பரிசு :
## கரகர சாக்லேட் :

தேவையான பொருட்கள் :

மில்க் பௌடர் - 1 டம்ளர் (பால் பௌடர்),
சர்க்கரை - 1 டம்ளர்,
கோக்கோ பௌடர் - 1 டேபிள் ஸ்பூன்,
வெண்ணெய் - 1 டேபிள் ஸ்பூன்,
தண்ணீர் - 11/2 டம்ளர்,
அரிசிப் பொரி - 1/2 டம்ளர்,
வறுத்த வேர்க்கடலை தோல் உரித்து பாதியாக உடைத்தது - 1 டேபிள் ஸ்பூன்.

செய்முறை :

ஒரு கெட்டியான பாத்திரத்தில் சர்க் கரை, தண்ணீர் சேர்த்து அடுப்பில் கொதிக்க வைக்கவும். சர்க்கரை நல்ல கம்பிப் பாகாக

வர வேண்டும். இதில் வெண்ணையைப் போட வேண்டும். வெண்ணெய் சர்க்கரை பாகில் நன்கு கரைந்து விட்டது என்று தெரிந்தவுடன் அடுப்பை அணைத்து விட்டு உடனே பால் பௌடர், கோக்கோ பௌடரை இதில் கொட்டி கை விடாமல் கிளற வேண்டும். ஒரு தாம்பாளத்தில் அரிசிப் பொறியையும், கடலையையும் சமமாக பரப்பவும். சாக்லேட் நன்கு கெட்டியாக ஆகும் வரை கிளறி முடித்த பின், இந்த சாக்லேட்டை எடுத்துத் தாம்பாளத்தில் பரத்தி இருக்கும் பொறி, கடலை மேல் போட்டு, கரண்டியால் நன்கு சமமாக தட்ட வேண்டும். நன்கு ஆறிய பின் கேக் போல் கட் செய்து எடுத்தால் பொறியும், கடலையும் சாக்லேட்டில் அழகாக ஒட்டிக் கொண்டு இருக்கும். வாய்க்கும் சுவை.

- சித்ரா முரளீதரன், சென்னை - 28.

## ஆறுதல் பரிசு :

### ரவை குழிப்பணியாரம் :

தேவையான பொருட்கள் :

பம்பாய் ரவை - ½ கிலோ,
மைதா மாவு - 2 டீஸ்பூன்,
பெரிய வெங்காயம் - 1 (பொடியாக அரிந்தது),
துருவிய பச்சை மிளகாய் - 4,
கருவேப்பிலை - 10,
தேவைக்கேற்ப உப்பு,
சமையல் சோடா - 2 துளி,
மோர் - 1 கரண்டி.

செய்முறை :

மேலே கொடுக்கப்பட்டுள்ள சாமான்கள் எல்லாவற்றையும் சேர்த்துத் தேவையான தண்ணீருடன் தோசை மாவு பதத்துக்குக் கரைத்து சுமார் ஒரு மணி நேரம் ஊற வைக்கவும். புளிப்பாக இருக்க வேண்டும் என்றால் மேலும் இரண்டு மணி காலம் ஊறவைத்து விட வேண்டும். குழிப்பணியார அச்சில் கொஞ்சமாக எண்ணைய் போட்டுக் காய்ந்ததும் அளவாக மாவு ஊற்றி ஒரு தட்டினால் மூடி வேகவைக்கவும். பூப் போல இருக்கும். குழந்தைகளுக்கு மொறு மொறுவென தேவையெனில் கூடுதலாக எண்ணெய் போட்டு தயாரிக்கவும். சட்னி, பொடி, ஸாஸுடன் சாப்பிடலாம். வெங்காயத்தைத் தவிர்த்து பெருங்காயம், இஞ்சி, கொத்துமல்லித் தழை சேர்த்து மாவு கரைத்துச் செய்தாலும் ருசி நன்றாகவே இருக்கும். சில சமயம் ரவை பெரிய அளவாக இருக்கும். அப்போது மாவில் ஒரு கரண்டி கொதிக்கும் நீர் ஊற்றிக் கிளறி தயாரிக்கவும்.

- பிரேமா ராவ், ஹுப்ளி.

# துடிப்புள்ள மக்களுக்கு நலம் தரும் எண்ணெய்




இப்போது அருமையான சமையலுக்கு அபாரமான ருசிமட்டும் போதாது. அது ஆரோக்கியம் தருவதாகவும் இருக்க வேண்டும். அதற்கு உதவுகிறது புதிய ஸன்ட்ராப் சூப்பர்-ரீ:.பைன்ட் ஸன்:.ப்ளவர் எண்ணெய்.

ஏனெனில் ஸன்ட்ராப்பில் சமைத்த உணவு, அதன் இயற்கையான மற்றும் அபாரமான ருசியை விடாது வைத்திருப்பதோடு மட்டுமல்ல, ஸன்ட்ராப் நான்கு இன்றியமையாத ஆரோக்கிய நலன்களையும் அளிக்கிறது.

- **சக்தி நிரம்பியது** முழுச்செறிவூட்டப்பட்ட சக்தியைக் கொண்ட ஸன்ட்ராப் கிராம் ஒன்றுக்கு 9 கிலோ கலோரிகளைத் தருகிறது.
- **சுலபமாக ஜீரணிக்க வல்லது.** இது 0.2%க்கும் குறைவான :.ப்ரீ:.பேட்டி ஆஸிட் கொண்டுள்ளதால் ஸன்ட்ராப்பில் சமைத்த உணவு மிகவும் துரிதமாக ஜீரணமாகிறது.
- **இருதயத்தைப் பலமாக வைக்கிறது** ஸன்ட்ராப் பாலி அன்சாட்சுரேட்டட் கொழுப்பைக் (லினோலைக் ஆஸிட்) கொண்டுள்ளது. இது கொலெஸ்ட்ரால் மட்டத்தைத் தீவிரமாகக் குறைக்கிறது மற்றும் இருதயத்தைப் பலமாக வைத்திருக்க உதவுகிறது.
- **வைட்டமின்கள் செறிந்தது** ஸன்ட்ராப், வைட்டமின்கள் ஏ.டி. மற்றும் ஈ யை அதிகமாகக் கொண்டுள்ளதால் எல்லா வித முழுவளர்ச்சிக்கும் சிறந்தது.

**எனவே இன்றே ஸன்ட்ராப் கொண்டு சமைக்கத் துவங்குங்கள்.**





**ருசியான சமையலுக்கு ஆரோக்கியமான வழி**







Buy pure, be su

# போராடும்

இரண்டு தெருவுக்கு நடுவே இருநூறு கஜ அகலத்தில் அந்தத் தனியார் ஆஸ்பத்திரி அமைந்திருந்தது. நாலு கட்டாய் பிரிந்திருந்தது. ஏ பிளாக்கில் தேடினால் அடிபட்டவர்கள் ஸி பிளாக் என்றார்கள். ஸி பிளாக்கில் தேடினாள். அப்படி யாரும் இல்லையே.. முதலில் ரிஸப்ஷனில் கேள் என்றார்கள். ரிஸப்ஷனில் கேட்டாள் பி பிளாக் என்றார்கள். பி பிளாக்கில் டி பிளாக்குக்கு மாற்றி விட்டோம். அங்கே ஸ்பெஷல் வார்டில் கேள் என்றார்கள்.

இன்னும் நூறு கஜம் நடக்க வேண்டும். தளர்வோடு நடந்தாள். ஏன் இப்படித் தேடுகிறோம்? ஆபீஸில் ஆட்கள் போய் பார்த்து விட்டு எந்த பிளாக் எந்த வார்ட் என்று சொல்வார்களே. மெல்ல பார்த்துக் கொள்ளலாமே ஏன் தேடுகிறோம் தயங்கினாள். திரும்பி விடலாமா.. யோசித்தாள். ஓடி ஓடித் தேடியதில் பதற்றம் குறைந்து அலுப்பு வந்தது. அலுப்பு வற்றிய மனோபாவனை தந்தது. டி பிளாக் வாசலில் சோர்ந்து உட்கார்ந்தாள்.

வராண்டாவை மருந்து போட்டு துடைத்துக் கொண்டிருந்தார்கள். யாரும் உடனே நடக்க வேண்டாம் என்று கூச்ச லிட்டார்கள். தண்ணீர் ஊற்றி மருந்து தெளித்து வரட் வரட் என்று துணிக் குச்சியால் தேய்த்தார்கள்.

துடையல் முடியவும், அலுப்பு குறையவும் சரியாய் இருந்தது. மெல்ல நடந்து கணேஷைத் தேடினாள்.

இடம் காட்டினார்கள். முகம் முழுவதும் கண்களும், மூக்கும் மட்டும் விட்டு கட்டு. வாய்ப் பக்கம் ஒரு சிறு இடைவெளி. தாடையில், நெற்றியில், கன்னத்தில் கண்ணாடித் துண்டுகள் சொருகியிருக்க வேண்டும். இடது மணிக்கட்டு, இடது புஜம், நெஞ்சுப் பகுதியில் கட்டு போடப் பட்டிருந்தது. வலது விரல்களில் வீக்கத்திற்கு மருந்து தடவப்பட்டிருந்தது.

இடுப்பு வரை போர்த்தியிருந்தது. இது கணேஷ் என்று கணேஷ் பேசினால் தெரிந்து கொள்ளலாம். இல்லை... கட்டுப் போட்டவர்கள் சாட்சி சொல்ல வேண்டும். இன்னார் என்று அடையாளம் தெரியாதபடி இருந்தது.

மெல்ல கட்டில் விளிம்பில் தொங்கிய கிளிப் பேட் எடுத்துப் படித்தாள். கணேஷ், மல்டிபிள் இன்ஜூரிஸ் என்று போட்டிருந்தது. வட்ட சிகப்பு சீல் போலீஸ் கேஸ் என்று குத்தப்பட்டிருந்தது.

தூக்கமா... இல்லை வலி மயக்கமா?

''கணேஷ்...'' மெல்ல கூப்பிட்டாள். அவன் அசையாதிருந்தான். தன் வருகையை எப்படித் தெரிவிப்பது? வேறு யாரும் வந்திருந்தார்களா? உறவுகளுக்குத் தெரியுமா? யார் கவனித்துக் கொள்வது?

ஸ்பெஷல் வார்ட் தனி அறை அது. மறுபடி மெல்ல தோள் தொட்டு அழைத்தாள். அவன் முனகினான். வலியில் உடம்பு தவிப்பது முறுக்கலில் தெரிந்தது. எழுப்பியது தவறோ... பயந்தாள்.

அவன் விழி மடல் பிரித்தான். புஸ், புஸ்ஸென்று மூச்சு விட்டான். சௌம்யா... சௌம்யா... பார்த்து விட்டு முனகினான்.



பாலகுமாரன்

# பெண்மணிகள்

''சௌம்யாதான். என்ன வேணும் கணேஷ்?''

''ஆக்... ஆக்... என்று தவித்தான். நெஞ்சுக் கூடு ஏறி, ஏறி இறங்கியது. மூச்சு விட திணறுவது தெரிந்தது. தலையை இடதும், வலதும் அசைத்து எழ முயற்சிப் பதில் ஏதோ ஒரு வேதனை இருப்பது புரிந்தது.

'சிஸ்டர்' ஓடினாள். கையோடு அழைத்து வந்தாள்.

''என்ன செய்யுது உங்களுக்கு?''

''மூச்சு... மூச்சு...''

''மூச்சு திணறுதா?''

''ஆமென்று தலையசைத்தான்.''

''ஆஸ்மா பேஷண்டா?'' நெஞ்சுக் கூட்டில் கை வைத்துப் பார்த்தாள். இன்டர் காமில் யாருக்கோ விவரம் சொன்னாள்.



# நிலைக்கும் பவர்



இது முற்றிலும் புதிய உலகம்.. இன்றைய குழந்தைகளின் முன்னே எத்தனை கடினங்கள். போட்டிகள். எதிர்பார்புகள். சிரமங்கள். இவ்வுலகின் வேகத்தை சமாளிக்க, வெற்றியடைய இன்றைய குழந்தைகளுக்கு தேவை அயராத ஆற்றல். நாள் முழுதும் அயராது உழைக்க அவர்களுக்கு உடல் மற்றும் மனோபலம் தேவைப்படுகிறது.



உங்கள் குழந்தைகளை போலவே அயராது ஆற்றலுடன் செயல்புரிகின்ற ஆரோக்கிய பானம்... புதிய விவா.

**க்ரீம் பாலில் இருந்து பவர்**

பாலில் இருந்து உங்களுக்கு கிடைக்கும் எல்லா நலன்களும் விவாவிலிருந்து உங்களுக்கு கிடைக்கிறது. பால் செறிந்த விவா உங்கள் குழந்தையின் பற்கள் மற்றும் எலும்புகளின் நன்மைக்கும், முழுமையான ஊட்டத்திற்கும் தேவையான கால்ஷியம் மற்றும் பால் புரோட்டீன் அளிக்கிறது.

**8 முக்கிய விட்டமின்களில் இருந்து பவர்**

விட்டமின்கள் A, $B_1$, $B_2$, $B_{12}$, C, D, ∴பாலிக் அமிலம், நியாஸின் ஆகியவை நிறைந்து, வலிமை பெற்றது புதிய விவா. எனவே நோய் மற்றும் களைப்பை எதிர்த்துப்

**ஒரு புதிய தலைமுறையை!**

# விவா பவர்



போராடும் சக்தியும். முழுமையான ஆரோக்கியமும் உங்கள் குழந்தைக்கு அளிக்கிறது புதிய விவா.

**மால்ட் மற்றும் புரோட்டீனிலிருந்து பவர்**

ஆரோக்கியம் அளிக்கும் பார்லி மால்ட், கோதுமை மால்ட் மற்றும் புரோட்டீன் நிறைந்தது விவா. இதனால் உங்கள் குழந்தைக்கு கிடைப்பது கூடுதல் தெம்பு, அதிக ஊட்டம்.



ஒரு சுவையான பானத்திலே உங்கள் குழந்தையின் நாளைய நல்வாழ்வுக்கு சக்தி அளியுங்கள். இன்றே விவா கொடுக்க தொடங்குங்கள்.




**உருவாக்குகிறது**

everest/d91/JIL/128 Tam

மறுபடி படுக்கைக்கு வந்தாள்.

''இருங்க...'' ஆக்ஸிஜன் வருது என்றாள். வேறு வேலை பார்க்கப் போனாள்.

பத்து நிமிடமாயிற்று ஆக்ஸிஜன் வரவில்லை.

அவன் திணறினான். கர் கர் என்று நெஞ்சுக் கூடு இழுத்து இருமினான். இருமலில் முகம் முழுவதும் வலி பரவி அம்மா அம்மா என்று அனர்த்தினான்.

''நர்ஸ் ஆக்ஸிஜன் வரலையே...'' சௌம்யா நினைவுபடுத்தினாள்.

''அந்த டிபார்ட்மெண்ட் பேஜாரும்மா... வரும் இருங்க.''

''எங்க இருக்கு?''

''ஏ பிளாக்ல.''

''நான் போகட்டா?''

''போய்க் கேளுங்க.''

ஓடினாள்.

கொடுத்துட்டமே... இஷ்யூட் பேப்பரைக் காட்டினார்கள்.

''வரலையே.''

''நாங்க கொடுத்தாச்சு.''

திரும்பி வந்தாள். சிலிண்டர் வரவில்லை. ச்சே என்ன ஆஸ்பத்திரி இது... கோபம் வந்தது. மறுபடி ஏ பிளாக் ஓடினாள்.

''வரலைங்க.''

''கொடுத்தாச்சும்மா...''

''பேஷண்ட் தவிக்கிறாரு. என்ன இப்படி பண்றீங்க.''

''என்ன... என்ன கூச்சல்...'' யாரோ ஒரு காக்கிச் சட்டை ஆள் கேட்டான்.

''ஆக்ஸிஜன் சிலிண்டர் இஷ்யூ பண்ணியாச்சு. வரலையாம்.''

''எந்த பிளாக்?''

''டி.''

''டிராலி இல்லை. அதான்...''

''போவலையா... குடுத்து எவ்வளவு நேரமாச்சு.''

''டிராலி இல்லை. நான் என்ன பண்ணட்டும்?''

''டிராலி எங்கே?''

''தெரியலை.''

''பேஷண்ட் கஷ்டப்படறாங்க.''

''டிராலி எவனோ எடுத்துட்டுப் போனான். கொண்டாரலை.''

''எங்கே இருக்கும்?''

''பி'ல இருக்கும்.''

பி பிளாக் ஓடினாள். டிராலி இருந்தது. தள்ளிக் கொண்டு வந்தாள். ஏ பிளாக்கில் ஆக்ஸிஜன் வழங்கும் பெண்ணும், இவளுமாய் சேர்ந்து சிலிண்டர் உருட்டி டிராலியில் ஏற்றினார்கள்.

''டிராலி தள்ற ஆளு எங்கே?''

''வருவாரு. இருங்க.''

''யார் அது?''

''இப்ப பேசிட்டிருந்தாரே...''

''மைஃபுட் இப்ப அவனைத் தேடணுமா? நல்ல ஆஸ்பத்திரி... விடுங்க. நானே தள்ளிட்டு போறேன்.''

''நீங்க தள்ளக் கூடாதும்மா.''

''போம்மா அந்தப் பக்கம்.'' சௌம்யா கோபத்தில் தள்ளினாள்.



முத்தாலாரத்தி : நவராத்திரி ஒன்பது தினங்களிலும் பித்தளை தாம்பாளத்தில் வண்ண, வண்ண கோலங்கள் போட்டு முத்தாலாரத்தி எடுக்கலாம். எதாவது ஒரு டிசைன் கோலத்தை தேர்வு செய்து, அதை சாக்பீஸ் கொண்டு வரையவும். பெரிய ஜவ்வரிசியை வெறும் வாணலியில் பொரிக்கவும் (அடுப்பை சிம்மில் வைத்து) வெள்ளை, வெளேர் என்று பெரிய சைஸில் பொரிபடும். இப்போது கோலத்தின் மேல், மைதா பசை கொண்டு ஒரு சிறிய குச்சியால் வரைந்து, ஜவ்வரிசியை ஒவ்வொன்றாக வரிசையாக ஒட்டவும். இப்போது கோலத்தின் உள்ளே வண்ணப் பொடிகளால் அலங்கரிக்கவும். பார்க்க மிக அழகாய் இருப்பதோடு, கொலு பார்க்க வருபவர்கள் கண்ணைக் கவரும். அம்பாளுக்கு 'முத்தாலாரத்தி' விசேஷமானதும் ஆகும். கோலத்தின் நடுவில் சூடம் ஏற்றி ஆரத்தி எடுக்க வேண்டும்.

- கமலா

டிராலியை அழுத்தித் தள்ளினாள். தடு மாறியது. கட்டை வண்டி தள்ளுவது போலிருந்தது. உடம்பு உதற டி வரை தள்ளினாள். சரிவில் ஏற்ற அவஸ்தையாய் இருந்தது.

''என்ன சௌம்யா?'' யாரோ கூவினார்கள்.

ஆபீஸ் ஆட்கள். மாதவன், செபஸ்டியன், வனஜா, சண்முகம், புனிதவேல், நாகராஜன்.

''ஆக்ஸிஜன் வேணும். யாருமே இல்லை. கணேஷ் தவிக்கிறார்.''

''வுடு... வுடு..''

சகலரும் உந்தித் தள்ளினார்கள். சிலிண்டர் மேடேறியது. உள்ளே உருண்டு போனது. சௌம்யா முன்னே போய் வழி காட்டினாள்.

''ஸ்பானர் எங்கே?'' நர்ஸ் கேட்டாள்.

''தெரியாதே.''

''திறக்கணுமே.''

''தள்ளுங்க. நான் திறக்கறேன்.'' செபஸ்டியன் வால்வு திறந்தான்.

''அவ்வளவு வேணாம். குறைங்க.''

குறைத்தான்.

ட்யூப் கொடுக்கப்பட்டது. கணேஷ் மூக்கில் ட்யூப் நுழைந்ததும் தவித்தான். இருமினான். கேழை துப்பினான். உடம்பு உதறிப் போட்டது. ''அப்படியே புடிச்சுக்கங்க..'' ஓடிப் போய் பிளாஸ்டர் கொண்டு வந்தாள். மூக்கோடு ஒட்டினாள். மூக்கு துவாரமும் பிளாஸ்டரால் மூடப்பட்டது. காற்று நெஞ்சுக்குள் இறங்கி வாய் பிளந்து அவன் விடுவதை உணர முடிந்தது.

நர்ஸ் ஊசி போட்டாள். கணேஷ் மயக்க முற்றான்.

''ஏன் இப்படி கூட்டம் போடறீங்க. போங்க... போங்க... இது விஸிட்டர்ஸ் டைம் இல்லியே...''

வெளியே வந்தார்கள்.

அது தனியார் ஆஸ்பத்திரி. இருப்பினும் பெரிதான காரணத்தால் ஒரு மெத்தனம் இருந்தது. அதைப் பற்றி விவாதித்தபடி வாசலுக்கு வந்தார்கள்.

சௌம்யா சிலிண்டர் தள்ளி வந்ததை, சமயத்தில் உதவியதைப் பாராட்டினார்கள்.

' என்ன கனம் அது... எப்படி ஒருத்தரா தள்ளிண்டு வந்தோம்... ' வியர்த்தது.

விஸிட்டர் நேரம் வரை காத்திருந்து உள்ளே போனார்கள்.

அவனுக்கு இரைப்பு குறைந்திருந்தது. அவன் அம்மாவும், அப்பாவும் அருகே இருந்தார்கள்.




சிலர் வீட்டில் பொட்டுக் கடலைப் பொடி கொடுப்பார்கள். வெறும் பொட்டுக் கடலை பொடிக்காமல், வறுத்த கசகசாவையும், சேர்த்துப் பொடித்தால் மிகமிக வாசனையாயும், சுவையாயும் இருக்கும்.

- கமலா

கணேஷ் மெல்லிய குரலில் நன்றி சொன்னான். கண்களில் ஈரம் பளபளக்க அவளையே கனிவோடு பார்த்தான். சௌம்யா வெட்கப்பட்டாள்.

வீட்டுக்கு வந்து இனம் புரியாத சந்தோஷத்தில் இருந்தாள். நாளைக்குப் போய் பார்க்கணும் என்று நினைத்துக் கொண்டாள். தூங்குகிற பையனிடம் சிலிண்டர் தள்ளியதைப் பற்றி விவரித்தாள். விவரித்து விட்டு தலையில் அடித்துக் கொண்டாள்.

மறுநாள் ஆஸ்பத்திரிக்குப் போன போது கணேஷ் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தான்.

''அது ஆஸ்த்மா இல்லையாம். ஆஸ்த்மா மாதிரியாம். தரை துடைக்கிற மருந்து அதிகமாகி நிறைய பேஷண்ட்டுக்கு அது போலாகி விட்டதாம். தரைதுடைக்கும் மருந்தை மாற்றி விட்டார்களாம்.

கணேஷ் அம்மா அப்போதுதான் போனாளாம். பகல் சாப்பாடு அப்பா எடுத்து வருவாராம். ரசம் சாதம் மட்டும் தானாம். நாலு நாளில் கட்டு பிரிப்பார்களாம். மெல்ல சரியாகும் என்றார்கள்.

இன்னும் வலியிருப்பதால் தூக்க மாத்திரை தந்திருப்பதாய் சொன்னார்கள்.

''நீங்க அன்னிக்கு சிலிண்டர் கொண்டாந்தது தப்பு. எனக்கு செம டோஸ்.'' நர்ஸ் குறைபட்டுக் கொண்டாள்.

அதே சமயம் கொண்டு வராது போயி

ருப்பின் பேஷண்ட் நிலைமை மோசமாகி யிருக்கும் என்றும் சொன்னாள்.

வெள்ளைப் புடைவை உடுத்திய சிறு வயசுப் பெண்கள் வந்தார்கள். அவனை மெல்ல நிமிர்த்தினார்கள். ஸ்பாஞ்ச் பாத் என்றார்கள்.

''பேஷண்ட் தூங்கறாரா? யாரு சொந்தக்காரங்க கூட இருக்கறது?''

''ஏன்?''

''ஏகப்பட்ட பொருள் கொண்ணாந்து வச்சிருக்கீங்க.. ஏதாவது காணோம்னா எங்க தலை உருளும்.''

ஒரு பெண் அவன் முதுகு தூக்கியது. மறு பெண் அவன் உடம்பு துடைத்தது.

கணேஷ் அரை மயக்கத்தில் இருந்தான். நிமிர்த்தி உட்கார வைத்ததில் இருமினான். தொண்டையில் காரம் ஏறியது. தலைகுனிந்தான்.

''வாந்தி எடுக்கறார்...'' சௌம்யா கத்தினாள்.

பெண்கள் திடுக்கிட்டார்கள்.

அவன் வாய் திறக்க.. சௌம்யா கையேந்தினாள். கணேஷ் காலையில் சாப்பிட்டது அவள் கையில் விழுந்தது. அடுத்த குமட்டலுக்குப் பாத்திரம் நீட்டப்பட்டது. சௌம்யா வாஷ்பேஸினில் கையலம்பினாள். ஸாரி மேடம் என்று பெண்கள் சொன்னார்கள். சுத்தமாய் அவனைத் துடைத்து விட்டுப் போனார்கள்.

சௌம்யா ஆபீஸுக்குப் போனாள். வேறு ஒரு கூட்டம் மாலையில் ஆஸ்பத்திரிக்குப் போயிற்று.

''மிஸஸ் கணேசன் வரவில்லையா என்று கேட்டார்களாம்.''

'கணேஷுக்கு இன்னும் திருமணமாக வில்லை' என்று சொன்ன போது...

காலையில் கணேஷ் வாந்தி எடுத்ததையும் சௌம்யா கையிலேந்தியதையும் சொல்லி விட்டு மிஸஸாக இருக்கும் என்று நினைத்ததாகச் சொன்னார்களாம்.

ஆபீஸ் லேசாய்ச் சிரித்தது.

சௌம்யா வெட்கமும், மெல்லிய பயமும் கொண்டாள்.

ஆஸ்பத்திரிக்குப் போகாமல் இருந்தாள்.

ஆனால் அவனையே நினைத்துக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)

நீங்கள்
சில மாதங்களுக்கு முன்பாக 'பெற்றோர்' என்ற புதிய பதவி உயர்வு பெற்றவராகவோ -
எந்தப் பள்ளியில் குழந்தையைச் சேர்ப்பது என்று அப்ளிகேஷனும் கையுமாக அலைந்து கொண்டு இருப்பவராகவோ -
இந்த விடுமுறையில் இந்த வாண்டுகளை எப்படிச் சமாளிப்பது என்ற கேள்வியுடன் அலுவலகமும் வீடுமாக பறந்து கொண்டிருப்பவராகவோ -
இருக்கலாம்.
மேலும் படியுங்கள்!

# உங்கள் குழந்தையின் அறிவுத் திறனை வியக்கத்தக்க அளவில் உயர்த்துவது எப்படி?

இந்தப் புதிய கல்வித் திட்டத்தில் நாம் ஈடுபடுவதற்குச் செய்ய வேண்டியவை, வேண்டாதவை என சில விஷயங்கள் உள்ளன. அவை :

1. ஒரு நாளில் சில மணி நேரங்களைக் குழந்தையின் அறிவு வளர்ச்சிக்காக ஒதுக்கத் தயாராக வேண்டும்.

2. ஒரு நாளில் 15 நிமிட நேரத்தில் மிகப் பெரிய அளவில் குழந்தையின் அறிவுத் திறனை உயர்த்த குழந்தையும் தாயும் காலை அல்லது மாலையில் மனம் ஒன்றும் நேரத்தில் உற்சாகமாக சந்தோஷத்துடன் முன்வர வேண்டும்.

3. மூன்றாவது மாதத்திலிருந்தே குழந்தைக்குக் காட்சிப் பொருட்களின் மூலமாக, உரத்த உச்சரிப்பின் மூலமாக, நுட்பமான தூண்டுதலின் மூலமாக விஷயத் துளிகளை (facts) குறிப்பிட்ட காலவரையறைக்குள் வேகமாக அழுத்தமாக மனதில் பதிய வைக்க வேண்டும்.

4. விஷயத் துளிகளை (facts) சேகரித்துக் கொண்டு வகுப்பு ஆரம்பிப்பதற்கு முன்பே பெரிய அளவு அட்டையில் ஒட்டி (ஒரு விஷயத்திற்கு ஒரு அட்டை), அட்டையின் பின்புறம் பெயர் தெளிவாக நீங்கள் வேகமாக படிக்க வசதியாக குறித்துக் கொள்ள வேண்டும்.

5. ஒவ்வொரு படமும் ஒரே ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் உணர்த்த வேண்டும். (உ.ம்: ஒரு பறவையின் படம்) கூட்டமாகவோ பின்புறக் காட்சிகளுடனோ இருக்கக் கூடாது.

6. 18 அங்குல தூரத்தில் இந்தப் படங்களை குழந்தை நன்கு பார்க்கும் வகையில் வைத்துக் காண்பிக்கவும்.

7. விஷயங்களைக் காட்டும் போது, ஒரு படத்திற்கும் மறு படத்தை மாற்றுவதற்கும் இடையில் ஒரு வினாடி நேரம் மட்டுமே இருக்க வேண்டும். நீண்ட நேரம் காண்பித்தால் குழப்பம் உண்டாகிறது.

8. 15 காட்சிகளைக் குழந்தை காண விரும்பினால் 10 காட்சியுடன் நிறுத்திக் கொள்ளலாம். குழந்தை சலிப்புடன் போதும் என நினைப்பதற்கு முன்பாக பயிற்சி வகுப்பை நிறுத்தி விட வேண்டும்.

9. பயிற்சி நேரங்களில் குழந்தையின் கவனத்தைக் கவரக்கூடிய திசை திருப்பக் கூடிய காட்சிகள், ஒலி எதுவும் அறைக்குள் நிகழாமல் இருத்தல் மிக அவசியம்.

10. இவ்விதமாக ஒவ்வொரு வகைப் பாடத்தையும் ஒரு நாளில் மூன்று முறை நடத்த வேண்டும். அதன்படி ஒரு பாடம் 10 நாட்களில் 30 முறை நடத்தப்படுவதால் அந்த விஷயம் குழந்தையின் மனதில் ஆழ

மாகப் பதிந்து விடுகிறது. அது போது மானது. குழந்தை புரிந்து கொண்டது என்ற நம்பிக்கை கொண்டு அந்தப் பாடத்தை எடுத்துப் பத்திரப்படுத்தி விட்டு வேறு புதிய காட்சியைக் காட்டுதல் வேண்டும்.

11. பழைய பாடங்களை மீண்டும் சில நாட்களுக்குப் பின் புதிய, அதிகமான விவரங்களுடன் விளக்க பத்திரப்படுத்துதல் அவசியம். (உங்கள் பேரக் குழந்தை களுக்கும் உபயோகப்படும்.)

12. குழந்தையின் அறிவைச் சோதிக்கக் கேள்விகள் கேட்கப்படும் போது (கொஞ் சம் பெரிய குழந்தையாக இருந்தால்) தொடர்ந்து தவறான பதிலையே அவர்கள் தர நேர்ந்தால் தொடர்ந்து கேள்விகள் கேட் பதை நிறுத்திக் கொண்டு அன்புதான் இத் திட்டத்திற்குத் தேவையான முதல் படி என்பதை ஒருபோதும் மறக்காமல் நீங்களாக எல்லா பதிலையும் சொல்வதே அந்த நேரத் தில் சரியான வழி.

13. உங்களுக்கே தெரியாத பதிலாக இருக்குமானால் விடையைச் சேகரித்துப் பிறகு தெரிவிப்பதாகக் கூறி முயற்சி செய்து தெரிந்து உங்கள் குழந்தைக்குச் சொல்லத் தவறாதீர்கள். இது உலகின் கணக்கிலடங்கா அறிவுப் பொக்கிஷங்களை உங்களால் அறிந்து கொள்ள இயலும் என்ற நம்பிக் கையையும் உற்சாகத்தையும் உங்களுக்கு ஏற் படுத்தும்.

14. குழந்தையின் அறிவுத்திறனை ஒரு குறிப்பிட்ட விஷயத் துளியில் வளர்க்கும் பொருட்டு குழந்தையும் தாயும் சேர்ந்தே ஒவ்வொரு விஷய வகையையும் (category of facts) ஒன்றுக்கொன்று இணைத்துப் புதிய புதிய விஷயங்களைக் கண்டுபிடித்து ஒவ் வொன்றிற்கும் (formula) சூத்திரம் தயா ரித்து விடை தேடலாம்.

15. பள்ளிகளில் திறமை பரிசோதனை கள் யாவும் குழந்தைகளின் தவறுகளைச் சுட்டிக்காட்டும் போது நீங்களும் அவ்வித மாக முயலாமல் குழந்தையின் வெற்றிகளை மட்டும் பாராட்டி ஊக்குவித்தல் அவசிய மானது.

இந்தப் பாடத் திட்டம் நமது இல் லத்தில் அடையப் போகும் வெற்றியும் தோல்வியும் நமது அன்பு, அரவணைப்பு, உற்சாகம், அமைதியான சூழல், உண்மை யான ஆர்வம், சரியான பாடத் திட்டம் ஆகிய வற்றின் மேன்மையைப் பொறுத்திருக் கிறதே தவிர குழந்தைகளும் அவர்கள் அறிவுத் திறனும் எவ்விதத்திலும் காரண மாக முடியாது.

இனி இந்தப் பாடத் திட்டங்களை எவ்வாறு எதன் அடிப்படையில் தயாரிக்க லாம் என்பதை உதாரணங்களுடன், சூத்தி ரங்களுடன் அடுத்த இதழில் பார்ப்போம்.

– ரேவதி சங்கரன்.



# எனக்குப் புதுசு நவராத்திரி!



★ திருமதி. செல்லபாப்பா சீரன்




★ திருமதி மீர்ட்டா விஜயகுமார்

நவராத்திரி பற்றியோ, நமது மற்றைய (இந்து) பண்டிகைகள் பற்றியோ அறியாத மாறுபட்ட கலாசாரத்தில் (அயல்) நாட்டில் பிறந்து வளர்ந்து நம் தமிழ் நாட்டைப் புகுந்த வீடாக்கிக் கொண்டு கணவரின் கலா சாரத்தை ஏற்று அதற்கேற்ற வகையில் பண்டிகைகளைக் கொண்டாடுவோரும் உண்டு. நம் தமிழ்நாட்டிலேயே பிறந்து வளர்ந்திருந்தாலும் கலப்புத் திருமணம் காரணமாக நவராத்திரி பற்றி ஒன்றுமே அறியாமல், திருமணமாகி வந்த பின்பு கணவன் கலாசாரத்தை ஏற்றுக் கொள்ப வர்களும் உண்டு. தான் கொலு வைக்கா விட்டாலும், மற்றவருக்கு உதவுபவர்களும் உண்டு. இவர்களின் அனுபவங்கள் -

**திருமதி. செல்லபாப்பா சீரன் :** ''நிறைய படிகள் வைத்து, பெரிய கொலு வாக, தினமும் ஒரு சுண்டல் போட்டு கற்பூர ஆரத்தி எடுத்து, தினமும் சுமங்கலிகளை அழைத்து வெற்றிலை பாக்குக் கொடுத்து - இப்படித்தான் என் பிறந்த வீட்டிலிருந்த போது அலங்காரங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் கலைவிழாவாக நவராத்திரி யைக் கொண்டாடினோம். ஆனால் இவரைக் கலப்புத் திருமணம் செய்து கொண்ட பின்பு - இவருக்கு ஆன்மீகத்தில் ஈடுபாடு அதிகமென்பதால் - கலையோடு ஆன்மீகத்துக்கும் முக்கியத்துவம் அளிக்கும் வகையில் கொண்டாட ஆரம்பித்தோம்.

எங்களுக்கு நான்கு பெண் குழந்தைகள். பெண் குழந்தைகள் சிறப்பாகக் கொண்டாட வேண்டிய முக்கிய பண்டிகை நவராத்திரி என்பதால் - இதை நாங்கள் மிகவும் சிறப் பாகக் கொண்டாடுவோம். கலசம் வைத்து முதல் மூன்று நாட்கள் துர்கையாகவும், 2-ம் மூன்று நாட்கள் திருமகளாகவும், கடைசி மூன்று நாட்கள் கலைமகளாகவும் - அம்பிகையைத்துதித்து - தினமும் அர்ச்சனை செய்து - சுவாசினி பூஜையும் செய்து

கொண்டாடுவோம். தினமும் ஒரு (11 வயதுக்குள் உள்ள) குழந்தைக்குத் துணிமணிகள் வாங்கிக் கொடுப்போம். சுமங்கலிகளுக்கு முதல்நாள் ஒருவர், 2-ம் நாள் இருவர் என்ற கணக்கில் 9-ம் நாள் ஒன்பது பேருக்கு வெற்றிலை பாக்கு பழத்துடன் ரவிக்கைத் துண்டு அல்லது பாத்திரம் வைத்துக் கொடுப்போம். பண்டிகையின் கடைசி நாளன்று ஒரு சுமங்கலிக்குப் புடைவை வாங்கிக் கொடுப்போம். எதையுமே சிரத்தையுடன் முறைப்படி செய்ய வேண்டுமென்பார் அவர். அவருடைய அறிவுரைகளின் படி செய்தால்தான் எனக்கு ஒரு (மன) நிறைவே ஏற்படும்.

திருமதி மரில்டா விஜயகுமார் : "நான் தென்னமெரிக்காவிலுள்ள பிரேசில் நாட்டைச் சேர்ந்தவள். என் கணவர் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர். ஒரு முறை நாங்கள் சென்னை வந்தபோது நவராத்திரிப் பண்டிகை நேரம். என் மாமியார், "அழகான பலவித பொம்மைகளைப் படிகள் போட்டு அதில் வரிசையாக அடுக்கி வைப்பார்கள். தினமும் பூஜையும் உண்டு. வா. உன்னையும் அழைத்துப் போகிறேன்" என அவருடைய உறவினர்களின் வீடுகளுக்கு அழைத்துச் சென்றார். விளையாடத்தான் பயன்படும் என நான் இது நாள் வரை நினைத்த பொம்மைகள்.... வாவ்! எத்தனை விதங்கள்! எத்தனை அழகாக?! எத்தனை செட்டுகள்? - கல்யாண செட், கடைக்காரர் செட், திருவிழா செட், நாட்டிய செட் - என ஒவ்வொன்றையும் விளக்கினார் என் மாமியார்.

"இது எத்தனை நாள்? எப்படிக் கொண்டாடுவார்கள்? ஏன் இப்படி பொம்மை வைத்து?" என நான் கேள்விகளால் துளைத்தேன். "பொம்மை வைப்பதால் வீட்டில் நிறைய பொம்மை சேரும். அத்தோடு சரஸ்வதி பூஜை செய்வதால் கல்வியோடு கலைகளும் - வளர கடவுள் அருள் கிடைக்கும்" என்று சொல்லி, தினமும் ஒரு சுண்டல் போடுவது, சுமங்கலிகளுக்கு வெற்றிலைப் பாக்குத் தருவது போன்றவைகளையும் விளக்கமாகச் சொன்னார். எனக்கு மிகவும் ஆச்சர்யம். 9-நாளா ஒரு பண்டிகை? அதுவும் வீட்டில்! - என. ஆனால் நண்பர்களுடனும், உறவினர்களுடனும் 'ஒரு கெட்டுகெதர்' போல அமையும் இது எனக்கு மிகவும் பிடித்தது.

பெண் குழந்தைகள் விதவிதமாக அலங்காரம் செய்து கொண்டு புடைவை கட்டிக் கொள்ளும் போது நான் மட்டும் ஏன் வித்தியாசமான ஒரு உடையில்? உடனே நானும் என் மாமியாரின் உதவியுடன் புடைவை கட்டிக் கொண்டேன். ஒரு முறை நவராத்திரியின் போது லண்டன் (நான் அங்குதான் குடும்பத்துடன் இருக்கிறேன்) வந்த என் மாமியார் இருந்த பொம்மைகளைவைத்து நவராத்திரி கொண்டாடி; சரஸ்வதி பூஜையும் செய்தார். அதிலிருந்து நானும் தொடர்ந்து (ஆண்டுதோறும்) கொலு வைக்கிறேன்.

என் மாமியார் நவராத்திரி வரும் நாட்களை முன் கூட்டியே எனக்கு எழுதி விடுவார். நான் கொலுவைக்க ஆரம்பித்த பின்பு என் குழந்தைகளுக்கு வரும் பரிசுப் பொருட்கள் அனைத்துமே பொம்மைதான். என் மாமியார் சொன்னது போலவே நிறைய பொம்மைகள் சேர்ந்துவிட்டன."

திருமதி ஹேமா ஜனார்தன் : "நான் பிறந்து வளர்ந்த ஊரான பொள்ளாச்சியில் நாங்கள் வசித்த பகுதியில் கொலு வைப்பவர்கள் யாருமே கிடையாது. நவராத்திரி கொலுவென்றால் என்ன? அதை ஏன் கொண்டாடுகிறார்கள். அதை எப்படி, எப்போது, எத்தனை நாள் கொண்டாடுவார்கள் என எனக்கு எதுவுமே தெரியாது - நான் திருமணமாகி வரும்வரை பார்த்ததும் கூட கிடையாது. நான் பார்த்த நவராத்திரி



அஜீரணத்தால் வயிறு உப்பிக் கொண்டு அழும் கைக் குழந்தைகளுக்கு, பெருங்காயம் 1 புளியங்கொட்டை அளவு, ஓமம் ஒரு தேக்கரண்டி, மிளகு ஒரு தேக்கரண்டி, சீரகம் ஒரு தேக்கரண்டி, சுக்கு 1 சிறிய துண்டு, உப்பு அரை தேக்கரண்டி, பூண்டு 10 பற்கள், இவற்றுடன் துளசி இலை 10 (எண்ணிக்கை), வில்வ இலை 10, வேப்பங்கொழுந்து 10, தூதுவளை இலை (முள் நீக்கவும்) 10, வெற்றிலை 2 (எண்ணிக்கை).

இவற்றை வைத்து நைஸாகக் கெட்டியாக அரைத்து, பட்டாணி அளவு மாத்திரைகளாகச் செய்து, நல்ல வெய்யிலில் நன்றாக 2, 3 நாட்கள் உலர்த்தி காற்றுப் புகாமல் கண்ணாடி பாட்டிலில் எடுத்து போட்டு வைத்தால், அதில் ஒரு மாத்திரை எடுத்து நன்கு கரைத்து குழந்தைகளுக்கு உடம்பு குளிப்பாட்டிய உடன் கொடுத்தால், அஜீரணம் நெருங்குவதே இல்லை. பெரிய குழந்தைகளுக்கு மூன்று மாத்திரை கொடுத்தால், நல்ல பசி எடுத்து உணவு உட்கொள்ளும். கைக் குழந்தைகளுக்கு இது நல்ல மருந்து.

- யசோதா கிருஷ்ணமூர்த்தி.

தீபாவளி
சிறப்புத் தள்ளுபடி
விற்பனை

# 10% To 50%

- பட்டு சேலைகள்
- உயர்ந்த ரக மில் துணிகள்
- காஞ்சி காட்டன்
- சுரிதார்
- மிடி செட்கள்.
- சூட்டிங்ஸ் ஷர்ட்டிங்ஸ்

**18-10-91 TO 5-11-91**

எங்களது PGP போனஸ் திட்டத்தில் சேர்பவர்களுக்கு பரிசுகளும் உண்டு

For a silken dream



## P.கோவிந்தசாமி பிள்ளை எண்டர்பிரைசஸ்

258, லாயிட்ஸ் ரோடு, கோபாலபுரம்
சென்னை-600086. போன்:-476769.

ADSERVE

---

## SUSWAAD ன்

தீபாவளி ஸ்பெஷல்: ஒக்காரை, தீபாவளி மருந்து Etc., முன் ஆர்டர்கள் 15.10.91 முதல் ஏற்றுக் கொள்ளப்படும்.

1/2, Venkatraman St., T.Nagar, Madras-17.
Phone : 44 14 27 P. P.




NAGESH THEATRE
PONDY BAZAR
HOLYANGELS CONVENT
RAMAN STREET
"SUSWAAD"
VENKATRAMAN STREET
NORTH BOAG ROAD
Dr. Nair Road

Home-made SWEETS & SAVOURIES

Our Specialities :
புழுங்கலரிசி கைமுறுக்கு
தட்டை, சீடை etc.,
(free of Oil)
கோதுமை அல்வா போளி,
லட்டு மைசூர்பாகு, etc.,
கல்யாணம் மற்றும் வைபவங்களுக்கான சீர்வரிசைகள்

Also Available at :
C/o. Unique Electronics
160-Royapettah High Road,
(Opp-தண்ணீர் துறை மார்க்கட்)
Mylapore. Madras-4. Phone : 75490

Free Home Delivery For orders above 8 Kgs.
(within Madras City limits)

ADSERVE



அதுதான் டுடே. இந்தியாவில் இதுபோன்ற ஒன்று கிடைக்கும் விஷயம் எனக்கு தெரியவே தெரியாது. இது ஆற்றல் மிக்கது. அந்தரங்கமான ஒன்று.

மிகச் சிறிய, முட்டை வடிவ வில்லையாகிய இதை பாதுகாப்பு தேவைப்படும் பத்து நிமிடங்களுக்கு முன்பாக உடலில் பொருத்திக் கொண்டால் போதும். அதுவும் அந்தரங்கமாகவும் மிக எளிதாகவும் பொருத்திக் கொள்ளலாம். இன்று கிடைக்கும் கருத்தடை சாதனங்களில் அனைத்தோடும் ஒப்பிடுகையில் இதன் ஆற்றல் ஒரு மணிநேரம் வரை நீடிக்கிறது என்பது ஏறக்குறைய 99-க்கும் அதிகமானவர்களால் உறுதி செய்யப்பட்டுள்ளது.

# அறியாமை எனும் இருளில் இருந்தால், எவ்வாறு சரியான கருத்தடை சாதனத்தை உங்களால் தேர்ந்தெடுக்க முடியும்?

என் சிநேகிதிகளுக்கு எப்போதுமே என்னைக்கண்டால் கேலிதான். டுடே சம்பூர்ந்தமாக என் உற்சாகத்தை கண்கூடாக காணமுடிகிறது என கூறுவார்கள். ஆகையால் கள்ளங்கபடில்லா எந்தப் பெண்ணோடு நான் பேசிக் கொண்டிருந்தாலும் போதும், அவர்கள் உற்சாகம் கரைபுரளும்

நான் இதுபற்றி சிறிதும் கவலைபடமாட்டேன். குதுவாதில்லாத இளம் பெண்களுக்கு கருத்தடை சாதனம் பற்றிய அறிவையும், நம்பிக்கையையும் புகட்டி என் சொந்த அனுபவத்தையும் அவர்களோடு பகிர்ந்து கொண்டு அதனால் அவர்கள் பெறும் முகமலர்ச்சிதான் என் குறிக்கோள்.

அநேக பெண்மணிகள், சரியான கருத்தடை முறையைத் தேடிப்போய் கடைசியில் பழைய முறைகளையே கடைப்பிடிக்கின்றனர். நான் யாரையும் குறை கூற வில்லை. நேரடியாக விஷயத்திற்கு வருகிறேன். ஒரே நாளில் என் வாழ்விலே பெரும் மாற்றத்தை ஏற்படுத்திய ஒன்றைப் பற்றி கூறப்போகிறேன்.

மேலும் எந்த பின் விளைவுகளும் ஏற்படுத்தாது. டுடே என்னுள் ஏற்படுத்திய ஒரே விளைவு, என் முக மலர்ச்சியை மீட்டுத் தந்ததுடன் கான்போரிடமெல்லாம் அதன் புகழ் பாடச் செய்ததும் தான். டுடே

**டுடே** பெண்களின் அந்தரங்கக் கருத்தடை சாதனம்.

கருத்தடை பற்றிய இலவச பிரசுரத்தைப் பெற, சுய முகவரியிட்ட மற்றும் தபால் தலையுடன் கூடிய உறையை கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும். பனின் கெமிக்கல்ஸ் & ஃபார்மாசூடிக்கல்ஸ் இந்தியா லிட்., ஸ்கைபேக் ஹவுஸ் அனெக்ஸ், மரோல், அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 059.




3 ஸ்ட்ரிப்புகளைக் கொண்ட சிக்கனமான பேக்கிலும் கிடைக்கிறது.

nues BT: 168 90 R

கொலுவெல்லாம் திரைப்படங்களில் மட்டும்தான்.

திருமணமாகி சென்னை வந்த பின்புதான் என்னுடன் நெருங்கிப்பழகிய தோழி ஒருத்தியின் வீட்டில்தான் முதன்முதலில் 'கொலு' பார்த்தேன். இயல்பாகவே எனக்கு வரைவது, மணிவேலைகள் செய்வது, பெயிண்டிங், துணிகள் பலவித டிசைன்களில் தைப்பது போன்றவற்றில் நிறைய ஆர்வம் உண்டு. எங்கள் வீட்டில் கொலு இல்லை என்றாலும் என்னுடைய தோழிகளின் வீடுகளில், அக்கம் பக்கத்தாரின் வீடுகளில் - நவராத்திரி சிறப்பாகக் கொண்டாடப்படும் போது நானும் அவைகளில் விருப்பத்துடன் பங்கு கொள்ளுகிறேன்.

பொம்மைகளுக்கு டிசைன் செய்து துணிகள் தைத்துத்தருவது, காகிதங்களில் பலவித டிசைன்கள் வெட்டி, ஒட்டி, பொம்மைகள் செய்து தருவது - இவற்றுடன் எனக்குத் தெரிந்த சுண்டல் வகைகள், இனிப்பு வகைகள் பற்றி அவர்களிடம் பகிர்ந்து கொள்ளுதல் - இத்துடன் கொலு வைத்து அழைக்கும் தோழிகளின் வீடுகளுக்குச் செல்லுதல் - நவராத்திரி ஒன்பது நாட்களும் எனக்கு இப்படி இனிமையாக



ஆனால் மிகவும் வேகமாகப் போய் விடுகிறது.

- வைதேகிதேசிகன்.

# பௌர்ணமி பூஜை

பௌர்ணமி என்பது என்ன தெரியுமா? பதினாறு கலைகளையும் கொண்டு, சந்திரன் பூரணத்துவம் பெறுவதே பௌர்ணமியாகும். பௌர்ணமி தினம் அம்பாளுக்கு மிகவும் உகந்த நாள். ஆம், அன்றைய தினத்தில் அம்பாளை வழிபட்டு வந்தால், அம்பாள் மிகவும் மனம் கனிந்து, பூரிப்படைவாள் என்பது கருத்து.

ஒவ்வொரு மாதத்தில் வரும் பௌர்ணமியும் ஒவ்வொரு வகையில் மகத்துவம் கொண்டிருக்கிறது. இதோ ஒரு கண்ணோட்டம் :

**சித்திரை** : சித்ரா பௌர்ணமி. சித்ர குப்தன் நோன்பு என்று கூறப்படுகிறது.

**வைகாசி** : காஞ்சி மகாமுனி ஜெயந்தி. விஷ்ணு கூர்மாவதாரம் எடுத்த நாள். புத்த பௌர்ணிமாவாகவும் கொண்டாடப்படுகிறது.

**ஆனி** : வட சாவித்திரி விரதம் என்கிற நோன்பு செய்யப்படுகிறது. அன்றைய தினம் என் தானம் செய்வதன் மூலம் சகல பாவங்களும் விலகும் என்பதாக ஐதீகம்.

**ஆடி** : வியாச முனிக்குப் பூஜை செய்யப்படும் நாள். சிலர் யஜுர் உபாகர்மமும் செய்கிறார்கள்.

**ஆவணி** : கேரள நாட்டவர் 'ஓணம்' பண்டிகை கொண்டாடுகிறார்கள். இன்று தான் ஹயக்ரீவர் உற்பத்தி ஆனதாகக் கூறப்படுகிறது. ரக்ஷா பந்தனமும் கொண்டாடப்படுகிறது. அதுமட்டுமல்ல சிதம்பரத்தில் நடராஜருக்கு அபிஷேகம் வெகு விமரிசையாக நடத்தப்படுகிறது.

**புரட்டாசி** : உமா மகேஸ்வரி விரதம் செய்யப்படும் நாள். சந்நியாசிகள் விசுவரூப யாத்திரை மேற்கொள்வதும் இந்த நாளில் தான்.

**ஐப்பசி** : இன்றைய தினம் லக்ஷ்மி இந்திர பூஜை கொண்டாடப்படுகிறது. அன்னாபிஷேகமும் இன்றுதான் செய்யப்படுகிறது.

**கார்த்திகை** : கார்த்திகைப் பண்டிகை நாள் சர்வாலய தீபமும், அண்ணாமலை தீபமும் ஏற்றப்படும் நாள்.

**மார்கழி** : திருவாதிரைப் பண்டிகை கொண்டாடப்படும் நாள். தத்தாத்ரேயன் ஜெயந்தி என்றும் கூறப்படுகிறது. ஆருத்ரா தரிசனம் கிடைக்கும் நாள்.

**தை** : தைப் பூசத் திருநாள். இன்றைய தினம் வடலூர் வள்ளலார் உற்சவமும், திருவிடை மருதூரில் ஆராதனையும் மிகுந்த சிறப்புப் பெற்றது.

**மாசி**: பிரம்மோற்சவத்திற்கு தீர்த்தவாரி கிடைக்கப் பெறும் நன்னாளாக இருக்கிறது. மாசி மகத்தில் நடராஜர் அபிஷேகம்





பிரசித்தி பெற்றது. அதுமட்டுமல்ல இந்த வருடம் கும்பகோணத்தில், ''மாமாங்கம்'' என்று கூறப்படும் மிகப் பெரிய, புண்ணிய உற்சவம் நடைபெறுகிறது. (பன்னிரெண்டு வருடங்களுக்கு ஒருமுறை சர்வ புண்ணிய நதிகளும் ஒன்று கலப்பதாக ஒரு கருத்து.)

பங்குனி : பங்குனி உத்திர வைபவம் வெகு விமரிசையாக நடத்தப்படும் நாள். ஐயப்பன் இன்றுதான் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது, ரங்க பஞ்சமி. அதாவது ஹோலிப் பண்டிகை கொண்டாடுவதும் இன்றுதான்.

இவ்வளவு மகத்துவங்கள் கொண்ட பௌர்ணமி நன்னாளன்று, சிவனைக் குறித்துப் பூஜைகள் செய்யப்பட்டு வருகின்றன. பௌர்ணமி தினம் அம்பாளுக்கு உகந்தது என்று கூறிவிட்டு, சிவனுக்கு ஆராதனை செய்வது எப்படி அம்பாளுக்கு திருப்தி அளிக்கும் என்ற சந்தேகமும் எழுகிறது அல்லவா? இதற்கு விளக்கம் அளித்து, ஒவ்வொரு மாத பௌர்ணமியிலும் எப்படி வழிபட வேண்டும் என்கிற வழி முறைகளையும் விளக்குகிறார், திரு. முத்துக் குமாரசுவாமி சிவாச்சாரியார் அவர்கள்.

சிவனுக்குச் செய்யப்படும் எந்தப் பூஜையும் சக்தி இல்லாமல் செய்யப்படுவதே இல்லை. முக்கியமாக சிவலிங்கத்தை எடுத்துக் கொண்டோமானால், 'பீட சக்தி' என்று கூறப்படும் சக்தி பீடத்தின் மேல்தான் லிங்கமே இருக்கிறது. ஆகையால் சக்தி சிவனுடன் ஐக்கியம்தான்.

குறிப்பிட்ட பௌர்ணமி தினத்தன்று சுவாமி, அம்பாள் இருவரையும் மனமுருகி வேண்டி, வழிபட்டால் அதற்குண்டான பலன்கள் நிச்சயம் உண்டு.

அதனால் ஒவ்வொரு பௌர்ணமியும், சிவசக்திக்கு உகந்த நாளாகும். அவர்களை வழிபடும் முறைகளும், அதன் பயன்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

## சித்திரை :

சித்திரை மாதம், சித்திரை நட்க்ஷத்திரத்தில் பௌர்ணமி வரும். வீட்டில் விக்கிரஹம் உள்ளவர்கள் மருகு புஷ்பத்தையும் குங்குமத்தையும் சேர்த்து அபிஷேகம் செய்தல் வேண்டும். (விக்ரஹம் இல்லாதவர்கள் படங்கள் வைத்துச் செய்யலாம்.) 'பத்மராகம்' (சிகப்பு) என்று கூறப்படும் நவரத்தினக்கல் சேர்ந்த ஆபரணம் இருந்தால் சார்த்தலாம். பூப்போட்ட வஸ்திரத்தைப் போட்டு, கஸ்தூரி பரிமள வாசனையுடன்,

ஸ்லோகம் சொல்ல வேண்டும். நைவேத்தியத்திற்கு மஞ்சள் கலந்த சாதமும், பானகமும், ஏலம், கிராம்பு, பச்சை கற்பூரம் சேர்த்துத் தாம்பூலமும் வைக்க வேண்டும். இப்படிச் செய்வதன் மூலம் குழந்தை பாக்கியம் இல்லாதவர்களுக்கு, அந்தச் செல்வம் உண்டாகும்.

## வைகாசி :

விசாக நட்சத்திரத்தில் வரும் பௌர்ணமி நாளில், நீல வர்ண வஸ்திரம் சார்த்தி, தங்க ஆபரணம் இருந்தால் அணிவித்து, சந்தன அபிஷேகம் அல்லது சந்தனம் கொண்டு அர்ச்சனை செய்ய வேண்டும். பூஜையின் முடிவில் எலுமிச்சம்பழ சாதம், சீரகமும் சர்க்கரையும் கலந்த சாதம், விளாம்பழம் முதலியன நைவேத்தியம் செய்தால் மீண்டும் பிறவி எடுக்காமல் புண்ணியகதியை அடையலாம்.

## ஆனி :

இந்த மாதத்தில் மூலா நட்சத்திரத்தில் பௌர்ணமி வரும். அன்றைய தினம் அம்பாளுக்கு கருப்பு வஸ்திரம் அணிவித்து, முத்து ஆபரணம் அணிவித்து அலங்கரிக்க வேண்டும். வெள்ளெருக்கு, செண்பகப்பூ கொண்டு அர்ச்சனை செய்ய வேண்டும். நைவேதியத்திற்கு முக்கனிகளான மா, பலா, வாழை மட்டுமல்லாமல், உளுத்தம் பருப்புச் சாதமும் இருக்க வேண்டும். இப்படிச் செய்வதன் மூலம் எடுத்த காரியங்கள் எல்லாம் வெற்றியடையும்.

## ஆடி :

உத்திராட நட்சத்திரத்தில் வரும் இந் நாளில் விக்ரஹம் உள்ளவர்கள் பால் கொண்டு அபிஷேகம் செய்யலாம். சிவப்பும், மஞ்சளும் கலந்த ஆடை அணிவித்து மல்லிகைப் பூவையும், அருகம் புல்லையும் கொண்டு அர்ச்சனை செய்ய வேண்டும். வசதி உள்ளவர்கள் சிகப்புக்கல் அணிவிக்கலாம். பூஜை முடிந்த பின் பழங்கள் கலந்த சாதமும், ஏலம், லவங்கம் கலந்த பால் சாதமும் வைத்து நைவேத்தியம் செய்ய வேண்டும். இப்படிச் செய்வதன் மூலம் புண்ணியகதியை அடைய முடியும்.

## ஆவணி :

ஆவணியில் 'அவிட்டம்' நட்சத்திரத்தில், கடன் தொல்லையைப் போக்குவதற்காக அன்றைய தினத்தில் பூஜை செய்யப்படுகிறது. நாட்டுச் சர்க்கரை கொண்டு அபிஷேகம் செய்து, நாலு வித வர்ணங்கள் கொண்ட ஆடையை அணிவிக்க வேண்டும். வசதிப்பட்டவர்கள் வைடூரியம் கலந்த ஆபரணத்தைப் போட்டு வைக்கலாம். ஸ்ரீபரணி பூவால் அர்ச்சனை செய்து, நெய் சாதத்தை நைவேத்தியம் செய்ய வேண்டும்.

## புரட்டாசி :

சகல சௌபாக்கியமும், சம்பத்தும் உண்டாவதற்காகச் செய்யப்படும் புரட்டாசி பௌர்ணமி பூஜை, உத்திரட்டாதி நட்சத்திரத்தில் வருகிறது. விக்ரஹம் உள்ளவர்கள் பசு நெய்யினால் அபிஷேகம் செய்யலாம். நாலு வர்ணங்கள் கொண்ட வஸ்திரம் அணிவித்து, மல்லிகைப் பூவால் அர்ச்சனை செய்ய வேண்டும். பிரவாள ரத்னக்கல் கொண்ட ஆபரணத்தை (வசதி படைத்தவர்கள்) அணிவித்து அலங்காரம் செய்யலாம். வெல்லத்தால் செய்யப்பட்ட அப்பம், அதிரஸம், வடை (விக்கிரஹம் இல்லாவிட்டால் மேற்சொன்ன பண்டங்களை பசும் நெய்யினால் தயாரிக்கலாம்) இளநீர் ஆகியவற்றால் நைவேத்தியம் செய்ய



ஒரு மீடியம் சைஸ் சிகப்புக் கலர் பந்து வாங்கவும். அதன் மீது சிறிது பசை தடவி ஜிகினாத் தூளைத் தூவவும். நன்றாகக் காய்ந்ததும், மேல் பகுதியில் 2'' அகலத்தில் பச்சைக் கலர் பேப்பரை வட்டமாக வெட்டி ஓரத்தைக் கூராக வெட்டி (ஸ்டார் போல்) பந்தின் மேல் பகுதியில் நடுவில் ஒட்டவும். டியூப் ஒயர் பச்சைக் கலரில் 1'' நீளம் வெட்டி, பச்சைப் பேப்பர் மீது குண்டூசியால் காம்பு போன்று குத்தவும். இப்பொழுது பளபளப்பான அழகான பிளாஸ்டிக் தக்காளிப் பழம் தயார். இது போல் 5 அல்லது 6 செய்து ஒரு ட்ரேயில் வைத்துக் கொலுவில் வைக்கலாம்.

- பாலா.

வேண்டும். நாயுருவி வேர் கிடைத்தால் அர்ச்சனை செய்யும் பொழுது சேர்த்துச் செய்ய லாம்.

## ஐப்பசி :

அசுவனி நட்க்ஷத்திரத்தில் இந்த மாதத்தில் பௌர்ணமி கூடி வரும். இன்றைய தினத்தில் அன்னாபிஷேகம் உகந்தது. வெண்ணெய் கொண்டும் அபிஷேகம் செய்யலாம். இதற்குப் ப்ரத்யேக நிறம் கொண்ட வஸ்திரம் தேவையில்லை. இந்திர நீலக் கல் கொண்டு அலங்காரம் செய்யலாம். மகிழம்பூ, வில்வம், பாதரி பூ கொண்டு அர்ச்சனை செய்தால் நல்லது. மிளகு, சம்பா சாதமும், கரும்புச்சாறும் கொண்டு நைவேத்தியம் செய்வதன் மூலம் எல்லா காரியத்திலும் விஜயம் உண்டாகும்.

## கார்த்திகை :

கிருத்திகை நட்சத்திரம் கூடிய தினத்தில் பௌர்ணமி வரும். அன்றைய தினம் பூப் போட்ட வஸ்திரம் தரிவித்து, ருத்திராட்ச மாலை அணிவிக்க வேண்டும். சொர்ணம் இருந்தாலும் அணிவிக்கலாம். அகல் விளக்கை நெய் தீபத்தில் ஏற்றி, வெண் பொங்கல், நெல் பொரி இரண்டும் நைவேத்தியம் செய்ய வேண்டும். இதனால் ராஜ்ய பரிபாலனம் நன்கு நடந்து அனைவருக்கும் நலன் உண்டாகும்.

## மார்கழி :

இந்த மாதத்தில் மிகவும் காலை வேளையில் பூஜை செய்தல் நல்லது. திருவாதிரை நட்க்ஷத்திரமன்று பௌர்ணமி வரும். பஞ்சாமிர்த அபிஷேகம் செய்யலாம். வெள்ளை நிற வஸ்திரம் அணிவித்து, தாமரை புஷ்பம் கொண்டு அர்ச்சனை செய்யலாம். நவரத்தினத்தில் ஒன்பது கற்கள், ஐந்து கற்கள் அல்லது மூன்று கற்கள் கொண்ட அணிகலன் கொண்டு அலங்காரம் செய்யலாம். அன்றைய தினம் களி நைவேத்தியம் செய்வினால் எல்லா வித அனுக்கிரஹமும் உண்டாகும்.

## தை :

பூச நட்க்ஷத்திரத்தில் அன்று தேன் கொண்டு அபிஷேகம் செய்ய வேண்டும். மஞ்சளும், சிகப்பும் கலந்த ஆடையை அணிவித்தல் வேண்டும். வில்வ புஷ்பம், வெள்ளைத் தாமரை, நந்தியாவட்டை ஆகிய புஷ்பங்கள் கொண்டு அர்ச்சனை செய்ய வேண்டும். பாயசம் நைவேத்தியம் செய்வதால் ஆயுசு விருத்தி உண்டாவதாகக் கூறப்படுகிறது.

> ஒவ்வொரு நல்ல காரியமும், நல்ல எண்ணமும் முகத்தில் ஓர் அழகை தேஜஸைக் கொடுக்கிறது.
>
> - ரஸ்கின்
>
> - விஜயா சீனிவாசன்.

## மாசி :

இந்த மாதத்துப் பௌர்ணமி 'மகம்' நட்க்ஷத்திரத்தில் உண்டாகிறது. வெள்ளையும், நீலமும் கலந்த ஐந்து வர்ண வஸ்திரம் அணிவித்து, ஸ்படிக மணி மாலை அணிவித்து அலங்காரம் செய்யலாம். துளசி கொண்டு அர்ச்சனை செய்ய வேண்டும். நைவேத்தியத்திற்கு சர்க்கரைப் பொங்கல் படைக்க வேண்டும். இப்படிச் செய்வதால் சிவதீட்சைப் பெற்ற பலன் வந்து சேரும்.

## பங்குனி :

'உத்திரம்' நட்க்ஷத்திரத்தில், தயிர் அபிஷேகம் செய்வது இந்நாளில் சிறந்தது. மஞ்சள் நிற வஸ்திரம் அணிவித்து, கோமேதகம் கலந்த ஆபரணத்தால் அலங்கரித்து அழகு பார்க்கலாம். தாமரைப் பூவினால் அர்ச்சனை செய்தல் வேண்டும். பிறகு சாதம், பருப்பு, நெய் சேர்த்து நைவேத்தியம் செய்வதால் புண்ணியகதியை அடைய முடியும்.

மேலே சொல்லியிருப்பதைக் கண்டு நடுத்தரக் குடும்பத்தினர் தங்களால் முடியுமோ, முடியாதோ என்று வருத்தப்படவே வேண்டாம். ஆத்மார்த்தமாக, முழுமனத்துடன் செய்யப்படும் பூஜை நிச்சயமாக திருப்திகரமாக அம்பாளால் ஏற்று கொள்ளப்படும். பொன் வைக்கப்படும் இடத்தில் பூவை வைத்து தாராளமாகச் செய்யலாம். அலங்காரம் செய்து மகிழ்வதும், மற்ற செலவுகளும் அவரவர்களின் வசதியைப் பொறுத்ததுதான். மனதை ஒரு நிலைப் படுத்தி, குடும்பத்திலும் அமைதியையும் சுபிட்சத்தையும் ஏற்படுத்தவே பூஜை முறைகள். ஆகவே பூஜை காரியங்களில் மனமொன்றி, வேண்டி நின்றால் கிடைக்காததும் உண்டா?

**- மாலதி சந்திரசேகரன்**

ஏஜெண்டுகள் கவனத்திற்கு!!!



அக்டோபர் முதல் வெளி வருகிறது.

# பிலிமாலயா

சினிமா இதழ் - மாதம் இருமுறை

தொடர்பு கொள்க:-

நிர்வாகி:

'பிலிமாலயா' 96, காம்தார் நகர், மகாலிங்கபுரம்,

சென்னை - 600 034.

போன்: 477992

தபால் பெட்டி எண்: 1251

தந்தி: FILM SPEAK

டெலக்ஸ் : 041-25158 BALA IN

பேக்ஸ் : 91-44-825 0550.

N.M. Jinnaa

"பத்திரிகை ஏஜெண்டுகள் தங்கள் ஏஜென்ஸி விபரங்களுடன் தொடர்பு கொள்க"

## மாதம் ஒரு பொருளைத் தெரிந்து கொள்ளலாமே

இந்தப் பகுதிக்காக, மிக்ஸிகளைத் தயாரித்து வரும் 'பட்டர்ஃப்ளை ஹோம் அப்ளையன்ஸஸ்' நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் திரு. வி. எம். லட்சுமி நாராயணனையும், மேல் நிலைச் செயலாளரான திரு. கே. ராஜேந்திரனையும் சந்தித்தோம். அவர்கள் அளித்த விவரங்களும், யோசனைகளும் கீழே தொகுக்கப் பட்டுள்ளன.

மிக்ஸியைப் பொருத்தும் போது நாம் பல விஷயங்களைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

★ மிக்ஸியை நேரடியாக சூரிய ஒளி படும் இடத்தில் வைக்க வேண்டாம்.

★ மிக்ஸியின் மின் இணைப்பு ஒயர் சூடான எந்தப் பொருளுக்கருகிலும் இருக்கக் கூடாது.

★ கையாள்வதற்குச் சுலபமான வகையில் போதிய உயரத்தில் மிக்ஸியை வைப்பது நல்லது.

★ மிக்ஸியைச் சமமான பரப்பின் மீது வைக்க வேண்டும்.

★ எந்தக் காரணம் கொண்டும் மெல்லிய ப்ளாஸ்டிக் விரிப்பு அல்லது துணி ஆகியவற்றின் மீது மிக்ஸியை வைக்க வேண்டாம். அப்படி வைத்தால் மிக்ஸியின் அடிப்பரப்பில் காற்றோட்டத்திற்காக பொருத்தப்பட்டுள்ள துளைகளின் மீது அவை பரவி, மிக்ஸியின் மோட்டாரை உஷ்ணம் அடையச் செய்து விடும்.

★ மிக்ஸியின் ஒயர் நீண்டு தொங்காமல் பார்த்துக் கொள்ளுங்கள். நம் கை, காலே இடறக் கூடும். குழந்தைகள் இருக்கும் இடத்தில் இதை நிச்சயம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

★ முதல் முறை மிக்ஸியைப் பயன்படுத்துவதற்கு முன் 'ஜாடிப் பகுதியிலுள்ள' சக்கரங்களும் 'மோட்டார் பகுதியிலுள்ள' சக்கரங்களும் தடையின்றி சுற்றுவதை உறுதி செய்து கொள்ள வேண்டும். (மிக்ஸியைப் பொதுவாக இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஜாடி, மூடி, ப்ளேடு ஆகியவை அடங்கிய கழற்றக் கூடிய பகுதியை 'ஜாடிப் பகுதி' என்றும், கீழே உள்ள மிக்ஸிக்கான மோட்டார், சக்கரம், வெவ்வேறு வேகங்களில் மிக்ஸியை இயக்கக்கூடிய ஸ்விட்சு ஆகியவை அடங்கிய பகுதியை 'மோட்டார் பகுதி' என்றும் இந்தக் கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறோம்). இரு சக்கரங்களும்





## இதுதான் நம்பிக்கை!

கைகொடுத்து காப்பாற்ற தந்தையுண்டு என்று
கலவரமின்றி குளத்தில் தாவும் குறும்புப்பையன்
— இதுதான் நம்பிக்கை!
உலகத்திலேயே அழகான கண்களை உற்றுப்பார்த்தால்
உள்ளே தெரியும் ஒளி — இதுதான் நம்பிக்கை!
நாளை என்பது நிச்சயம்! ஆனால் நாளை நல்லதாய்
விடியுமென்று வாழ்வது — இதுதான் நம்பிக்கை!
நம்பிக்கை என்பது தொன்று தொட்டு வரும்
*பாரம்பரியம் — இதுதான் உபாஸனா!*
உங்கள் கைகளைபிடித்து சாலையை கடக்கும் கண்
பார்வையற்றவரின் ஊன்றுகோல் — இதுதான் நம்பிக்கை!
"நாமத்தை சொன்னால் போதும் நந்தி விலகும்!"
என்று நந்தன் தில்லைக்குப் போனது — இதுதான் நம்பிக்கை!
"நலமாய் வாழ்வோம்" என நம்பி கைபிடித்து
நங்கை ஏழடி நடப்பது — இதுதான் நம்பிக்கை!
இரண்டு பேர்களுக்கிடையே பகிர்ந்து கொள்ளும்
இணையற்ற நெருக்கம் — இதுதான் நம்பிக்கை!
நம்பிக்கை என்பது தொன்றுதொட்டு வரும்
*பாரம்பரியம்! — இதுதான் டிவிளஸ்!*
கவனமாய் கல் மீது கல் வைத்து கட்டும் மாளிகை!
கணப்பொழுது போதும் தரையோடு சாய்க்க! —
இதுதான் நம்பிக்கை!
சில உறவுகளுக்கு புதிய பொருளை தருவது
— இதுதான் நம்பிக்கை!
*நம்பிக்கை! இதுதான் உபாஸனா!*
*இதுவே தனிச்சிறப்பை இவர்களுக்களிக்கிறது!*



உபாஸனா
ஃபைனான்ஸ் லிமிடெட்

610, மவுண்ட் ரோடு, சென்னை 600 006 தொலைபேசி : 860437

நம்பிக்கை என்றால் இவ்வளவே!

Stimulus/UFL/98/91

தடையின்றிச் செயல்படுவதை மிக்ஸியைப் பயன்படுத்துவதற்கு முன் எப்படி உறுதி செய்து கொள்வது என்கிறீர்களா? மின் இணைப்பு கொடுப்பதற்கு முன் இரு சக்கரங்களையும் கையால் சுற்றிப் பார்த்து, அவை தடங்கலின்றி இயங்குகின்றனவா என்பதை உறுதி செய்து கொள்ளலாம்.

மிக்ஸியைப் பயன்படுத்தத் தொடங்கிய பிறகு கவனத்தில் கொள்ள வேண்டிய விஷயங்களும் உண்டு.

மின்சாரத்தினால் ஏற்படும் ஆபத்துக்களைத் தவிர்க்க மிக்ஸியின் மோட்டார் பகுதியையோ, ஒயரையோ எக் காரணம் கொண்டும் நீரிலோ, பிற திரவங்களிலோ நனைக்க வேண்டாம்.

சுற்றிக் கொண்டிருக்கும் ப்ளேடுகளை எக்காரணம் கொண்டும் தொட வேண்டாம். ப்ளேடுகள் கூர்மையானவை.

மிக்ஸியை 'ஆன்' செய்து விட்டு வேறு வேலையைக் கவனிக்கச் சென்று விடாதீர்கள். சில பிரச்னைகளை உடனடியாகக் கவனிக்க வேண்டியிருக்கும். உதாரணமாக ஓவர்லோடு ஏற்றினால் மிக்ஸி பாதியில் நின்று விடும். அல்லது சில சமயம் கடகட வென்று 'ஜாடிப் பகுதி'யில் ஒருவித அதிர்வு ஏற்படலாம். 'வாக்குவம் ஷு' என்ற சிறு ரப்பர் பகுதிகள் மிக்ஸியின் 'கால்களில்' பொருத்தப்பட்டிருந்தால் இந்த அதிர்வுகள் ஏற்படுவதைத் தடுக்கலாம். காரணம் மிக்ஸி வைக்கப்பட்டுள்ள பரப்பில் இவை ஒட்டிக் கொள்ளும் என்பதுதான். உங்கள் மிக்ஸியில் ஏற்கெனவே இந்த வகை ரப்பர் ஷுக்கள் இல்லையென்றால் கூட வாங்கிப் பொருத்திக் கொள்ளலாம்.

ஆரம்பித்த உடனேயே மிக்ஸியை முழு வேகத்தில் வைக்க வேண்டாம். குறைந்த வேகத்தில் தொடங்கி, பிறகு 2, 3 என்று கொஞ்சம் கொஞ்சமாக ஸ்விட்சை இயக்கி வேகத்தைக் கூட்டுவது நல்லது.

சில வீடுகளில் மிக்ஸி ஜாடியின் மூடியைப் பயன்படுத்துவதில்லை. இது தவறான பழக்கம். குழந்தைகள் கையை உள்ளே விட்டு விடும் ஆபத்து உண்டு என்பதுடன், உள்ளே அரைபட்டுக் கொண்டிருக்கும் சாமான் வெளியே சிந்திவிடும் வாய்ப்பும் அதிகம்.

ஒரு மிக்ஸிக்கான 'மோட்டார் பகுதி' யில் வேறொரு ப்ராண்ட் மிக்ஸிக்கான 'ஜாடிப் பகுதி'யைப் பொருத்துவதைத் தவிர்க்கவும். அப்படிப் பொருத்தினால் 'ஜாடிப் பகுதி'யின் கீழ்ப்புறத்தில் உள்ள 'கப்ளர்கள்' உடைந்து போகலாம்.

பட்டர்ஃப்ளை போன்ற மிக்ஸிகளில் ஊறவைத்த பொருள்களை அரைப்பதற்கும், உலர்ந்த பொருள்களை அரைப்பதற்கும் தனித்தனி ஜாடிகள் தருகிறார்கள். சுமீத் போன்ற மிக்ஸிகளில் ஒரே ஜாடியும், அதில் பொருத்திக் கொள்ள வெவ்வேறு வகை ப்ளேடுகளும் தருகிறார்கள். உலர்ந்த சாமான், ஊறவைத்த சாமான் இரண்டையும் அரைக்க வேண்டுமென்றால் முதலில் உலர்ந்தவற்றை அரைத்துக் கொள்வது நல்லது.

மிக்ஸி ஜாடி எவர்சில்வரில் செய்யப்பட்டிருக்கும். இரும்பு, நிக்கல், குரோமியம் ஆகிய மூன்றும் கலந்ததுதான் எவர்சில்வர். நிக்கல் சுமார் 8%, குரோமியம் 12-18% என்று இருந்தால் நல்லது. நிக்கல் சற்று விலை அதிகமானது. எனவே மிகக் குறைந்த நிக்கல் அளவு கொண்ட எவர்சில்வரில் மிக்ஸி ஜாடி



தயாரித்திருந்தால் காலப்போக்கில் அரிப்பு ஏற்பட்டு, அது தரம் குறைந்த எவர்சில்வர் என்பது தெரியவரும். பார்த்தவுடன் எவர்சில்வரின் தரத்தைக் கண்டுபிடிக்க நம்மால் முடியாதாகையால் தரம் வாய்ந்த நிறுவனங்களின் தயாரிப்பை வாங்குவதே புத்திசாலித்தனம்.

தயிரிலிருந்து வெண்ணெய் எடுக்க, முட்டை அடிக்க ஆகியவற்றிற்கு 'விப்பர்' என்ற பகுதி மிக்ஸியில் இருக்கும். சில வகை மிக்ஸிகளில் இந்த விப்பர் புஷ் பட்டன் வடிவில் இருக்கும். வேறு சிலவற்றிலோ வேகத்தை மாற்றப் பயன்படுத்தும் ஸ்விட்சை இடவலமாக (ஆன்டி-க்ளாக் வைஸ்) திருகினாலே மிக்ஸி விப்பரின்

பணியைச் செய்யும். அதாவது அப்போது ப்ளேடு வட்டவடிவில் சுற்றாமல் அரை வட்டமாக மேலும் கீழும் செல்லும்.

45 நிமிடங்களிலிருந்து ஒரு மணி நேரம் வரை மிக்ஸியைத் தொடர்ந்து இயக்கலாம் என்று விற்பனையாளர்கள் கூறுவார்கள். என்றாலும் 30 நிமிடங்கள் இயக்கியவுடன், மிக்ஸியை ஆஃப் செய்து விட்டு, குறைந்தது பத்து நிமிடங்கள் பொறுத்து அதை மீண்டும் இயக்குவதுதான் நல்லது. அதே போல் மிக்ஸியின் அடிப்பக்கத்தில் காற்றோட்டத்திற்காக விடப்பட்டுள்ள துளைகளிலிருந்து சூடான காற்று தொடர்ந்து வந்தால் உடனே மிக்ஸியை ஆஃப் செய்து விட வேண்டும்.

குறிப்பிட்ட அளவுக்கு மேல் ஜாடியில் அரைக்க வேண்டிய சாமானை நிரப்ப வேண்டாம். இட்லி, தோசை ஆகியவற்றுக்காக ஊறவைத்த அரிசி, பருப்பை மிக்ஸியில் அரைப்பதானால் ஒரு தடவைக்கு சுமார் கால் ஜாடி அளவுக்கு மட்டுமே போட்டு அரையுங்கள். சுமாரான அரைப்புக்கு நான்கு நிமிடங்களும், நைஸாக அரைபடுவதற்கு ஆறு நிமிடங்களும் தேவைப்படும். உலர்ந்த சாமான்களை அரைக்கும் போது (மசாலாப் பொடி, மிளகாய், மிளகு, தனியா போன்றவை) ஜாடியில் அதிகபட்சம் மூன்றில் ஒரு பங்கு மட்டுமே நிரப்பி அரைக்கவும். அரை நிமிடத்திலிருந்து இரண்டு நிமிடங்கள் வரை அரைக்கப் பிடிக்கும்.

வீட்டில் பூச்சி மருந்து அடிக்கும் போது மிக்ஸியின் எந்தப் பகுதிலும் அது படாதவாறு நன்றாக மூடி வைத்து விடவும். இல்லையென்றால் பூச்சி மருந்து (பின்பு அரைப்பதற்காக மிக்ஸியில் இடப்படும்) உணவுப் பொருள்களில் கலந்து விடும் அபாயம் உண்டு.

மிக்ஸியைச் சுத்தம் செய்யும் போது கீழ்க்கண்டவற்றை நினைவில் வைத்திருங்கள்.

சுமார் பாதி ஜாடி அளவுக்கு வெந்நீரை விட்டு, சிறிது டிட்டெர்ஜென்ட் பவுடரையும் அதில் சேர்க்கவும். மிக்ஸியை இப்போது சில நொடிகளுக்கு இயங்க வைக்கவும். இதனால் ப்ளேடு அல்லது சக்கரத்தின் அடியில் ஏதாவது உணவுப் பொருள்கள் சிக்கிக்கொண்டிருந்தால் அவை வெளியேறி விடும். பிறகு ஒருமுறை வெறும் நீரைக் கொட்டி சுத்தம் செய்யவும். ஜாடியின் மூடி, காஸ்கட் ஆகியவற்றையும் நீரில் கழுவ வேண்டும். ப்ளேடுகளைச் சுத்தம் செய்யும் போது கூடுதல் கவனம் தேவை. குழாயின் கீழ் நேரடியாக வைத்து அவற்றைச் சுத்தம் செய்வது நல்லது. 'மோட்டார் பகுதி'யின் வெளிப்புறத்தையும், மேல்புறத்தையும் முதலில் நீரில் நனைத்த துணியால் துடைக்கலாம். பிறகு சுத்தமான, மெல்லிய, உலர்ந்த துணியால் துடைக்கலாம். கரடு முரடான துணி மற்றும் சுத்தம் செய்யும் பொடிகள் மிக்ஸிப் பரப்பில் கீறல்களை உண்டாக்கலாம். பயன்படுத்தாதபோதும், சுத்தம் செய்யும் போதும் மின் இணைப்பிலிருந்து மிக்ஸியைத் துண்டித்து விட மறக்க வேண்டாம்.

''மிக்ஸி இப்போது ஆடம்பரப் பொருள் அல்ல. அது அத்தியாவசியமாகி விட்டது என்று சொல்லலாம். மேலும் அடிக்கடி மாற்றலாகும் உத்தியோகம் கொண்டவர்களுக்கு மிக்ஸியை எடுத்துப் போவது சௌகரியம் .நாங்கள் மிக்ஸியின் எல்லா பாகங்களையும் ஒரே கூரையின் கீழ் தயாரிக்கிறோம். அதனால் தரத்தைப் பாதுகாக்க முடிகிறது. ஃபெதர் டச் (feather touch). ரிமோட்டால் இயங்கும் முறை, டைமரை இணைத்தல் (இதில் குறிப்பிட்ட நேரத்திற்குப் பிறகு தானாகவே மிக்ஸி ஆஃபாகி விடும்) ஆகியவற்றுடன் மிக்ஸி தயாரிக்கவும் ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறோம்'' என்கிறார் திரு. லட்சுமிநாராயணன்.

- ஜி. எஸ். எஸ்.

---

மங்கையர் மலரில் அரைக்கீரைத் தண்டை தொட்டியில் வைத்தால் துளிர்த்து விடும் என்பதைப் பற்றிப் பார்த்தேன். அது போலவே நாம் சாம்பார் பவுடருக்குக் கொத்துமல்லி சுத்தம் செய்யும் பொழுது கடைசியில் மண்ணுடன் கூடிய மல்லியைத் தூக்கி எறியாமல் தொட்டியில் போட்டுத் தினம் தண்ணீர் விட்டு வந்தால் அருமையான கொத்துமல்லி ரசத்துக்குக் கிடைக்கும்.

இது போன்று வற்றல் மிளகாய் விதையைத் தொட்டியில் போட்டு வைத்தாலும் மிளகாய்ச் செடி வரும். பொதினாவையும் தண்டை வைத்தால் நாம் வெளியே வாங்க வேண்டிய அவசியம் இல்லாமல் நிறைய வரும்.

பொங்கலுக்கு மஞ்சளைக் காசு கொடுத்து வாங்குவதற்குப் பதில் தொட்டியில் முளையுடன்கூடிய மஞ்சள் போட்டு வைத்தால் ஒவ்வொரு வருடமும் வீட்டு மஞ்சளையே உபயோகிக்கலாம்.

- ராஜம் கிருஷ்ணமூர்த்தி.



# குழந்தைகளை வழிநடத்தும் நவராத்திரி

**பெண் குழந்தைகள் காணாமல் போவதும் நமது கலாசாரத்தில் இருந்து விலகிப் போவதும் அதிர்ச்சியாக இருக்கிறது. குழந்தைகளை நாம் செய்யும் ஒவ்வொரு நற்செயலிலும் பங்குபெறச் செய்ய வேண்டும். நவராத்திரி அதற்கு எவ்வளவு துணை செய்கிறது என்பதை வலியுறுத்துகிறது இக்கட்டுரை.**

இப்போதெல்லாம் முந்தைய தலைமுறைப் பெற்றோர்களைப் போல அதிகம் கண்டிப்புக் காட்டுவதில்லை நமது தலைமுறையினர். இளைய தலைமுறையை அதன் போக்கிலேயே வளரவிட்டு விடுகின்றனர். இது தவறான முறையில்லை. ஆயினும்; அடிப்படையான விஷயங்களைக் குழந்தைகள் உணர வேண்டும். சிறிய தனிக் குடும்பமே பெரும்பாலும் இருக்கின்ற இக்காலத்தில் குழந்தைகள் பிறருடன் கலந்து பழக வாய்ப்பு குறுகிவிட்டது. பள்ளி, படிப்பு, வீட்டு வேலை... ட்யூஷன் என்று அவர்கள் உலகமும் தனி உலகமாகச் சுழல்கிறது.

குழந்தைகளுக்கு உறவினருடனும், அக்கம்பக்கத்தாருடனும் பேசிப் பழகும் வாய்ப்புகள் அரிதாகவே கிடைக்கின்றன. நவராத்திரி கொலு வைப்பது என்பது முற்காலத்தில் குழந்தைகளுக்குச் சந்தோஷமளிப்பதாக இருந்தது. ஆனால் இப்போது பெரும்பான்மையான பள்ளிகளில் அச்சமயத்தில்தான் காலாண்டுத் தேர்வுகளை வைத்து விடுகின்றனர். குழந்தைகளே கொலு வைப்பதிலும் வருவோரைக் கவனிப்பதிலும் விருப்பம் காட்டினால் போதும், பெற்றோருக்குப் பிடிப்பதில்லை. ''போ, போ, உன் ரூமுக்குப் போ. நாளைக்குக் கணக்கில் சுழிதான் வாங்குவாய்!'' என்று அர்ச்சனையுடன் அவனைத் துரத்தி விடுவார்கள்!



ஆனால் நவராத்திரி குழந்தைகளுக்குப் பல வகையிலும் அவர்களை 'ரிலாக்ஸ்' பண்ணிக் கொள்ளவும், நமது பெருமை மிகுந்த பாரதக் கலாசாரத்தை உணரவும் வழி வகுக்கிறது.

## மூளைக்கும் ஓய்வு

நவராத்திரி கொலு பொம்மைகளைப்

# வளம் பெற வாருங்கள்!

## அனுபவம் மிக்கவர்களின் துணையுடன் வளர்ச்சிப் பாதையில் அடியெடுத்து வையுங்கள்.

உயரும் விலைவாசிகள், பணவீக்கம், பெருகிக் கொண்டே போகும் வங்கி வட்டி விகிதங்கள்...

சமாளிக்க வழியே இல்லையா? ஏன் இல்லை? இதோ உங்கள் முன்னே ஸ்ரீராம் சிட்ஸ். எதிர்பாராமல் ஏற்படக்கூடிய வருங்காலப் பிரச்னைகளிலிருந்து உங்களை மீட்டுக் கொள்ள ஒரு பொன்னான வாய்ப்பு.

3,50,000 பேர் பங்கு பெற்றுள்ள மகத்தான மக்கள் இயக்கம் அது. அதில் நீங்களும் ஒருவராக இடம் பெற உதவுவதற்காகவே இந்த 10 நாள் விஜயதசமி ஸ்ரீராம் விழா.

எல்லா ஸ்ரீராம் அலுவலகங்களிலும் உங்களுக்கு எதிர்பாராத பரிசுகள் காத்திருக்கின்றன. ஒவ்வொரு நாளும் போட்டிகள். ஒவ்வொரு நாளும் பரிசுகள். இந்த 10 நாட்களில் நீங்கள் வெல்லுவதற்காக மொத்தம் 1710 பரிசுகள்.

வென்றிடுவீர் பரிசுகளை, சேர்ந்திடுவீர் ஸ்ரீராம் சிட்டில். அது பல வகையான பிரச்னைகளுக்கும் தீர்வு காண உதவும் நிறுவனம்.

ரூ.75,000 வரை மதிப்புள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு பொதுத்துறை, தனியார் துறை, அரசு அல்லது அங்கீகரிக்கப்பட்டுள்ள நிறுவனங்களில் பணியாற்றும் 3 பேர் உத்திரவாதம் அளித்தாலே போதும். வேலையிலிருக்கும் பெண் சந்தாதாரர் ரூ.15,000 வரை மதிப்புள்ள சீட்டுகளை எடுக்கும்போது, அவருடைய கணவருடைய உத்திரவாதமே போதுமானது.

| | சீட்டின் மதிப்பு | சந்தாதாரர் பரிசு |
|---|---|---|
| 1. | 200 × 40 = 8,000 | டிப்ளோமட் மெலமைன் கர்ரி பௌல் |
| 2. | 250 × 40 = 10,000 | 5 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 3. | 500 × 30 = 15,000 | விட்வேர் பேக்கிங் டிஷ் |
| 4. | 625 × 40 = 25,000 | ஹால்மார்க் ஸ்டெயின்லெஸ் மல்டிபர்ப்பஸ் ஃப்ரை பான் |
| 5. | 500 × 60 = 30,000 | காளி ரவுண்ட் மீல்ஸ் ப்ளேட் |
| 6. | 1,000 × 50 = 50,000 | காளி ஃப்ரெஞ்ச் ஃப்ரை |
| 7. | 1,250 × 60 = 75,000 | பிரிதி 2.5 லிட்டர் குக்கர் |
| 8. | 1,000 × 100<br>2,500 × 40 = 1,00,000 | ஹால்மார்க் ஸ்டூ பான் |
| 9. | 4,000 × 50 = 2,00,000 | 25 கிராம் × 2 வெள்ளிப் பதக்கங்கள் |
| 10. | 10,000 × 30 = 3,00,000 | 2 கிராம் தங்கக் காசு |
| 11. | 20,000 × 50 = 10,00,000 | 8 கிராம் தங்கக்காசு |

* நுழைவுக்கட்டணம் தனி

# ஸ்ரீராம் சிட்ஸ் அளிக்கும் விஜயதசமி 10-நாள் விழா!


1


2


3


4


5


6


8



7


9


10


11

## அறிமுகப்படுத்துவோர் பரிசு

| |
|---|
| 1. காளி ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டிரே — 2 |
| 2. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சர்வீஸ் பௌல் (சிறியது) |
| 3. ஏசியன் ஃபுட் ஃப்ரெஷ் பௌல் |
| 4. ஏசியன் 'மானர்க்' வாட்டர் ஜக் |
| 5. காளி மில்க் டம்ப்ளர்கள் — 2 |
| 6. காளி ஆப்பிள் பௌல், மூடியுடன் |
| 7. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சர்வீஸ் பௌல் (பெரியது) |
| 8. மில்டன் கூல் கெக் — 2.5 லிட்டர் |
| 9. 20 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 10. 25 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 11. மில்டன் மார்க்கோபோலோ ஸ்டெயின்-லெஸ் ஸ்டீல் வாக்யூம் ஃப்ளாஸ்க் |


1


2


3



5


4


6


7


8


11


9


10






**ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE TILL 31-10-91.**

**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.**

நிர்வாக அலுவலகம் :
"சுப்பிரமணியன் பில்டிங்",
1, கிளப் ஹவுஸ் ரோடு,
சென்னை - 600 002.
போன்: 474451/475536/470400/473932.

ADWAVE/SCI/4293

பரணிலிருந்து எடுத்து வைக்கும் பொழுதே, குழந்தைகள் மனத்தில் குதூகலம் பிறக்கும். ''ஐ , ராமர் பொம்மை, செட்டியார் பொம்மை'' என்று கையில் எடுத்துக் கொண்டு ஆனந்தமாக வளைய வருவார்கள். ''டேய், பொம்மையைக் கீழே வை, போட்டு உடைத்தால் கொன்னுடுவேன்!'' என்று அதட்டி உருட்ட வேண்டியதுதான். குழந்தையின் உற்சாக வெள்ளம் வடிந்து போகும். காற்றுப் போன பலூனாகச் சுருண்டு விடுவான்!

கொலு வைப்பது என்பது குழந்தைகளுக்கும் உரிய பண்டிகைதான். அதில் அவர்களையும் ஈடுபடச் செய்ய வேண்டும். எப்போதும் படித்துக் கொண்டே இருக்கும் குழந்தைகளுக்கு இப்படிப்பட்ட மாறுதல்கள் தேவை. மூளைக்கு எளிதான மைகள் ஒளிந்திருக்கின்றன என்பது நவராத்திரியின் போது வெளிப்படையாகத் தெரிந்து கொள்ளலாம்! வரையத் தெரிந்த குழந்தைகளைப் படங்கள் வரையச் செய்து, அவற்றை ஒட்டி வைக்கலாம். வர்ணக் காகிதங்களில் பூவேலைகள் செய்யச் சொல்லலாம். புதிதாக உருவாக்கும் ஆர்வம் சில குழந்தைகளுக்கு இருக்கும். மண்ணில் மலை செய்வது, குளம் கட்டுவது என்று செய்யச் சொல்லலாம். சிலருக்கு நன்றாகக் கோலம் போடத் தெரிந்திருக்கலாம். அவர்களை உற்சாகப்படுத்தி, அவர்களுடைய முயற்சிக்கு உதவி செய்ய வேண்டும். வண்ணப் பொடிகளை வாங்கித் தந்து அவளுக்கு உடன் கோலம் போட உதவலாம். இதைச் செய்தால் மட்டும் போதாது!

''இது எங்க மீரா வரைந்த ரங்கோலி!''



வேலைகளைக் கொடுத்து, அதில் அவர்கள் மகிழ்ச்சி அடையும் போது, ஒருவிதமான புத்துணர்வைப் பெறுகிறார்கள். ''கோபு, பார்க்கில என்னென்ன வைக்கணும் சொல்லு. அதன்படி வைக்கலாம்'' என்று சொல்லிப் பாருங்கள்! பிள்ளை துள்ளிக் கொண்டு செய்வான். தனக்கு ஒரு முக்கியத்துவம் தரப்படுவது அவனுக்கு உற்சாக மூட்டும். ஆரோக்கியமான வளர்ச்சி ஏற்பட உதவும்! இனிமேல் நீ போய் படிடா கண்ணா!'' என்றால் போதும்! அதே பாடம் எவ்வளவு எளிதாகப் படிப்பான் என்கிறீர்கள்! நீங்களே அசந்து போவீர்கள்!

''இந்தப் படம் எல்லாம் எங்க ஹரிதான் பெயிண்ட் பண்ணினான். இவ்வளவு நன்றாகப் பெயிண்ட் பண்ணுவான்னு எனக்கே தெரியாது!''

இதுபோல, கொலுவிற்கு வருபவர்கள் முன்னிலையில் நம் குழந்தைகளைப் பாராட்டிப் பேச வேண்டும். அதற்காக, 'ஓவராகப்' புகழவும் கூடாது. அப்புறம் அதை உங்கள் குழந்தைகளே கூட நம்ப மாட்டார்கள்! அளவான பாராட்டு, உங்கள் குழந்தைகளுக்கு ஓர் அற்புதமான டானிக்!

## திறமையைக் காட்டலாமே!

உங்கள் குழந்தையிடம் என்ன திற

## அவர்களையும் ஈடுபடுத்துங்கள்!

கொலு என்பது பெண்களுக்கான

ஒரு விசேஷம் என்பது போல நினைத்து விட வேண்டாம். முக்கியமாகக் கொலுவில் குழந்தைகளுக்கு நிச்சயமாக ஒரு பங்கு இருக்க வேண்டும்! பொம்மைகள் வைப்பதில் மட்டுமில்லாமல் எல்லோர் வீடுகளுக்கும் அழைக்கச் செல்வதிலும் வந்தவர்களுக்குக் குங்குமம், வெற்றிலை பாக்கு தருவதிலும் எல்லாவற்றிலும் குழந்தைகளையும் ஈடுபடுத்துங்கள்! ''எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். நீ முந்திரிக் கொட்டை மாதிரி முன்னால் நிற்காதே!'' என்று கடிந்து கொள்ளக் கூடாது.

பெண் குழந்தைகளுக்கு நன்றாக அலங்காரம் செய்ய வேண்டும். வருபவர்களை வரவேற்கவும், உட்காரச் சொல்லவும் அவர்களுக்குக் கற்றுத் தர வேண்டும். வீட்டிற்கு வருபவர்கள் கேட்பதற்கு நன்றாகப் பதில் சொல்லப் பழக்கியிருக்க வேண்டும். நாலு பேருடன் பேசவும் பழகவும் தெரிந்து கொள்வதற்கு நவராத்திரி பண்டிகை நல்லதொரு சந்தர்ப்பம் ஆகும்.

''கலா, மாமிக்கு வெற்றிலை பாக்குக் கொடு,'' என்று கூறிவிட்டு, ''கலாவோட ஹெல்ப் இல்லைன்னா நான் தடுமாறிப் போவேன். நேற்று ஆபீஸ் போயிட்டு வர்றேன். கொலுவிற்கு வந்தவர்களுக்கு அழகா வெற்றிலை பாக்குக் கொடுத்துக் கொண்டிருக்கிறாள்'' என்று பெருமை பொங்கச் சொல்லும் போது அம்மாவுக்கும் ஆனந்தம். அதைக் கேட்கும் கலாவுக்கோ பேரானந்தம்! இன்னும் உற்சாகம் கரைபுரள ஓடி ஓடிச் செய்யச் சொல்லுமே!

நவராத்திரி விழாவில் கலை, பக்தி, விருந்தோம்பும் குணம், பரஸ்பர நட்பு என்று பல விஷயங்கள் இணைந்துள்ளன. இந்தப் பாரம்பரியம் அடுத்த தலைமுறைக்கும் நாம் தர வேண்டும். காலையில் எழுந்து நாம் ஏதேனும் பக்திப் பாடல்களைப் பாடினால், நம் குழந்தைகளும் ஆர்வத்துடன் அதைக் கற்கும்! குழந்தைகள் பக்குவப்படுத்தாத நிலங்கள். அவற்றை மெல்ல மெல்ல உங்கள் பழக்க வழக்கங்களால், பேச்சுக்களால், செயலால் பக்குவப் படுத்துங்கள்! அவர்கள் மனத்தில் பக்திப் பயிரை விதையுங்கள்; நல்ல குணங்களைப் பயிரிடுங்கள்!

– கங்கா ராமமூர்த்தி.

# ராஜ்யம்

''ராமு! நான் அப்ப இன்னும் ரெண்டு நாள்ல ஊருக்குத் திரும்பலாம்னு பார்க்கறேன். டிக்கெட் எடுத்திரு'' என்று ஆரம்பித்தாள் கோமதிப் பாட்டி.

அப்பா பதில் பேசும் முன் ரகு குறுக்கே பாய்ந்தான். ''ஏன்? அங்கே கிராமத்தில் என்ன ஆடுது. பேசாமல் இங்கேயே இருங்க. அங்கே ஒண்ணும் போக வேண்டாம்.''

பாட்டி அவன் பேச்சை சட்டை பண்ணியதாகவே தெரியவில்லை.

''நாளைக்குப் போகிற மாதிரி டிக்கெட் எடு. அடுத்த நாள் சூலமாயிடுது. அப்புறம் கிளம்பறது தள்ளிப் போயிடும்'' என்றாள் மகன் ராமிடம்.

''பாட்டி! நான் சொல்றேன்ல? காதில் விழலியா?'' என்றான் ரகு மீண்டும்.

பாட்டி சிரித்தாள். ''நீ இன்னும் வளரவே இல்லை. சின்னப் பையன் மாதிரி தான் பேசுவ.''

''ஏம்மா, ரகுதான் இவ்வளவு சொல்றானில்லை? பேசாமல் இங்கேயே இருந்திடேன். இங்கே என்ன குறை?'' என்றார் அப்பா மெதுவாக.

**பெ. நாயகி**

''நான் குறை ஒண்ணும் சொல்லலியே.''

''ஏன் பாட்டி, அம்மா உன்னை நல்லாக் கவனிச்சுக்கலையா?''

''சேச்சே! சொன்னா நாக்கு அழுகிடும். என் மருமகள் தங்கம்!'' என்றாள் பாட்டி மனப்பூர்வமாய். அம்மாவின் முகம் ஒரு விநாடி பெருமையில் ஜொலித்தது.

'நான் தொந்தரவு பண்றேனா?''

பாட்டி ரகுவுக்கு திருஷ்டி கழித்தாள். ''என் பேரன் ராசா.''

''அப்புறம் என்ன, இங்கேயே இரு, பாட்டி.''

''நான் கிழம் கட்டை. இங்கே இருந்து உங்களுக்குத் தொந்தரவா எதுக்கு? அது அது எங்கே கிடக்கணுமோ அங்கேயே போய் விழறேன்.''

''எங்களுக்கு ஒரு தொந்தரவும் இல்லை பாட்டி.''

''இன்னிக்கு வரைக்கும் தொந்தரவு இல்லாததில் சந்தோஷம். அதோட என் ஊருக்குப் போய்ச் சேர்ந்திடறேன்.''

''அங்கே ஏன் பாட்டி தனியா அவஸ்தைப்படணும்?''

''ஒரு அவஸ்தையும் கிடையாதுடா ராசா. தனியா அநாதையா செத்திடுவேனோன்னு பயப்படறியா? ஒண்ணும் ஆகாது. பகவான் இருக்கார். என் கடைசி கட்டத்துக்கு உங்களை எல்லாம் அங்கே கொண்டு வந்து சேர்த்திடுவார்.''

ரகு அஸ்திரம் எல்லாம் இழந்த அபிமன்யு போல் உணர்ந்தான். துணைக்கு வந்து ஏதாவது சொல்லுங்களேன். பாட்டியின் பயணத்தை நிறுத்த என்பது போல் அப்பாவையும் அம்மாவையும் பார்த்தான்.

அவர்களும் பேசிப் பார்த்தார்கள். பாட்டியின் பிடிவாதம் உறுதியாய் இருந்தது. ரகு சண்டை போடும் அளவுக்குப் போனான். ''டிக்கெட் எடுக்காதீங்கப்பா. பாட்டி எப்படிப் போறாள்னு பார்க்கலாம்'' என்றான்.

''டேய்'' என்று பாட்டி குரல் உயர்த்தினாள். ''என்னைக் கூட்டிட்டுப் போய் விட உனக்குத் தோதுப்படாதுன்னா இவ்வளவு நாடகம் ஆடாதே. ஒரே ஒரு டிக்கெட் எடு. நான் தனியா போய்க்குவேன். பகவான் எனக்குத் துணை இருப்பான். அவன் துணைதான் பெரிசு. மனுஷா துணையா பெரிசு?''

''பகவானுக்கு வேற வேலை இல்லை. உனக்குத் துணையிருக்கிறதை விட'' என்று முணுமுணுத்தபடி கோபமாய்க் கல்லூரிக்குக் கிளம்பிப் போனான் ரகு.

விக்கு இவ்வளவு ஏற்றமும் பிடிவாதமும் கூடாது. அப்படி என்ன கிராமம் வேண்டிக் கிடக்கு.

''அடுத்த தடவை தந்தி வந்ததுன்னா சப்தமில்லாமல் வாங்கிக் கிழிச்சுப் போட்டுடப் போறேன்'' என்று கறுவினான்.





மாலை திரும்பி வந்த போது வீட்டில் பாட்டியைக் காணோம்.

''எங்கேம்மா?'' என்று அம்மாவைக் கேட்டான்.

''கணேச மாமா யாரோ ஃபிரெண்டு கூட கார்ல வந்திருந்தாங்க. அவங்க கூடவே போயிடறேன்னு பாட்டி பிடிவாதம் பிடிக்க அப்பா ஆபீஸ்ல இருந்து லீவு போட்டுட்டு வந்து கொண்டு விட்டுட்டு வர்றேன்னு கூடப் போயிருக்காங்க'' என்றாள் அம்மா.

''காரைக் கண்டவுடன் பாட்டிக்கு ஆசை வந்திருக்கும்'' என்று மெல்லச் சிரித்த ரகுவின் கண்களில் பட்டது அம்மாவின் கை. வளையல் ஒன்று காணாமல் போயிருந்தது.

''குடும்பம்னா நாலும்தாண்டா இருக்கும். நீ சும்மா குதிக்காதே. இப்போ பாட்டியை ஊரில் விடப் போயிருக்காரே உங்க அப்பா, விட்டுட்டுச் சும்மாவா வர முடியும்? ஒரு மாசத்துக்குத் தேவையான சாமான் எல்லாம் வாங்கிக் கொடுத்திட்டுப் பக்கத்து வீட்டு, எதிர் வீட்டு ஆட்களுக்கெல்லாம் கொஞ்சம் பணம் கொடுத்துப் பாட்டிக்கு எமர்ஜென்ஸின்னா உதவி செய்யறதுக்கு ஏற்பாடு பண்ணணும்னா கொஞ்சம் ஆகத்தான் செய்யும். மாசக் கடைசியில உங்க அப்பா பணத்துக்கு எங்கே போவார்? நான்தான் கழற்றிக் கொடுத்தேன்'' என்று அவனைச் சமாதானம் செய்ய முயன்றாள் அம்மா. ரகுவுக்கு ஆறவே இல்லை. கிழவிக்கு

அம்மா பதில் பேசாமல் காப்பி கொண்டு வந்து நீட்டினாள்.

''நீ எப்படிம்மா எல்லாத்தையும் சகிச்சுக்கிட்டுப் போறே? எனக்குக் கன்னா பின்னான்னு கோபம் வருது. தந்தி ஆபீஸ் காரன்ட்ட சொல்லிடப் போறேன். அடுத்த தடவை பாட்டி செத்துப் போனதாத் தந்தி வந்தாக் கூட வீட்டுக்கு எடுத்திட்டு வராதே. நீயே கிழிச்சுப் போட் டுடுன்னு. சும்மா ஆறு மாசத்துக்கு ஒரு தடவை தந்தி வர்றதும் நாம எல்லாம் ஓடறதும்... இந்தத் தடவை எனக்கு இண்டர்னல் மார்க் பாதிதான் வரும். தெரியுமா...?''

பொருமினான் ரகு. அவனுக்கு நன்றாக நினைவு இருந்தது. ஒரு மாதம் முன்பு இந்த செமஸ்டருக்கான இன்டர்னல் பரீட்சைகளுக்கு முதல் நாள்தான் தந்தி வந்தது. படித்துக் கொண்டிருந்த ரகுதான் கதவு திறந்து வாங்கினான்.

அப்பா பின்னாலேயே வந்தார் தூக்கக் கலக்கத்துடன். ''என்ன தந்தி?'' என்று கேட்டார்.

''பாட்டி சீரியஸ்னு கணேச மாமா கொடுத்திருக்காங்க'' என்றான் ரகு.

அப்பா தந்தியை வாங்கி அதன் வாசகங்களையே சில விநாடிகள் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய கண்கள் லேசாகக் கலங்குவது தெரிந்தது. உடல் லேசாக ஒரு முறை குலுங்கியது.

அம்மா எழுந்து வந்தாள் கேட்டுக் கொண்டே, ''என்னவாம்?''

''ஒரு கழுதையும் இல்லை. வழக்கம் போலப் பாட்டி சீரியஸாம்'' என்றான் சலிப்புடன். அப்பா கண்கள் சிவக்க அவனைப் பார்த்தார்.

''கிளம்புங்க சீக்கிரமா. எல்லோரும் கிராமத்துக்குப் போகணும்'' என்றார் பொதுவாக. ரகுவுக்கு எரிச்சல் இருந்தாலும் அந்த நிலையில் அப்பாவிடம் பேசப் பயமாகவும் இருந்தது. அம்மாவின் பின்னேயே போனான். ''அம்மா! எனக்கு செமஸ்டர் இன்டர்னல் நடந்திட்டிருக்கு இப்போ லீவு போட முடியாதும்மா'' என்றான் மெல்ல.

''என்னடா ரகு! இப்படிப் பொறுப்பில்லாமல் பேசினா என்ன அர்த்தம்?'' என்று கண்டித்தாள் அம்மா.

''இது ஒண்ணும் முதல் தடவை இல்லையே. எனக்கு விவரம் தெரிஞ்சு இது நாலாவது முறை. இதே பிழைப்பாப் போச்சு. பாட்டிக்குத்தான் அறிவில்லைன்னா அப்பாவுக்கு எங்கே போச்சு?'' என்றான் கோபம் கொப்பளிக்கும் குரலில்.

அவனுடைய கோபம் ஒன்றும் எடுபடவில்லை. அப்பா அம்மாவின் காது கம்மலை வாங்கிக் கொண்டு வெளியே போய்விட்டு வந்தார். விடிந்தும் விடியாத காலையில் கூட அடகுக் கடைக் கதவைத் தட்டும் மனப்பக்குவம் அப்பாவுக்குத்தான் இருக்கும். வந்தவர் முகம் இறுகி இருந்தது.

''ராஜி! ஊருக்குப் போன் போட்டுக் கணேசன் கூடப் பேசினேன். அம்மா ரெண்டு நாளாவே மூச்சு பேச்சு இல்லாமல்தான் கிடக்கிறாளாம். ரொம்ப நேரம் தாங்காதுன்னு டாக்டர் சொல்லித்தான் தந்தி கொடுத்தானாம்.''

அதன் பின் வீடு பூட்டிச் சாமான் தூக்கி பஸ் ஸ்டாண்ட் போய் பஸ் பிடித்து ஐந்து மணி நேரப் பிரயாணத்துக்குப் பின் கிராமத்துக்குப் போய்ப் பாட்டி வீட்டினுள் நுழையும் வரை அப்பா பேசவே இல்லை. ஆனால் பாட்டியின் படுக்கை அருகில் ஓடிப் போய் அவள் கையைத் தன் கையில் எடுத்துக் கொண்டு ''அம்மா'' என்று அப்பா குரல் மல்கக் கூப்பிட்டது சினிமாத்தனம் இல்லாத ஓர் உண்மைப் பாசமாக இருந்தது.

பாட்டி பளிச்சென்று கண் திறந்தாள். அப்பாவையே சிறிது நேரம் பார்த்தபடி இருந்தாள். ''யாரு? ராமுவா?'' என்றாள் மெல்லிய குரலில்.

அப்பாவின் முகத்தில் கண்ணீர் நிறைந்த மகிழ்ச்சி.

''நானேதாம்மா. உன் பிள்ளை ராமு. என்னம்மா செஞ்சது? ஏன் இப்படிப் படுத்திட்டே?''

பாட்டி ஏதோ பேசினாள். பாதி வார்த்தைகளுக்குப் பதில் காற்றுதான் வாயிலிருந்து வெளிப்பட்டது.

''சரி சரி. எதுவும் பேச வேண்டாம். ரெஸ்ட் எடு. நான்தான் வந்திட்டேன்லே? எல்லாம் சரியாயிடும்'' என்று தட்டிக் கொடுத்து விட்டு எழுந்தார் அப்பா.

பாட்டி கண்களை ஆறுதலாக மூடிக் கொண்டாள்.

அப்பா பக்கத்து வீட்டு கணேசனைக் கூப்பிட்டுப் போய்ப் பேசினார். அந்தக் கிராமங்களில் பாதிப் பேர் அங்கேதான் இருந்தார்கள். பெண்கள் அம்மாவைக் கைப் பிடித்துக் கூட்டிப் போய்ப் பேச ஆரம்பிக்க, தாவணிகள் சில ரகுவை வெட்கப் பார்வை பார்த்தபடி தங்களுக்குள் சிரித்துக் கொண்டன. ரகு தனிமையாய் உணர்ந்தான். ஒரு முறை சுற்றிப் பார்க்கையில் தன் வயதை ஒத்தவர்கள் என்று யாருமே அங்கே இல்லாதது தெரிந்தது - தானே மெதுவாக நடந்து அப்பா பக்கத்தில் நின்று கொள்ள முயன்றான்.

''கோமதிப் பாட்டியோட பேரனா? எந்த கிளாஸ் படிக்கறே?''

''போன முறைக்கு இப்போ நிறைய வளர்ந்திட்டியே?''

''கோமதிப் பாட்டிக்கு ஒரே மகன் ஒரே பேரன் ரெண்டும் தங்கம்.''

அவனை விசாரித்தவர்களில் யாரையும் அவனுக்குத் தெரியவில்லை.

நமக்குத் தேவையான நெய்யை ஒரு பாத்திரத்தில் விட்டு அதனுடன் இளநீர் விட்டுக் காய்ச்சி கை பொறுக்கும் படியான சூடு இருக்கும்போது, கல் யாண பந்திகளில் நெய் தட்டுப்பாடு வரும் பொழுது பரிமாறலாம். நெய் யானது வெகு ருசியாக இருக்கும். தாராளமாகவும் இருக்கும்.

- மதுரா.

# தீபாவளித் திருநாளின் முக்கியத்துவமும், உங்களுக்கு ஒரு வேண்டுகோளும்



வரும் தீபாவளித் திருநாளை வெகு விமரிசையாக கொண்டாட இப்பத்திரிக்கையினை படிக்கும் அன்பு உள்ளங்களுக்கு சிவானந்த ஆசிரமக் குழந்தைகளும் முதியோர்களும் தங்களின் வாழ்த்துக்களை மனமுவந்து தெரிவிக்கிறார்கள். பண்டிகை நாட்களில் நிதி உள்ளவர்கள், தத்தம் நிலைமையினை அனுசரித்து விழாக்களை கொண்டாடுகிறார்கள். இந்த திருநாளில் பல்லாயிரக்கணக்கான இளம் நெஞ்சங்கள், ஆதரவற்றோர், பார்வை இழந்தோர், மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள், சிறைக்கைதிகள் முதியோர், வசதியில்லாதார் உடல் ஊனமுற்றோர் பண்டிகையை பொருள் இல்லாமல் கொண்டாட இயலாதவராக இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு தாங்கள் மனமுவந்து பொருளாகவோ, நிதியாகவோ, துணியாகவோ, பட்டாசுகளாகவோ கொடுத்து உதவி செய்து ஆத்ம திருப்தி அடையலாம். எந்த ஒரு பண்டிகையிலும், நம்முடைய பொருளில் சிறிதேனும் பிறருக்கு ஈந்தால், அந்த பண்டிகையின் மகிழ்ச்சியினையும், பிறருக்கு உதவினோம் என்ற ஆத்ம திருப்தியும் கிடைக்கப் பெற்று பேரானந்தம் அடையலாம். தாங்கள் அருகிலுள்ள சேவை ஸ்தாபனத்திற்கு சென்று உங்கள் மகிழ்ச்சியினை பகிர்ந்து கொள்ளுங்கள்.

சிவானந்த ஆசிரமத்தில் உள்ள சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளும், இந்த தீபாவளி திருநாளை மகிழ்ச்சியுடன் கொண்டாட பொதுமக்கள் மனமுவந்து உதவுமாறு வேண்டுகிறோம். இதனைப் படிக்கும் தாங்கள் தங்களுடைய காணிக்கையாக ஒவ்வொருவரும் குறைந்த பட்சம் தலா ஒரு ரூபாய் இவ்வறப்பணிக்கு அர்ப்பணம் செய்தால், இத்திருப்பணி தங்கள் ஆசியுடன் பரிபூர்ணமாக நிறைவேறும் என்பதோடு இல்லாமல் இந்நாட்டில் உள்ள அனைத்து ஆதரவற்றோரும் பயன் பெறுவர்.

பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும், அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். வருமானவரி விலக்கும் அளிக்கப்படும். பொதுமக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாக அல்லது பொருட்களாக,

**நிர்வாகி, ''சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்''**
நெ. 20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 059.
தொலைபேசி எண்கள் : 401078, 402354
என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

''அந்தக் காலத்துல உங்க அப்பாவுக்கு நான் பால்ய நண்பனாக்கும். ராமு படிச்சு கிழிச்கப் பட்டணம் போயிட்டான். நமக்குப் படிப்பு ஏறலை. விவசாயம் மாடு கழனின்னு நின்னு போச்சு.''

ஆறு மாதங்களுக்கு ஒரு முறை இதை யெல்லாம் சகிக்க வேண்டும். அவஸ்தை யாய் இருந்தது ரகுவுக்கு.

கணேச மாமா அப்பாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார். ''டாக்டர் சாயங்காலம் வர்றேன்னு சொல்லி இருக்கார். ஆனா அஞ்சரை ஆறுக்கு மேலதான் வருவார். நீ ஒண்ணு செய் ராமு. நம்ம காண்டிராக்டர் வண்டியை வாங்கிட்டு வர்றேன். டாக்டரை வீட்லயே போய்ப் பார்த்திடு. வேணா நானும் வர்றேன்...''

டாக்டரை அப்பா அழைத்து வரும் முன் பாட்டி இரண்டு முறை கண் விழித் தாள். அம்மாவை விசாரித்தாள். ரகுவை அருகே அழைத்துத் தடவிக் கொடுத்தாள்.

''மகன் பேரனை எல்லாம் பார்க்கவும் பாட்டிக்குச் சரியாப் போயிடுச்சு பாரேன்'' என்று சுற்றியிருந்த பெண்கள் சிரித்தனர்.

டாக்டர் வந்து பார்த்துவிட்டுத் திருப்தி தெரிவித்தார்.

''மிஸ்டர் ராம்! காலை இருந்த நிலை மைக்கு இப்போ எவ்வளவோ பெட்டர். இந்த மருந்துகளைக் கண்டின்யூ பண் ணுங்க'' என்றார்.

''டாக்டர்! நான் என் கூடவே அம்மா வைக் கூட்டிட்டுப் போயிடலாம்னு நினைக்கிறேன். உங்க ஐடியா...'' என்று அப்பா இழுத்தார்.

''வெல் அன்ட் குட். ஆனா, இப்போ அவங்க உடம்பு ஒரு பஸ் ஜர்னியைத் தாங்காது. கார்ல வச்சுக் கூட்டிப் போக முடி யும்னா நாளைக்கு உறுதி சொல்றேனே...''

டாக்டர் விடைபெற்றுச் சென்றார்.

பாட்டிக்கு நேரப்படி மருந்து தரப் பட்டது. அம்மா, அப்பா ரகு மூவருக்கும் சாப்பாடு எங்கிருந்தோ வந்தது. பாட்டிக்கு வெந்நீர், பாத்திரம், துணி என்று அந்த ஊர் ஜனங்கள் மாற்றி மாற்றிக் கவனித்தார்கள். ஒரு நாள் ஓடியது தெரியவில்லை.

மறுநாள் டாக்டர் வந்த போது பாட்டி எழுந்து உட்கார்ந்தாள். நேற்று முழுவதும் அப்பாவின் முகத்தில் குடிகொண்டிருந்த கவலையும் டென்ஷனும் இன்று இல்லை. லேசாக சிரிக்கக் கூட செய்தார்.

டாக்டரின் ஆலோசனையின் பேரில் டாக்ஸி ஒன்று அமர்த்தி வரப்பட்டது.

''அம்மா! இப்போ ஆயிரம் ரூபா செலவழிச்சு டாக்ஸில போகலைன்னா என்ன? ஒரு வாரம் போனா பாட்டி நல்லா ஆயிடுவான்னு தோணுது'' என்று முணு



ஒரு சமயம் எங்கள் வீட்டில் கொஞ்சம் அதிகமான பால் திரிந்து விட்டது. அப்பொழுது என் மாமியார் யோசனைப்படி செய்தேன். நன்கு நீரை வடிகட்டி விழுதைச் சீனி சேர்த்துக் கிளறினேன். உதிர் உதிராக இருந்தது. அதை எடுத்து மிக்ஸியில் ஒரு சுற்று சுற்றினேன். நல்ல பாலில் செய்த பால்கோவா போல வெண்மையாகவும், மிருதுவாகவும் இருந்தது. விருந்தினர் களுக்குக் கொடுத்ததில் ஏகப்பட்ட பாராட்டுக்கள்.

- விஜயா சாய்ராமன்.

முணுத்தவனை அம்மா குறுக்கே வெட்டி னாள்.

''நீ சும்மா இரு ரகு. அப்பா, பாட் டிக்குச் செய்யற விஷயங்களில் எல்லாம் தலையிடாதே. அவங்க அம்மாவுக்கு ஏதும் பண்ணிட்டுப் போறாங்க. உனக்கென்ன?''

இந்தக் காலத்தில் இப்படி ஒரு மரு மகள்!

''இருந்து பண்ணிட்டாப் பரவாயில் லைம்மா. உன் கம்மலையும் செயினையும் அடகு வச்சு இது ரொம்ப அவசியம் தானா...?'' என்று எரிச்சல் பட்டான்.

அம்மா பதில் சொல்லவில்லை.

மதுரை வந்தார்கள். அப்பா கைத்தாங்க லாய்ப் பாட்டியை டாக்ஸியிலிருந்து இறக் கிக் கூட்டிவர அம்மா வேகமாக உள்ளே ஓடிக் கட்டிலைத் தயார் செய்தாள்.

அடுத்த நாட்களில் பாட்டியிடம் வேக மான முன்னேற்றம் காணப்பட்டது. டாக்ட ரின் அறிவுரைப்படி ஈஸிஜியில் இருந்து பிளட் யூரின் வரை எல்லா டெஸ்ட்களும் எடுக்கப்பட்டன. முடிவாக ஒரு பிராப்ள மும் இல்லை. ஜெனரல் வீக்னஸ் என்று சொல்லப்பட்டது. ஆரஞ்சு ஜூஸ் என்ன ஹார்லிக்ஸ் என்ன டானிக்குகள் என்ன என்று வீடு அல்லோலகல்லோலப்பட்டது.

ஒரு மாத ஊட்டச் சத்தில் நன்றாகத் தேறி எழுந்து விட்டாலும் கூட பாட்டி யிடம் பழைய தேஜஸ் திரும்பவில்லை. பழைய வேகம் பேச்சில் வந்த பிறகும் கூட கண்களின் பின்னே ஓர் ஆயாசம் இரை யிட்டிருப்பது ரகுவுக்குப் புரிந்தது. இம் முறை பாட்டியைக் கிராமத்துக்குப் போக விடக் கூடாது. இனி கடைசி வரை பாட்டி இங்கேயேதான் இருக்க வேண்டும் என்று உறுதி செய்து கொண்டான்.

என்ன உறுதி செய்து என்ன, இதோ பாட்டி கிராமத்துக்குப் போய்ட்டாளே! அப்பா மீது கோபம் கோபமாக வந்தது. வரட்டும் என்று காத்திருந்தான்.

அப்பா இரண்டு நாள் கழித்து வந்தார். சந்தோஷமாய் இருந்தார்.

''என்ன? பாட்டி சௌக்கியமா?'' என்று வன்மத்துடன் கேட்டான் ரகு.

''ம்! அவளுக்கென்ன, ராணியாட்டம் இருக்கா.''

''அப்பா! சொல்றேன்னு தப்பா நினைக்காதீங்க. உங்க அம்மாவுக்கு இவ்வளவு பிடிவாதம் கூடாது. அப்படி அவங்க கிராமத்துக்குப் போகாட்டி என்ன? நீங்களும் அதுக்கு ஒத்துப் பாடி இவ்வளவு செலவழிக்காட்டி என்ன?''

அப்பா அவனைக் கூர்ந்து நோக்கினார்.

''என்ன ப ண் ணி யி ரு க் க ணு ம் னு நினைக்கறே?'' என்று கேட்டார்.

''பாட்டியை இங்கேயே இருக்க வச்சிருக்கணும். கடைசிக் காலம்! அவங்க அங்கே தனியே இருக்கிறதினாலே எவ்வளவு எக்ஸ்ட்ரா செலவு, எவ்வளவு நிம்மதிக் குறைவு! எவ்வளவு டென்ஷன்.''

''அவளால் இங்கே மதுரைல இருக்க முடியாது ரகு. அவளுக்கு இருப்புக் கொள்ளாது.''

''ஏன்?''

அப்பா ஒரு நிமிடம் மௌனமாக இருந்துவிட்டுச் சொன்னார்:

''ரெண்டு முக்கியமான காரணம் ரகு. ஒண்ணு, அது தாத்தா கூட அவள் முழு வாழ்க்கை வாழ்ந்த இடம். அந்த சென்டிமென்டல் அட்டாச்மென்ட். இரண்டாவது ஈகோ ஸாடிஸ்ஃபேக்ஷன்.''

''புரியலை.''

''அது அவளுடைய ராஜ்யம்டா ரகு. நான் அவளுடைய மகனா இருக்கலாம். நீ பேரனா இருக்கலாம். ஆனா அவள் மதுரைக்கு வந்தாள்னா ராமுவோட அம்மா அல்லது ரகுவோட பாட்டின்னுதான் அறிமுகம் ஆகறா. அவளுடைய எழுபத்தைந்து வருடத் தன்மை, செல்ஃப் காணாமல் போயிடுது. அதை எப்படி அவளால தாங்க முடியும். கிராமத்துக்குள்ளே நுழைஞ்சு பாரு, கோமதிப் பாட்டி பேரனான்னு உன்னையே அவளை வைத்துத்தான் கூப்பிடுவாங்க. அது அவளுடைய கௌரவம். உடம்பு முடியாமல் அவள் வீட்ல கிடந்தப்போ நீதான் பார்த்தியே கிராமத்துல பாதி ஜனம் இவளைச் சுற்றித்தான் இருந்தது. இங்கே உன்னையும் அம்மாவையும் உங்க ஃப்ரெண்டஸையும் தவிர யாரு வந்தா?''

ரகு யோசிக்கத் தொடங்கினான்.

''அதோட இத்தனை வயசுக்கப்புறம் அவளால ஒரு இடத்தில் காலடங்கி இருக்கவும் முடியாது. கிராமத்துல வீட்டு வாசல்ல உட்கார்ந்துக்கிட்டு போறவன் வர்றவனைப் பேர் சொல்லிக் கூப்பிட்டு, 'என்னடா நேத்து வரை ஆத்தா மடில பால் குடிச்ச பய கொஞ்சம் மீசை முளைச்ச உடனே பார்க்காமப் போறே'ன்னு வம்பு வளர்க்க முடியும். அவங்களும் 'மன்னிச்சுக்க பாட்டி, அவசர சோலி. ஏதோ ஞாபகம். டவுனுக்குப் போறேன், ஏதாச்சும் சாமான் வேணுமா?'ன்னு கேட்பான். அதெல்லாம் இங்கே முடியுமா? வேற ஒண்ணும் வேணாம். அன்னிக்கு அவளைக் கூட்டிப் போய் விடறேன். கிராமமே திரண்டு வந்து, 'பாட்டி... சொவமாயிட்டயா? மகமாயிக்கு நேர்ந்திருக்கேன். ஆத்தா... முழுசாயி வந்தியே... அதே போதும்னு... அவங்க விசாரித்த விசாரிப்பு அந்த அன்பு மழை... அதையெல்லாம் விட்டுட்டு இங்கே நீ என்னதான் ஏ. சி. யும், டீ. வி. யும் காண்பிச்சாலும் எப்படி இருப்பா?''

அப்பாவின் சொற்கள் நியாயமாகப் பட்டன ரகுவுக்கு.

''அதுக்கில்லைப்பா. இங்கே இருந்தா வெளியே கோயில் அங்கே இங்கேன்னு கூட்டிப் போய்க் கடைசிக் காலத்தைச் சந்தோஷப்படுத்தலாமேன்னு நினைச்சேன்'' என்றான்.

''அவளுக்கு நிஜமான சந்தோஷம் பேரன்ங்கற முறைல குடுக்கணும்னு நினைச்சா மாசம் ஒரு கடிதம் எழுதிப் போடு. படிக்கத் தெரியாத உன் பாட்டி அந்தக் கடிதத்தை வச்சு அந்தக் கிராமத்தையே ஒரு கலக்கு கலக்குவா பாரு. அதுதான் அவளுக்கு நிஜமான சந்தோஷத்தைத் தரும்.''

ரகு அன்று இரவே பாட்டிக்குக் கடிதம் எழுத ஆரம்பித்தான்.

மோர்க் குழம்பு செய்வதற்கு 1 மி. வற்றல், 1 ஸ்பூன் வெந்தயம், 1 ஸ்பூன் கொத்துமல்லி விதையை எண்ணெய்விட்டு வறுத்துக் கொண்டு தேங்காயுடன் நன்கு நைசாக அரைத்து மோரில் கலக்க வேண்டும். இந்த வகை மோர்க் குழம்பு மாறுதலான சுவையுடன் இருக்கும். இதற்குக் கெட்டி தயிர் தேவையில்லை. மோர் இருந்தால் போதுமானது. முருங்கைக்காய் போட்டுக்கூட செய்யலாம்.

- விஜயா.



"கதவின் வழியாக அநியாயமாக உள்ளே வரும் செல்வம் ஜன்னல்களின் வழியாக வெளியே செல்கிறது." - எகிப்து

## தெரிந்து கொள்ளுங்கள்

# உங்கள் குழந்தையின் மேனிபற்றி

மலர் என்பார் இறகு என்பார் மழலைச் செல்வத்தை. அதன் மேனி மலரினும் மென்மை இறகிலும் மிருது. ஆகவேதான் அதற்குத்தேவை உங்கள் சிறப்பான கவனிப்பு.

மென்மையான ஆடைகள். இதமான ஸ்பரிசம். அத்துடன் சிறப்பான சோப்பு— ஜான்ஸன்ஸ் பேபி சோப்

ஆரம்பத்தில் சில வாரங்களுக்கு குழந்தையின் சருமத்தில் சில மாற்றங்கள் ஏற்படும். அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். அது இயல்பான மாற்றம் ஆகும். சிறிது சிறிதாக மறைந்துவிடும்.

**சருமத்தில் பூனை முடி :** ஆரம்பத்தில் குழந்தையின் உடல் முழுதும் பூனை முடி போன்ற உரோமம் இருக்கும். அது இரண்டு வாரங்களுக்குள் தானாக உதிர்ந்துவிடும்.

**சினைப்புகள் மற்றும் கரப்பான்கள் :** இவை குழந்தையின் உடல் அமைப்பு (ஸிஸ்டம்) முழுதும் செயல்படத் துவங்காததால், அவை சில நாட்களில் பொதுவாக மறைந்துவிடும்.

**பிறப்புப் புள்ளிகள் :** பிறக்கும்போது குழந்தையின் மேனியில் நீல சிவப்பு அல்லது பழுப்பு நிறத்தில் சில புள்ளிக் குறிகள் ஏற்படுகின்றன. சில மாதங்களில் அவை மறைந்து விடுகின்றன. குழந்தை வளரும்போது சில புள்ளிகள் காணப்படலாம்.

**தலையின் கவர் :** இளஞ்சிவப்பு நிறத்தில், குழந்தையின் தலை உச்சியில் காணப்படும் பத்தை போன்ற கரப்பான் ஆகும். அது சில சமயங்களில், குழந்தையின் முகம் உடல் அல்லது அரைப் பகுதியில்



பரவும். அது மறைந்துவிடும். அதற்கு பேபி ஆயில் போட்டு இதமாக்கவும்.

**இளஞ்சிவப்பு சினைப்பு:** முகம் அல்லது சதை மடிப்பு போன்ற வியர்வை தங்கும் பகுதியில் இளஞ்சிவப்பு சினைப்புகள் ஏற்படும். இது அதிக உஷ்ணத்தால் ஏற்படுகிறது. குழந்தையை வெதுவெதுப்பான நீரில் குளிப்பாட்டவும். மென்மையான சோப்பு உபயோகிக்கவும். பின்பு மெல்லிய பருத்தி ஆடைகளை அணிவிக்கவும்.

**ஜான்ஸன்ஸ் பேபி சோப்:**
**குழந்தையின் மேனிக்கான சிறப்பான படைப்பு.**

தூய்மையான பொருட்களால் மட்டுமே தயாரிக்கப் பட்டது ஜான்ஸன்ஸ் பேபி சோப் — இதில் மென்மையான குழந்தை மணம் கலந்துள்ளது. ஜான்ஸன்ஸ் பேபி சோப் — ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் மற்றும் லனோலின் செறிந்துள்ளது. இவை குழந்தையின் சருமத்தில் ஈரப்பதம் உண்டாக்கி, மென்மையோடு வைத்துக் கொள்கிறது. இதில், சருமத்தில் அலர்ஜி மற்றும் புள்ளிகளை உண்டாக்கும் கடுமையான இரசாயனம் மற்றும் எரிச்சலான பொருட்கள் இல்லை. அதன் இதமான மென்மையான செயல், இயற்கை எண்ணெய்களை நீக்காமலே, சருமத்தை சுத்தமாக்குகிறது. உங்கள் குழந்தையின் மேனி பனித்துளிபோல் மிளிரும், ஒளிரும்.

**உங்கள் குழந்தைக்கு வேறு எந்த சோப்பையும் நம்புவீர்களா ?**




**காரணம், குழந்தையின் மேனிக்கு விசேஷ கவனம் தேவைப்படுகிறது.**

"பேபி கேர்" என்ற இலவசப் பிரசுரம் பெற்றிட எழுதுங்கள் : பேபி கேர் அட்வைசர், ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், 30 ஃபோர்ஜெட் ஸ்ட்ரீட், பம்பாய்-400 036.

Ogilvy&Mather 7416 Tam

**ஜான்ஸன் & ஜான்ஸன்**



கலாராணி



ஹரிணி

# நடுங்க வைத்த நவராத்திரி

## நான்கு பெண்கள் சொல்கிறார்கள்

**கலாராணி** : ''அது நவராத்திரி நான்காவது நாள். என் பரத நாட்டியப் பள்ளி மாணவியின் வீட்டுக்குக் 'கொலு' பார்க்கச் சென்றிருந்தேன். பிரமாதமாகக் கொலு வைத்திருந்தார்கள். நான் அதைப் பார்த்து ரசித்த வேளையில் அவர்கள் வீட்டு டெலிபோன் மணி அடித்தது. அங்கு இருந்த வர்கள் கொலு பிஸியில் இருந்ததால் நானே சென்று போனை எடுத்தேன். ஒரு பெண் குரல்... 'இன்னும் பத்து நிமிஷத்தில் கொலு பொம்மை ஒன்றினுள் இருக்கும் வெடி குண்டு வெடிக்கும்' என்று அந்தப் பெண் சொல்லிவிட்டு டக்கென்று போனை வைத்து விட்டாள். எனக்குப் பயத்தில் வியர்த்துக் கொட்டியது. பரபரப்பாகச் சென்று மாணவியை அழைத்து விஷயத் தைச் சொன்னேன். அவள் கடகடவென்று சிரித்தாள். அது அவள் அத்தைப் பெண்ணின் விளையாட்டு இது என்றாள். 'திக்கிப் பேசி இருப்பாளே' என்றாள். 'ஆமாம்' என்றேன். சிறிது நேரத்தில் அந்தப் பெண்ணே வந்து உண்மையை ஒப்புக் கொண்டாள்.''

**ஹரிணி** : ''என் பள்ளித் தோழியின் வீட்டுக்குக் கொலு பார்க்கப் போயிருந் தேன். நாங்கள் பாட்டுப் பாடியதும் சுண்டல் கொடுத்தார்கள். நாங்கள் சாப்பிட்டு முடித்த தும் என் தோழியின் அம்மா நடுக்கத்துடன் ஓடி வந்து 'சுண்டல் சாப்பிட்டு விட்டீர்களா' என்று அவசரமாகக் கேட்டார். 'ஆமாம்' என்றோம். 'அய்யோ சுண்டல் பாத்திரத்தில் 'பல்லி' கிடக்குதே' என்று அலறினார்.... எனக்கு வாந்தியே வந்து விட்டது. தோழி ஓடிப்போய்ப் பாத்திரத்தை எடுத்து வந்து பல்லியைப் பார்த்தாள். அது ரப்பர் பல்லி... என் தோழியின் தம்பி செய்த குறும்புத்தனம் என்று பின்பு தெரிந்தது.''

**ஆனந்தி** : ''என் உறவினர் வீட்டில் எப்போதும் பல படிக்கட்டுகள் வைத்து நவராத்திரிக்கு பிரம்மாண்டமாக பெரிய கொலு வைப்பார்கள். சென்ற வருடம் அது போல் வைத்த போது நானும் சென்று கொலு வைக்க உதவினேன். கொலு பொம்மை அனைத்தையும் வைத்த பிறகு ஃபேன் போட்டதும் பொம்மைகள் ஆடுவதைப் போன்ற உணர்வு எங்களுக்கு



ஆனந்தி



அனுராதா

ஏற்பட்டது. கொலு வைத்த படிக்கட்டுகளில் மூன்றின் கால்கள் உடைந்து இருப்பது அப்போதுதான் தெரிந்தது. மீண்டும் கொலுவைக் கலைத்து சரி செய்ய மனமின்றி அப்படியே விட்டு விட்டோம். கொலு பார்க்க பலர் வந்த போதும் ஃபேன் போட வில்லை. அப்படி இருந்தபோதும் ஏழாவது நாள் நவராத்திரியன்று சாய்ந்த பைசா கோபுரம் போல் பொம்மைகள் சாய்ந்து எப்போது விழுமோ என்று எங்களை நடுங்க வைத்தது. நல்ல வேளை நவராத்திரி முடி யும் வரை விழவில்லை.''

அனுராதா : ''எங்கள் வீட்டில் அழகாக நிறைய பொம்மைகள் வைத்து நவராத்திரி கொலு வைத்திருந்தோம். அம்மா, அப்பா இருவரும் கடைத்தெருவுக்குப் போய் விட்டார்கள். நானும் அடுத்த வீட்டு, மேல் வீட்டுச் சிறுவர் சிறுமிகளும் 'கொலு' பாட்டு பாடிக் கொண்டு இருந்த போது நான்கு பையன்கள் தடதட என்று வீட்டிற் குள் ஓடிவந்து துப்பாக்கியைக் காட்டி எங்களை மிரட்டினார்கள். நாங்கள் பயத் தில் பெரிதாக அழுததும் எதிர்வீட்டு மாமா வந்து அந்தப் பையன்களைப் பிடித்தார். 'கண்டல் வாங்க அப்படி பொய் தீபாவளி துப்பாக்கிக் காட்டி மிரட்டினோம்' என்று அந்தப் பையன்கள் சொன்னதும் மாமா அவர்களை அடித்து விரட்டினார்.''

பேட்டி : **விஜயாகண்ணன்.**



சிறு பிளாஸ்டிக் தம்ளர் அல்லது ஐஸ்கிரீம் கப்பில் மணல் நிரப்பி அதில் முள் செடியை (இலையுடன் கூடியது) சொருகி வைக்கவும். மஞ்சள் மற்றும் வெள்ளைக் கலர் சிறு தெர்மோ கோலை (பேக்கிங்கில் வருவது) (சிறியது) முள் செடியில் உள்ள முள்ளில் குத்தி விடவும். இது பூச் செடியும் பூக்களும், இலைகளும் போல் பார்க்க அழகாக இருக்கும். சிறிய தெர்மோ கோல் இல்லையென்றால், பெரிய பேக்கிங்கில் சிறியதாக, விருப்ப மான வடிவத்தில் வரைந்து வெட்டி, முள் செடியில் குத்தி அலங்கரிக்கலாம்.

– பாலா.



# எங்க வீட்டுப் பூஜை

"ஏங்க... எங்கேயோ வெளியே கிளம்பறீங்க... இன்னிக்கு உங்க வீட்டுலே ஆயுத பூஜை பண்ணலை?"

"எங்க வீட்டுப் பூஜைக்குத்தாங்க கிளம்பிட்டிருக்கோம்....!"

இந்தக் கேள்வி பதிலை எங்கேயோ கேட்டது போல் இருக்கிறதா? 1500க்கும் மேலானவர்களின் குரல் இப்படி ஓங்கியே தான் ஒலிக்கும். சுந்தரம் பாஸநர்ஸ் - டி.வி.எஸ். குரூப் நிறுவனத்தில் பணிபுரிபவர்களின் ஒன்றிணைந்த பதில் இது.

சுந்தரம் பாஸநர்ஸில் ஆயுத பூஜை பண்டிகையாக மட்டுமல்லாமல் ஒரு பெரிய திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. காலையில் நல்ல நேரம் பார்த்துப் பூஜை ஆரம்பிக்கப்படுகிறது. வைதீக முறைப்படி காலையிலிருந்து மாலை மூன்று மணி வரை சிறப்பான பூஜைகள் நடைபெறும். பின் பூஜை தீர்த்தம் எல்லோருக்கும் வழங்கப்பட்டு, தொழிற்சாலையின் எல்லா பாகங்களிலும் தெளிக்கப்படுகிறது.

ஆயுத பூஜையன்று பூஜை நடப்பது எல்லா தொழிற்சாலைகளிலும் உண்டு. ஆனால், பூஜைக்குத் தன் மனைவி, குழந்தைகள், நண்பர்கள் என்று திருவிழாவிற்குப் போவது போல் யாவரும் வருவது சுந்தரம் பாஸநர்ஸில் மட்டும்தான் பார்க்க முடியும். ஒவ்வொரு தொழிலாளியும் தான் வேலை பார்க்கும் மிஷினை ஒரு குழந்தை போல தடவிப் பார்ப்பதும், தன் மனைவியிடம் இடம் வலம் என்று சுற்றிக் காண்பிப்பதும், அவள் பெருமைப் பொங்க தன் கணவரைப் பார்த்து "ஏனுங்க இதுலே என்ன பண்ணுவீங்க" என்று கேட்பதும் - இது என்னுடையது என்ற பெருமை அவர்கள் பார்வையில் தெறிக்கும். அவர் அவர் மிஷின்களுக்கு வாழை மரம் கட்டுவதிலேயும், சந்தனம் கொண்டு மெழுகுவதிலேயும் போட்டா போட்டிதான். ஓரமாக, சாதுவாக, வாழை மரம் கட்டிக் கொண்டு நின்று கொண்டிருக்கும் பீரோக்களும் உண்டு.

ஆன்மீக விருந்து உண்ட அனைவருக்கும், நிறுவனத்தின் சார்பில் வயிற்றுக்கு உணவு. இதில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் இரவு முழுவதும் கண்விழித்து மிஷின்களைத் துடைத்தவர்கள், அல்லது அலங்காரம் செய்தவர்கள், அல்லது விளக்குத் தோரணங்கள் கட்டியவர்கள் அல்லது.... அடுக்கிக் கொண்டே போகலாம். இரவு ஷிப்ட் 12 மணிக்கு நிறுத்தப்படுகிறது. காலை எட்டு மணிக்குள், மணப்பெண் போல் சீவி, சிங்காரித்துக் கொண்டு தொழிற்சாலையே பளபளக்கிறது. ஜீ பூம்பா வேலையோ என்று திகைக்க வைக்கும், கைவேலைப்பாடுகள் அமைந்த பூஜை மண்டபம். இடமும் வலமும் மிகப் ெபரியதாக ரங்கோலி, காணும் இடமெல்லாம் மாவிலைத் தோரணங்கள், விளக்குச் சரங்கள். புல்வெளியில் நிறுத்தப்பட்ட ராட்சஸ குடை ராட்டிணம். ஓர் ஓரமாக அமைக்கப்பட்ட ஐஸ்கிரீம், கூல் டிரிங்ஸ் ஸ்டால். சுடச்சுட மெரினா கடற்கரை வாசனை மூக்கைத் துளைக்கிறது. வேறு ஒன்றுமல்ல - மிளகாய் பஜ்ஜி, போண்டா என்று தின்பண்டங்கள் ஸ்டால். அலங்காரமாய் மேடை. அதைச் சுற்றிலும் ஏகப்பட்ட நாற்காலிகள்.

மூன்று மணிக்கு மேல் கூட்டம் சாயத் துவங்குகிறது. வாசலில் நுழைபவர்கள் கைகளில் சீட்டு ஒன்று கொடுக்கப்படுகிறது. குழந்தைகளின் கைகளில் தனியாக வேறு சீட்டு. இந்தச் சீட்டுக்கள் குலுக்கி எடுக்கப்பட்டுப் பதினைந்து ஜோடிகளுக்கும், 350 குழந்தைகளுக்கும் அதிர்ஷ்டப் பரிசு வழங்கப்படுகிறது. இதைத் தவிர வாசலில் நுழைவுக் கட்டத்தில் எல்லாக் குழந்தைகளுக்கும் சிறு அன்பளிப்பு. இரவு நீண்ட நேரம் வரை இருக்க வேண்டும் என்பதற்காக பிஸ்கட்டும், சாக்லேட்டும். எலெக்ஷனில் ஓட்டுப் போடும் வயது குறைக்கப்படலாம். ஆனால் சுந்தரம் பாஸநர்ஸைப் பொறுத்த வரையில் பதினாறு வயது வரை

குழந்தைதான். கையில் அன்பளிப்பை வாங்கிக் கொண்டு நாணமாக பிரித்துப் பார்க்கும் ஸ்வீட் ஸிக்ஸ்டீன்களைப் பார்க்க கண்கொள்ளாக் காட்சிதான்.

''பேஷ் பேஷ். காப்பி ரொம்ப நல்லா இருக்கு'' என்று சொல்வதற்கு ஏற்ப வந்தவர்களுக்குக் காப்பி வழங்கப்படுகிறது. ஓரமாக வைக்கப்பட்டிருக்கும் காப்பி டிரம்மில் அவ்வப்போது சுடச்சுட காப்பி கொண்டு வந்து விடப்படுகிறது. யார் எப்போது வேண்டுமானாலும், எவ்வளவு வேண்டுமானாலும் குடிக்கலாம். ஐஸ்கிரீம், குளிர்பானங்கள் மற்றும் போண்டா, பஜ்ஜி வகையறாக்கள் மிகவும் குறைந்த விலையில் விற்கப்படுகின்றன.

மூன்று மணியிலிருந்து நாலரை வரையில் முதலாளி, தொழிலாளி, மானேஜர் என்ற பாரபட்சம் இன்றிப் புல்வெளியில் ஒரே கலகலா. பெண்கள் யாவரும் ஒன்று சேர்ந்து விட்டால் அங்கு பேசப்படாத விஷயமே இல்லை.

நிகழ்ச்சிகள் 4.30 மணிக்கு ஆரம்பிக்கப்படுகின்றன. குழந்தைகளுக்கு, பின் பணிபுரிபவர்களுக்கு என்று தனித்தனியாக மாறுவேடப் போட்டி. இடுப்பில் கட்டிய துணி கூட நிற்காமல் மேடையில் வேஷ்டியைப் பிடித்துக் கொண்டு ஒரு மூன்று வயது பேகவதைக் கேட்கப் பேரானந்தம். நிகழ்ச்சியில் பங்கு கொண்ட எல்லா குழந்தைகளுக்கும் பரிசு வழங்கப்படுகிறது. இதைத் தவிர முதல் மூன்று பரிசுகளும் உண்டு. ஆயுத பூஜைக்கு ஒரு மாதம் முன்பாகவே பாட்டுப் போட்டி, டிராயிங் போட்டி, கை பொருள்கள் செய்யும் போட்டி என்று தனித் தனியே குழந்தைகளுக்கு, மனைவிகளுக்கு, பணிபுரிபவர்களுக்கு என்று நடத்தப்படுகிறது. இதன் பரிசளிப்பும் ஆயுத பூஜை நிகழ்ச்சிக்காக அமைக்கப்பட்ட மேடையில் நடைபெறுகிறது.

இதன் பின் ஏதாவது ஒரு கலை நிகழ்ச்சி - மேஜிக் ஷோ அல்லது லைட் மியூஸிக், அல்லது டிராமா என்று ஏதோ ஒன்று. இந்த நிகழ்ச்சிகள் முடிய இரவு ஒன்பது மணி ஆகி விடுகிறது. நிகழ்ச்சியின் கடைசி நிறைவு செய்யும் வகையாக வாண வேடிக்கை. ஓ!ஹோ மனிதர்களின் சிரிப்புச் சிதறல். வானத்தில் பூ சிதறல், கடந்த இரண்டு வருடங்களாக இந்த வாண வேடிக்கை அவ்வளவு கோலாகலமாக நடைபெறுவது இல்லை. காஸ் யூனிட் ஒன்று புதிதாக அமைக்கப்பட்டிருப்பதால் முன்ஜாக்கிரதை கருதி இந்த ஏற்பாடு.

ஆயுத பூஜை நிகழ்ச்சிகளைக் கண்டு களித்து லேசான மனத்துடனும் ஏராளமான சந்தோஷத்துடனும் திரும்பும் ஒவ்வொருவர் கையிலும் ஏக பாரம். பொறி கடலை, ஆப்பிள் போடப்பட்ட ஒரு துணிப் பை, வீட்டிற்குத் தேவையான ஒரு எவர்சில்வர் சாமான், முக்கால் கிலோ இனிப்புப் பொட்டலம், குழந்தைகளின் பரிசுப் பொருட்கள் என்று தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு செல்ல இரண்டு கைகள்தான் போதாது. ஆனால் இவர்களைச் சுமந்து செல்ல வாசலில் தனியாக ஏற்பாடு செய்யப்பட்ட பல்லவன் 'ஜம்'மென்று நின்று கொண்டிருக்கும். டிக்கெட்டை படு ஜாக்கிரதையாக பாக்கெட்டில் சுமந்து போக வேண்டாம். ஏனென்றால் அன்று ஒரு நாள் நிர்வாகம் ஏற்பாடு செய்திருக்கும் பல்லவனில் டிக்கெட் வாங்க வேண்டாம்.

ஆயுத பூஜை நிகழ்ச்சிக்காக, இக் கம்பெனியின் சேர்மேன் திரு. சுரேஷ் கிருஷ்ணா சுமார் ரூபாய் ஒன்றரை லட்சம் வரை ஒதுக்கியுள்ளார். இந் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்வதற்கென்று ஆறு கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆயுத பூஜைக்கு ஒரு மாதம் முன்பாகவே இக் கமிட்டிகள் செயல்படத் துவங்குகின்றன.

சுரேஷ் கிருஷ்ணாவும் அவரது மனைவி உஷா கிருஷ்ணாவும் அன்று முழுவதும் தொழிலாளிகளுடன் அவர்கள் நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு உற்சாகம் அளிக்கிறார்கள்.

- லதா ரகுநாதன்.



# சொல்ல விரும்புகிறோம்

✤ டென்சன்... டென்சன்... என சதாசர்வ காலமும் ஆகி விட்ட இந்த நேரத்தில் உடல், மனம், பக்தி இவைகளைக் கோர்வையாக்கி 'உணவு' என்கிற கட்டுரை பெரிதும் மன அமைதியைக் கொடுத்தது.

மதுரை - 11, சுகந்தி நாராயணன்.

✤ சமாளிப்பது எப்படி? சமையல் சிறப் பிதழில் அதிகம் எதிர்பார்த்த எங்களுக்கு ஏதோ எழுதி சமாளித்து விட்டீர்கள். சமா ளிப்பது எப்படி? இந்தப் பகுதியை வாசகிகளிடம் விட்டிருந்தால் வெளுத்துக் கட்டியிருப்போம். கூடை, கூடையான சமா ளித்த அனுபவங்கள், இன்னும் சுவையான அனுபவங்கள் பல உண்டே வாசகிகளிடம், இருந்தாலும் 'சமையல்' சிறப்பிதழ் ஜோரா கவே இருந்தது.

திருநெல்வேலி - 1, கமலா ஜானகிராமன்.

✤ என் தோழியின் திருமணத்திற்குப் பரிசு என்ன தரலாம்? என்று யோசிக்கும் வேளை யில் இம்மாத 'சமையல் ஸ்பெஷல்' வரவே...அதையே மணப் பரிசாகத் தர அவளின் முகத்தில் ஏக மகிழ்ச்சி!

குத்தாலம், விஜிரமேஷ்.

✤ இம்மாத 'மங்கையர் மலர்' சமையல் சிறப்பிதழாக வெளிவந்து எங்களை மகிழ்ச் சியில் ஆழ்த்தி விட்டது. ஆறு ரூபாய்க்கு ஏராளமான சமையல், குறிப்புக்களைத் தந்து அசத்தி விட்டீர்கள். தினம் தினம் ஒவ் வொன்றாக செய்து ருசிக்க இருக்கிறோம்.

தஞ்சாவூர் - 1, ப்ரியதமா.

✤ சர்க்கரைக்குப் பதில் செயற்கை இனிப் பூட்டிகளை உபயோகிக்கலாம் என்று கட்டு ரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. சமீப ஆராய்ச்சிகளின் படி இவை புற்று நோய் ஏற்படக் காரணமாகலாம் என்று கண்டு பிடிக்கப்பட்டதால் கடந்த 2, 3 ஆண்டுகளாக நீரிழிவுத் துறை சிறப்பு மருத்துவர்களும் உணவு ஆலோசகர்களும் இவற்றைத் தவிர்க் கும்படி கூறி வருகிறார்கள். இச் செய்தி இன்னும் பல பொது மருத்துவர்களைக் கூட சென்றடையாததால், அவர்கள் அவற்றை உபயோகிக்கலாம் என்றே அறிவுரை கூறி வருகிறார்கள் என்பது கவலைக்குரிய தாகும்.

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

✤ ''மங்கையர் மலர் பற்றி வாசகர்களாகிய நாங்கள் சொல்ல விரும்புவதை, நீங்கள் கேட்க விரும்பவில்லையா? சென்ற இதழில் 'சொல்ல விரும்புகிறோம்' பகுதி இடம் பெறாததைக் குறிப்பிடுகிறேன்.

தூத்துக்குடி - 1, என். சம்பத்.




✤ சமையல் சிறப்பிதழ் பார்த்தேன். படித்தேன் என்று சொல்வதை விட ''சுவைத் தேன்'' என்பதுதான் சாலப் பொருத்த மாகும். அதிலுள்ள தகவல்கள் யாவும் தலை வாழை இலையில் அறுசுவை உணவை உண்ட திருப்தியை அளித்தது. பாராட் டுக்கள்!

புதுவை - 3, கே. லீலாவதி கிருஷ்ணவேலு.

✤ 'கற்றது கரண்டி அளவு' நகைச்சுவை தாளிக்கப்பட்ட நயமானதொரு பாடம் புகட் டும் கட்டுரை. இல்லத்தரசிகளாக வரவிருப் பவர்களுக்கு, உணவை எவ்வாறு தயாரிக்க வேண்டும், எவ்வளவு தயாரிக்க வேண்டும், எப்போது பரிமாற வேண்டும், எப்படிப் பரிமாற வேண்டும் என்ற நல்லதொரு அறிவுரை கூறும் நல் மருந்தாக அக் கட்டுரை அமைந்தது. Yes it is a sugar coated tablet. கேயெஸ்ஸுக்குப் பாராட்டுக்கள்.

திருப்பரங்குன்றம், டி. கே. சுப்பிரமணியன்.

✤ கொஞ்சம் தாராள மனதுடைய, பணிக்குச் செல்லும் (சம்பாதிக்கும்) பெண்ணின் பிரச் னையை நாசுக்காகக் காட்டியது, குந்தளா வின் ''கடன் முதலாகியது.'' நடைமுறை யில் தன் வீட்டாருக்கு இந்த அளவு செய்ய புகுந்த வீட்டார் விடுவதில்லையே!

மகிழஞ்சேரி, கே. ரவிச்சந்திரன்.

✤ 'மங்கையர் மலர்' சமையல் சிறப்பிதழை

வீட்டுக்கு வாங்கிச் செல்கையிலேயே... பயம்! பின்னே - இவ்ளோ சமையல் விஷயங்களைப் படிச்சதும் சும்மா விடுவார்களா, என்ன?

'வாரம் ஒன்று மட்டும்... ப்ளீஸ்...!' என்று முதல் பக்கத்தில் கொட்டையாக எழுதி வீட்டில் சேர்ப்பித்தேன். யப்பாடா... நிம்மதி!

மதுரை, பிரபாகர் ப்ரியன்.

✤ சென்ற மாதம் ''மங்கையர் மலரி''ல் வந்துள்ள பாதாம் பூரியில் ஒரு சிறிய தவறு நேர்ந்துள்ளது. அதில் பூரி இட்டு அதில் அரிசி மாவு நெய் குழைத்ததைத் தடவுவதற்குப் பதிலாக சர்க்கரைப் பாகைத் தடவச் சொல்லி கருட்டச் சொல்லியிருக்கிறார்கள்.

சென்னை - 18, ராஜலட்சுமி.

✤ பேக்கரி பிஸ்கட்ஸ் பகுதியில், 'முட்டை இல்லாத கேக்' தயாரிக்கும் முறையில் மணல் விடுபட்டுள்ளது. குக்கரில் அரை அங்குல கனத்திற்கு ஈரமான மணலைப் பரப்பி அதன் மீது கேக் கலவைப் பாத்திரத்தை வைக்க வேண்டும். ஸ்டேண்டை வைக்கக் கூடாது. மற்றவையெல்லாம் அதில் விவரித்துள்ளபடியே.

சென்னை, பேக்கரி ஐயர்.

மஞ்சுளா ரமேஷ்

# வெள்ளி கர்வம் -19-

ராதா மௌனமாக மணியையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஈஸிசேரில் சாய்ந்திருக்கும் அந்தப் பெரிய உருவம் உடம்பெல்லாம் நகைகள். ஆணிற்கு எதற்கு நகை என்று கேட்கலாம். பணம் இருக்கிறதே? கெட்டியாக ஆறு பவுன் மைனர் செயினில் கோத்த ருத்திராட்சக் கொட்டை. அதற்கப்புறம் ஒரு செயின். கையில் கெட்டியான தங்கக் கோப்பு. ஒரு விரலில் நவரத்தின மோதிரம். மற்றொன்றில் கொட்டைப் பாக்குப் போல கெட்டியான மோதிரம்.

எப்பொழுது இந்தக் கோடம்பாக்க வீட்டுக்கு வந்தாலும் அட்டகாசமான பேச்சும், சிரிப்பும்... இப்பொழுது எல்லாமே ஒடுங்கிப் போய் அமர்ந்து இருந்தார். வந்ததில் இருந்து ஒரே மௌனம். அதுவும் ஒன்றரை மாதமாக இந்தப் பக்கமே எட்டிப் பார்க்காதவர் அதிசயமாக வந்திருக்கிறார்...

''ஸ்...ஸ்...'' கருநாகம் மூச்சு விடுவது போன்ற சத்தத்தில் திரும்பிப் பார்த்தாள். அந்த ஒண்டுக் குடித்தனத்தின் அடுத்த அறையில் இருந்த செண்பகம்தான் சப்தமிட்டுக் கொண்டிருந்தாள். மணியின் கவனம் திரும்பாதவாறு எழுந்து வெளியே வந்தாள்.

''என்னடீ...?''

''அந்த டான்ஸ் ப்ரோக்கர் வந்திருக்கான். நாளைக்கு ஷூட்டிங்காமே...?''

''தெரியலையே.. இவர் என்னமோ இவ்வளவு நாளா காணோமேன்னு ஷூட்டிங்குக்கு ஒத்துக்கலாம்னு சொன்னேன். இப்ப வந்து உக்காந்துக்கிட்டு இருக்காரே...''

''வெளியே போப் போறீங்களா..?''

உதட்டைப் பிதுக்கினாள் ராதா. மணியால் அங்கே ஐந்து நிமிஷத்திற்கு மேல் தங்க முடியாது. அவளை டிரெஸ் செய்து கொள்ளச் சொல்லி எங்கேயாவது பெரிய ஹோட்டல், மகாபலிபுரம் எனக் காரில் அழைத்துச் சென்று விடுவார். ஆனால் இன்றைய நிலைமையே வேறு மாதிரி அல்லவா இருக்கிறது.

''அப்போ அந்த நட்டுவுக்கு என்ன சொல்ல...?''

''பாக்கலாண்டி. இதை வுட்டற வேண்டியதுதான். இன்னொரு ஷூட்டிங்கப்போ பார்த்துக்கலாம்...''

செண்பகம் அவளை ஆழ்ந்து பார்த்தாள். ''இதே நாலு நாள் முன்னாடி எப்படி அழுதே...? இவரை நம்பி சினிமாத் தொழிலையும் விட்டுட்டேன். ஒரு மாசமா இருக்கற காசை வச்சு சமாளிச்சாச்சு. இனி என்ன பண்ணுவேன்னு புலம்பின. இப்ப வர்றதையும் விடறியே...?''

தலைகுனிந்து கொண்டாள் ராதா. ''என்ன பண்ணச் சொல்றே? இந்த ஆளுகிட்டே பொண்டாட்டியா இருந்தாச்சு. அங்கே போனா தெரியாதா? நட்டு மொத கொண்டு...''

''சரி சரி.. இப்பச் சொல்லிடறேன்...'' என்று நகர்ந்தாள் செண்பகம். ராதா உள்ளே நுழைந்த போது நிஷ்டை கலைந்திருந்தார் மணி.

''யாரு அங்கே...?''

அவர் காலடியில் வந்து அமர்ந்தாள் ராதா. ''பக்கத்து வீட்டு செண்பகம். யாரோ விருந்தாளிங்க வந்திருக்காங்களாம். பணம் கேட்டா...'' என்று இழுத்தாள்.

அப்பொழுதுதான் 'சொரேல்' என்றது மணிக்கு. ''அடேடே... ஒனக்கு நான் பணமே கொடுக்கலையே. போன மாசம் மளிகைக்கெல்லாம் என்ன பண்ணினே...?''

''இருக்கிறதுதான்...'' கீழே கிடந்த துரும்பை இழுத்துக் கோலம் போட்டாள்.

''ராதா...'' அவள் தலையை வருடியவர், என்ன நினைத்தாரோ 'சட்'டென்று கையை இழுத்துக் கொண்டார். அவரை நிமிர்ந்து பார்த்தவள்,

''ஏங்க வந்ததில் இருந்தே ஒரு மாதிரி இருக்கீங்க...'' என்று தயக்கத்துடன் நிறுத்தி





* கூண்டுக்குள் மிருகங்கள் இருக்குமாறு 'Zoo' அமைக்க என்ன செய்ய வேண்டும்? இதோ! ஐடியா! பழைய சல்லடை வலைகளை வட்டமாகவோ சதுரமாகவோ 'கட்' பண்ணவும். (கடையில் கூட மீட்டர் கணக்கில் வாங்கலாம்) அதில் கொண்டை ஊசிகளை ஓரமாகக் குத்தி, கீழே மணல் பரப்பி, நட்டு வைக்கவும். இந்தக் கூண்டுக்குள்ளிருக்கும் மிருகங்களைப் பார்க்க, 'Zoo'விற்கே சென்று பார்ப்பது போலிருக்கும்.

- உமா.

யவள்,

''உங்கள கேக்கலாமோ, கேக்கக் கூடாதோ தெரியலை. ஆனா...'' என்று தலை கவிழ்ந்த போது கண்களில் சரசர வென்று கண்ணீர் இறங்கியது.

''இந்த ஒரு மாசமும் என் மனசு பட்டபாடு எனக்குத்தான் தெரியும். எனக்கு வேற வேலை ஒண்ணும் இல்லே. ஷூட்டிங் குக்குப் போக வேண்டாம்னு சொல்லிட் டீங்க. பணம் காசு முக்கியமில்லைங்க. ஆனா நான் உங்களை எங்கே தேடறது, எப்படி வந்து நிக்கறது...''

அவளின் வாழ்வின் அவலமெல்லாம் நினைவுக்கு வர கேவிக் கேவி அழுதாள். எங்கேயோ தஞ்சாவூர் மாவட்ட சிறிய கிராமத்தில் பிறந்தவளை 'அழகி அழகி' என ஊரே ஏற்ற, டென்ட் கொட்டகை சினிமா வெல்லாம் மனதில் போதை ஏற்ற ரயிலேறி மெட்ராஸ் வந்தவள்தான். பதினெட்டு வயதுப் பெண்ணின் நெஞ்சின் கனவுகள் எல்லாம் கந்தல், கந்தலாகக் கிழிக்கப் பட்டது. ஏதாவது குரூப் டான்ஸில் ஆடுபவளாகத்தான் இடம் கிடைத்தது. அதற்கே ஏகப்பட்ட போட்டி. அந்த சான்ஸ் வாங்கவே ஒவ்வொரு முறையும் விழுந்து எழுந்தாள்.

ஒரு முறை திருமண செட்டிங்கில் கல்யாணப் பெண்ணைச் சுற்றி ஆடிய ஆட்டத்தில் தப்பாக ஒரு ஸ்டெப் வைத்து விட்டாள் என்று நடன டைரக்டர் ஓங்கி அறைந்தார். புரோகிதராக மந்திரம் சொல்லிக் கொண்டிருந்த மணியின் மேல் தடுமாறி விழுந்தாள். அப்பொழுது அவள் மேல் ஏற்பட்ட அனுதாபத்தில்தான் ஐந்து வருடமாக அவளை ஏற்றுக் கொண்டார். இந்த வாழ்க்கையே பரவாயில்லை என்று இருந்த போது அசல் ஆளே வரவில்லையென்றால்...

'நான் இவரோட வாழ்ந்திருக்கேன். எங்கே அவர்' என வீட்டிற்கா போய்த் தேட முடியும்? அல்லது நியாயம்தான் கேட்க முடியுமா? வாழும் வரை வாழ்க்கை... அதுவே நிலைதடுமாறும் போது நடனம் தான். எங்கே யாரிடம் பாதுகாப்பு கிடைக்கும்...'

குலுங்கிக் குலுங்கி அழுத ராதாவை மௌனமாக பார்த்துக் கொண்டிருந்தார் மணி. துக்கம் நெஞ்சை அடைத்தது.

'இவளும் என் பெண்ணைப் போலத் தான். ஆண் என்கிற திமிரில் இவளை எப்படியெல்லாம்...'

நினைக்கும்போதே இதயம் வலித்தது. எந்தக் காட்சிகளையெல்லாம் நினைத்துச் சந்தோஷப்பட்டு இருக்கிறாரோ அவையெல்லாம் இன்று ரணமாக வலித்தது. 'எல்லாம் என் பெண்ணிற்கு இப்படி ஒரு அவலம் ஏற்பட்டதாலா.... அல்லது அவளும் இப்படி ஆகி விடுவாளோ என்ற பயத்தாலா...'

அவர் கண்களிலும் கண்ணீர் இறங்கி



யதைப் பார்த்துத் திடுக்கிட்டாள் ராதா.

''என்னங்க இது...?''

''என்னை மன்னிச்சுடும்மா...'' என்று தலைகவிழ்ந்தார்.

பதறிப் போய் எழுந்து அவர் கைகளைப் பிடித்துக் கொண்டாள். ''ஐயோ நான் என்னென்னமோ சொல்லி உங்களை நோகடிச்சுட்டேன் போலிருக்கு. நீங்கதான் என்னை மன்னிக்கணும். நீங்க கொடுத்ததே பிச்சை. அதை ஏத்துக்காம உங்களையே பதிலுக்குக் கேட்டுட்டேன்...''

''இல்லம்மா. நான் அப்படி ஒண்ணும் பெரிய தர்மவாதி இல்லே. உனக்கு நல்ல படியா ஒரு வாழ்க்கை அமைச்சுக் கொடுத்திருக்கலாம். அதை விட்டுட்டு நானே உன்னை, இத்தனை வயசுக்கப்புறம்... எல்லாம் பாவம்... அந்தப் பாவம்தான் என் பொண்ணுக்கு விடிஞ்சிருக்கு போல இருக்கு...''

''என்ன சொல்றீங்க நீங்க...''

கண்களைத் துடைத்து அண்ணாந்து பார்த்துத் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டார்.

யமுனா கெட்டழிந்து வந்து நின்ற போது தான் அவளை பெல்ட்டால் அடித்ததையும், எல்லா அதிர்ச்சியும் ஒன்று சேர்ந்து அவள் படுத்த படுக்கையாகிப் போனதையும், அதனால் தான் இத்தனை நாள் வராமல் இடிந்து போய் இருந்ததையும் சொன்னார்.

''எவ்வளவு செல்லமா வளர்த்தேன். அவளுக்கு என்ன குறை வைத்தேன். இன்னும் வயசு ஆகவில்லை. இப்பவேவா ஒரு புருஷனைத் தேடிக்கச் சொல்லும். எப்படி அவ்வளவு திமிர் உடம்புல வந்ததுன்னே புரியலை...''

இதழ் கோடியில் ஓடிய இகழ்ச்சிப் புன்னகையை இழுத்து நிறுத்தினாள் ராதா. 'அவ யாரோட பெண். இத்தனை வயதான உனக்கே உடம்பில் எவ்வளவு திமிர் இருந்தது. அந்த ரத்தத்தில் வந்த அவளுக்கு இருக்காதா என்ன. அடிபட்ட பிறகுதான் நியாயம், அநியாயம் எல்லாம் தெரிகிறது போல இருக்கிறது' எண்ணத்தை இழுத்து நிறுத்தியவள்,



''அதுக்காக பச்சைப் புள்ளைய போட்டு அப்படியா அடிப்பாங்க. பாவம் குழந்தை. ஆமா, வந்து... வேற ஒண்ணும் இல்லையே...''

''அப்படீன்னா...''

''அப்படீன்னா, இல்லே ஏதோ நடந்துடிச்சுன்னு சொல்றீங்க... பொண்ணு..'' தயங்கியவள், ''அப்புறம் ஒண்ணும் இல்லையே...''

படீரென்று புரிந்தது அவருக்கு. 'ஐயையோ, ஆண்டவா அப்படி ஒரு சோதன்னை கூட வந்து விடுமா என்ன...?'

அதைப் பற்றி உடனே தெரிந்து கொள்ள வேண்டும் என்று தோன்றியது. சட்டென்று எழுந்து கொண்டவர், மடியில் இருந்த ரூபாயை அவளிடம் அப்படியே கொடுத் தார்.

''இதுலே எவ்வளவு இருக்குன்னு தெரி யலை. வச்சுக்க. நான் அப்புறமா வர்றேன்...'' என்று போய் விட்டார்.

ராதாவிற்கு மனசில் ஏதோ திருப்தி நிலவியது. அதே சமயம் அது தவறு என்றும் தோன்றியது. தன்னை இந்த நிலைக்கு ஆளாக்கிய சமூகத்தைப் பழிவாங்கிய திருப்தி. ஆனால் இவர் இல்லையென்றால் இன்னும் தன் வாழ்வு மோசமாகி இருக்க லாம். ஏன், யாராவது நல்ல டைரக்டரின் கண்ணில் பட்டு இரண்டாம் கதாநாயகி யாகக் கூட ஆகியிருக்கலாமே... இவன் என்னை என்ன பாடுபடுத்தி இருக்கிறான்... சில சமயம் குமட்டிக் கொண்டு வரும். தன்னுடைய பொன்னிறமான நிறத்தையும், அழகே உருவான இளமையையும் இந்த வயதானவனிடம் அர்ப்பணித்து...

'தப்பு தப்பு' என கன்னத்தில் போட்டுக் கொண்ட போது செண்பகம் உள்ளே நுழைந் தாள்.

''என்னடீ எதிர்க்க பிள்ளையார்தான் இல்லையே, ஏன் கன்னத்தில் போட்டுக் கறே,...?''

அவளிடம் மறைக்க முடியவில்லை. தனக்குள் நடக்கும் மனசாட்சி யுத்தத்தைச் சொன்ன போது செண்பகம் கலீரெனச் சிரித்தாள்.

''போடி பைத்தியக்காரி. என்னமோ அம்மி மிதிச்சு அருந்ததி பார்த்தா மாதிரி அப்படி வருத்தப்படறே. இன்னிக்கு இவன் பொண்ணு சீரழிஞ்ச போது உன் ஞாபகம் வந்திருக்கு. அது கூட உனக்குப் பண்ணின பாவத்தால வந்திருக்குமோங்கற பயத்துல தான் அழுவுறாரு. நிசமா, ஐயோ இந்த மாதிரி பண்ணணுமேன்னு திருந்தி அழலையே...''

என நொடித்தவள்,

''ஒண்ணு தெரிஞ்சுக்க. புருஷன்காரன்

அன்பா, ஆதரவா பொண்டாட்டியா வச்சி ருந்தாத்தான் அவளுக்கும் அவன் மேல மதிப்பு இருக்கும். இல்லைன்னா நம்பள மாதிரி ஒபனா அவங்க வாழ்க்கையை நடத்தலதான். ஆனாலும் அவன் மேல இருக்கிற வெறுப்புல சீ இவனைக் கட்டிக் கிறதுக்கு வேற எவனையாவது கட்டிக்கிட்டு இருந்தா நல்லா இருந்திருக்கலாமே'ன்னு நினைக்கத்தான் நினைப்பா. அப்ப அது தப்பா, சரியா...''

ராதா சிரித்தாள். ''நமக்குத்தான் கல்யா ணம்ங்கறது இல்லையே. நாம யாரு இதை யெல்லாம் சொல்ல...''

''நமக்குத்தான் தகுதி ஜாஸ்திடீ. இதோ இன்னிக்கு ஒரு ஷூட்டிங்க விட்டே. இதை எதை நம்பி விட்டே சொல்லு. மனச்சாட் சிக்குப் பயந்துதானே? நீ பொண்டாட்டிய விட ஒஸ்திதான்...''

கலீரெனச் சிரித்தாள் ராதா. ''அந்த அம்மா காதில விழுந்தா ஒன்ன நாரா கிழிச்சுடுவா...''

''அடப் போடி. இவ ஒருத்தி. அந்தம்மா இந்த ஆளைக் கண்டாளா, அவ பொண்ணைக் கண்டாளா.. வீடெல்லாம் காசு... விதவிதமா நகையைப் போட்டுக்கற துக்கும், ஒரு விருந்து பாக்கியில்லாம போய் தான் போட்டிருக்கிறதை எல் லாருக்கும் காமிக்கிறதுக்கு சரியா இருந்திருச்சு. நீ இந்த ஒரு மாசம் அவரு வருவாரு வருவாருன்னு பாத்துட்டு இருந் தியே. அப்போ நிஜமான பொண்டாட்டிக்கு இலக்கணம் யாரு...''

''ஐயோ போதுமே'' முகம் செம்மை யேறச் சிரித்தாள் ராதா.

''எப்படியிருந்தாலும் ஒருத்தரோட கஷ்டத்துல நாம அப்படியெல்லாம் பேசக் கூடாது இல்லையா... பாவம் அவங்க வீட்ல எப்படியெல்லாம் துடிச்சிருப்பாங்க. பத்தா ததுக்கு நான் வேற ஒரு பிரச்னையை கிளப்பி விட்டு அனுப்பிச்சிட்டேன்...''

''எல்லாம் நல்லதுக்குத்தான்...'' என நீளமாகக் கொட்டாவி விட்ட செண்பகம் அங்கேயே புடைவையைப் பிரித்து விரித்துப் படுத்து விட்டாள்.

ராதாவிற்குத் தூக்கம் வரவில்லை. கையில் இருந்த பணத்தை எண்ணினாள். ஆயிரத்த நூற்றியெண்பது இருந்தது. பரவாயில்லை, சிக்கனமாக இருந்தால் மூன்று மாதம் வரை கூட தாக்குப்பிடித்து விடலாம். அப்புறம் பார்த்துக் கொள்ள லாம்.

எழுந்து போய் தடுப்பிற்குப் பின்புறம் இருந்த சமையல் மேடை அஞ்சறைப் பெட்டியில் வைத்து அழுத்தமாக மூடினாள்.

அப்போதுதான் கூடத்தில் பரவிக் கிடந்த தர்ப்பைக் கட்டு, மாவிலை எல்லா வற்றையும் பெருக்கி ஓரமாகப் படுத்த காந்தன் காரில் உறுமல் கேட்டு 'சடக்'கென எழுந்து கொண்டான். சாதாரணமாக இவ்வளவு சீக்கிரம் திரும்ப மாட்டாரே என யோசித்துக் கொண்டே கதவைத் திறந்து விட்டான்.

அவனைத் தள்ளிக் கொண்டே உள்ளே நுழைந்த மணி,

''மாமி எங்கேடா...'' என்றார்.

''உள்ளே யமுனாவோட படுத்துக்கிட்டு இருக்காங்க...'' என்றான் மென்று விழுங்கியபடி.

செருப்பை உதறிப் போட்டு விட்டு ஒருக்களித்திருந்த கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார்.

யமுனா ஜன்னல் பக்கத்து நாற்காலியில் அமர்ந்து ஏதோ புத்தகம் படித்துக் கொண்டி ருந்தாள். சரோஜா நெற்றி மேல் கை போட்ட படி கண்ணை மூடியிருந்தவள், அவர் வரும் சத்தத்தில் எழுந்து கொண்டாள்.

வேகமாக உள்ளே வந்து விட்ட மணி வாயைத் திறந்து மூடினார். யமுனாவின் மேல் பார்வை ஓடியது.

''அம்மா யமுனா, போய் 'ஜில்'லுன்னு தண்ணி கொண்டு வாயேன்...'' புத்தகத்தை மடித்து ஜன்னலில் வைத்த யமுனா

புடவைக்குக் கஞ்சி போட்டு அலசும் போது புடைவையை நீளவாட்டில் அலசாமல் நாம் சுட்டும்வாக்கில் குறுக்காக (மடிப்பு வைப்பது போல) கையால் சுருக்கிக் கொண்டு அலசினால் புடைவை சுருக்கமின்றி நன்கு பிரிந்து கொடுக்கும். அதே வாட்டத்தில் காய வைத்து எடுத்து அதை மடித்துத் தலையணையின் அடியில் வைத்து விட்டால் அதை அயர்ன் செய்ய வேண்டிய அவசியமே இல்லை. செய்து பாருங்களேன்!

– அலமேலு இராசகோபால்.



வெளியே போனாள். மனைவியின் பக்கத்தில் போன மணி,

''ஏண்டி இவ அப்புறமா குளிச்சாளா...'' எனப் 'படக்'கென கேட்டார்.

''ஐயோ பகவானே'' எனக் காதைப் பொத்திக் கொண்ட சரோஜாவிற்குக் கண்களில் இருந்து நீர் கொட்டியது.

''ஏன் உங்களுக்கு இப்படியெல்லாம் புத்தி போறது.. திடீர்னு இது என்ன கேள்வி...''

''திடீர்னு இல்லை. உறுத்திண்டிருந்த சந்தேகம்தான்...'' புடைவையின் நுனியால் கண்ணையும், மூக்கையும் துடைத்துக் கொண்ட சரோஜா,

''அசட்டு பிசட்டுன்னு ஏதாவது பேசாதீங்க. நடந்தது நடந்து போச்சு. அவளுக்கு நல்ல வரனா பாருங்க. சீக்கிரமா கல்யாணம் பண்ணி வச்சுடுவோம். சும்மாஒரு பொண்ணு இருபத்தி நாலு மணி நேரமும் வீட்ல இருக்கறது தப்பு...''

''இவள யாருடி...'' என ஆரம்பித்தவர் யமுனா உள்ளே நுழைவதைப் பார்த்து வாயை மூடிக் கொண்டார்.

மெல்ல நடந்து வந்து தந்தையிடம் சொம்பையும், தம்ளரையும் கொடுத்தவள் மீண்டும் ஜன்னலுக்குப் போகாமல் வெளியே போய் விட்டாள்.

அவளையே பார்த்துக் கொண்டிருந்த மணிக்கு வயிறு கலங்கியது. எப்படி இருந்த குழந்தை எப்படி வாடிப் போய் விட்டது. இந்தப் பெண்ணிற்கு நல்ல வாழ்வு அமையுமா...? ஏனோ வாடிய ராதாவின் முகம் நினைவிற்கு வந்தது.

அவரையே பார்த்துக் கொண்டிருந்த சரோஜா, ''நம்ப வீடு வரைக்கும்தான் தெரியும் இந்த சமாசாரம். அதனால காதும், காதும் வச்சாப்ல கல்யாணத்தை பண்ணிட்டா ஒண்ணும் பிரச்னை இல்லே...'' என்றவள் திடீரென நினைவுக்கு வந்தவள் போல,

''ஏன் ஸ்ரீதரனுக்கே பண்ணிக் கொடுத்துட்டா என்ன...?'' என்றாள்.

''என்னடி இது, சாந்தா ஒத்துப்பாளா... எல்லாம் அவளுக்குத் தெரியும்...''

''அதனால என்ன, யாரும் இல்லாம ரெண்டு குழந்தைகளோட இங்கே வந்து நின்னப்ப ஆதரிச்சது யாரு. நீங்க இல்லேன்னா எங்கேயோ, எப்படியோ போயிட்டிருப்பா. அந்த நன்றியை அவ்வளவு சீக்கிரம் மறந்துடுவாளா...?'' என்று நொடித்தாள்.

'அவளுக்கு யார் வாழ்வு கொடுத்தா. அவளோட கடின உழைப்புல இல்லே முன்னுக்கு வந்தா. அவ கைச் சமையலுக்காகவே எத்தனை பேர் என்னை புரோகிதரா கூப்பிட்டா. அதுலேயும் அவளுக்குன்னு கொடுத்த பணத்துல பாதிதானே அவளுக்குப் போகும்...' என்று நினைத்துக் கொண்டவர்,

''செஞ்ச பாவமெல்லாம் போறும்டி யம்மா. அவளை இன்னும் நோகடிக்காதே. வேற ஏதாவது தகையறதா பார்க்கலாம்...''

''நீங்க ஒண்ணும் பார்க்க வேண்டாம். ஸ்ரீதரனுக்கு யமுனாவை கொடுத்துட்டா பிற்காலத்துல பயம் இல்லாம இருக்கலாம். இவ்வளவு சொத்தோட பொண்ணு வந்தா கசக்கறதா...''

''இது முன்னாடி நீ கொடுத்திருப்பியா...'' என எரிச்சலோடு கேட்டார்.

''முன்னாடி இப்படி ஆகாம இருந்தா அந்தப் பரதேசிக்குக் கொடுக்க எனக்கென்ன தலையெழுத்து...''

''போறும்மா அதோட நிறுத்திக்கோ...'' நொந்து போய் எழுந்தார்.

''நான் நிறுத்திக்கறதா இல்லை. நீங்க கேக்க வேணாம். சும்மா உட்கார்ந்திருங்கோ, போதும், நான் பாத்துக்கறேன் எல்லாத்தையும்...'' தீர்மானமாகச் சொன்னாள்.

(தொடரும்)



கொலுவிற்கு...

★ பெரிய சர்ஃப் டப்பாக்கள், மருந்து அட்டை டப்பாக்களை, வெள்ளை அல்லது மஞ்சள் பேப்பரால் ஒட்டவும். அதில் ஃபிளாட்டில் இருப்பது போல் மேலிருந்து வரிசையாக ஜன்னல் போன்ற படங்களை கலர் பென்சிலால் வரைந்து, ஜன்னலின் கதவுப் பகுதியை மட்டும் மெதுவாக வெட்டி எடுத்து விடவும். இனி உங்கள் விருப்பப்படி தேவையான கண்ணாடி கலர் பேப்பரை வெட்டி, ஓரங்களில் பசை தடவி டப்பாவின் உட்புறமாக ஜன்னல் பகுதியில் ஒட்ட, கண்ணாடிக் கதவு போட்ட ஜன்னல்களுடன் கம்பீரமான ஃபிளாட் உருவாகி விடும்.

- உமா.



# பட்டர் ஸ்காட்ச் சேவை நொடியில்!




சுவை அபாரம்
செய்வதில் இல்லை பாரம்

**டிடிகே ரைஸ் சேவை**

TTK தயாரிப்பு

## பட்டர் ஸ்காட்ச் சேவை

### தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| டிடிகே ரைஸ் சேவை | : | 250 கிராம் |
| தேங்காய் துருவல் | : | 1/2 கப் |
| உலர் திராட்சை | : | ஒரு கைப்பிடி |
| முந்திரி பருப்பு | : | 1/2 கப் |
| ஏலக்காய்ப் பொடி | : | 1 டீஸ்பூன் |
| பட்டர்-ஸ்காட்ச் பவுடர் | : | 1 1/2 கப் |
| நெய் | : | 1/4 கப் |

**செய்முறை:** சேவையை முதலில் வேறாகத் தயாரித்து வைக்கவும். வாணலியில் நெய்யை உருக வைத்து, உலர் திராட்சை, தேங்காய் துருவல் சேர்த்து பொன்னிறமாக வறுக்கவும். பிறகு சேவை, பட்டர் ஸ்காட்ச் பவுடர், ஏலக்காய்ப்பொடி இவற்றை இத்துடன் கலந்து பரிமாறவும்.

**பட்டர் ஸ்காட்ச் பவுடர் தயாரிக்க:** வாணலியை சூடாக்கி ஒரு கப் சர்க்கரை இட்டு, தண்ணீர் சேர்க்காமல் குறைந்த தீயில் சர்க்கரை கரையும் வரை கிளறி, பிறகு 1/2 கப் முந்திரிப்பருப்பு சேர்த்து, நெய் தடவிய தட்டில் கொட்டவும். ஆறியதும் இதைப் பொடி செய்யவும்.

எனக்குத் தெரிந்த இரண்டு இளம் பெண்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு நீலா, மாலா என்று பெயர் வைப்போம். இரண்டு பேரும் கிட்டத்தட்ட ஒரே வயது, தோற்றம், குடும்பச் சூழ்நிலையுள்ளவர்கள். இரண்டு பேரும் ஒரேவிதமான கல்வித் தகுதி பெற்றவர்கள். ஒரே மாதிரியான, நடுத்தரத்துக்குச் சற்று குறைந்த பொருளாதார வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். இரண்டு பேருக்கும் சென்னையில் ஒரே நிறுவனத்தில் ஒரே மாதிரியான ஒரே சம்பளமுள்ள வேலை. சம்பளம் சற்றுக் குறைச்சல்தான். ஆனாலும் நீலா அழுது வடிந்து கொண்டிருக்கிறாள். மாலா சந்தோஷமாக இருக்கிறாள். அதுதான் முக்கியமான வித்தியாசம்.

இதற்கு என்ன காரணம்? அவரவர்களுடைய கண்ணோட்டம் வேறுபட்டிருக்கிறது. குடும்பத்தை விட்டு விட்டுச் சென்னையில் தனிமையாக வசிக்க வேண்டியிருக்கிறதே என்று நீலா வருந்துகிறாள். கட்டுப்பாடின்றி சுதந்திரமாக இருக்கிறோமே என்று மாலா சந்தோஷப்படுகிறாள். சம்பளம் போதவில்லையே, ஆசைப்பட்டதை வாங்கி அனுபவிக்க முடியவில்லையே என்று நீலா ஏங்குகிறாள். குறைந்த சம்பளத்தில் இயன்ற வரை வசதியுடனிருக்க முயலுவதை ஒரு சவாலாக எடுத்துக் கொண்டு மாலா அதைச் சமாளிப்பதில் மகிழ்ச்சி காணுகிறாள். சந்தோஷம் என்பது பிறர் கொடுத்து வராது. நமது சந்தோஷத்தை நாம்தான் உண்டாக்கிக் கொள்ள வேண்டுமென்று மாலா அறிந்திருப்பதே அவளுடைய மகிழ்ச்சியான வாழ்க்கைக்குக் காரணம்.

துக்கத்திற்கான காரணங்களைக் கண்டுபிடிப்பதை விட மகிழ்ச்சிக்கான காரணங்களைக் கண்டுபிடிப்பதில் உளவியலார் அதிகமாக முனைந்திருக்கிறார்கள். சந்தோஷம் நமது உள்ளத்திற்குள்தான் புதைந்து கிடக்கிறது. அதை வெளிக்கொணருவதற்கான உத்திகளைத் தெரிந்து கொள்வது நன்மை தரும்.

மீனா என்கிற இன்னொரு இளம் பெண்ணை எடுத்துக் கொள்வோம். அவளுடைய கண்ணோட்டமே எதிர்மறையானது. ''இந்த வேலை எனக்குக் கிடைக்காது. கிடைத்தாலும் அதை ஒழுங்காகச் செய்ய முடியாது. ஒழுங்காகச் செய்தாலும் கொஞ்ச நாளைக்கெல்லாம் வேலையை விட்டு நீக்கி விடுவார்கள்'' என்கிற ரீதியிலேயே அவள் சிந்திப்பது வழக்கம். அவளுக்குத் திறமைகளில் ஒன்றும் குறைச்சலில்லை. ஆனாலும் அவளுடைய தன்னம்பிக்கை தரை மட்டத்திலிருந்தது. மேலதிகாரிகளுக்கும் அவளுடைய திறமைகளில் நம்பிக்கை குறைந்தது. ஏதாவது ஒரு வேலை



கொடுத்தால் "வந்து சார், இதை என்னாலே செய்ய முடியுமென்று தோன்றவில்லை" என்று ஒரு ஊழியன் சொன்னால் அவனை மேலதிகாரி எப்படி மதிப்பார்? அதனால் மீனா எந்த ஒரு நிறுவனத்திலும் இரண்டு, மூன்று மாதங்களுக்கு மேல் நீடிக்க முடியாமல் போயிற்று.

திடீரென்று ஒரு நாள் மீனா கையில் ஒரு புத்தகம் அகப்பட்டது. அதில் இருந்து புத்திமதிகளை அவள் கடைப்பிடிக்கத் தொடங்கினாள். தினமும் ஒரு மணி நேரம் ஆழ்நிலை தியானம் செய்யத் தொடங்கினாள். தியானத்துக்குப் பிறகு பகவத் கீதையைச் சிறிது நேரம் படிப்பாள். வெற்றிக்கு என்ன வழி என்று விவரிக்கிற புத்தகங்களை வாங்கிப் படிக்கத் தொடங்கினாள். இன்று அவள் ஒரு புதிய பெண்ணாகி விட்டாள். நல்ல வேலையில், நல்ல சம்பளத்தில் நல்ல பெயருடன் வாழ்ந்து வருகிறாள்.

இந்த உத்தி ஒன்றும் புதியது அல்ல. வாழ்க்கையில் கஷ்டப்படுகிறவர்கள் ராமாயணத்தின் சுந்தர காண்டத்தைப் படித்தால் கஷ்டங்கள் நீங்கும் என்று பெரியவர்கள் சொல்வதுண்டு. அது எவ்வளவு தூரம் உண்மையென்று தெரியாது. ஆனால் சுந்தர காண்டத்தில் சீதை படுகிற துன்பங்களைப் படித்தவர்கள் "சீதைக்கே இவ்வளவு பெரிய கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றனவே. அவற்றுடன் ஒப்பிடுகையில் நமது கஷ்டங்கள் அற்பமானவை. அவளுக்கு விடிவு வந்ததைப் போல நமக்கும் ஒருநாள் விடிவு வருமென்று" நம்பத் தொடங்கி, உற்சாகமடைவார்கள் என்பது உண்மையே. இதை டாக்டர் ஹெர்பர்ட் பென்சன் என்கிற உளவியலார் இறுக்கத் தளர்வு விளைவு (Relaxation response) என்று குறிப்பிடுகிறார். அந்த உத்தி மனதின் செயல்பாட்டை மாற்றி ஆக்கப்பூர்வமான சிந்தனையை உண்டாக்கி மகிழ்ச்சியின் ஊற்றுக் கண்களைத் திறந்து விடுகிறது. ஆழ்நிலைத் தியானத்தின் போது ராமா, கிருஷ்ணா என்ற கடவுளர் பெயரைத்தான் சொல்லிக் கொண்டிருக்க வேண்டுமென்கிற கட்டாயமில்லை. அமைதி, சாந்தி, சந்தோஷம், விடுதலை, உயர்வு என்பன போன்ற சொற்களைக் கூட ஜபிக்கலாம். வசதியாக உட்கார்ந்து கொண்டு, உடலைத் தளர விட்டுக் கண்களை மூடிக் கொள்ளுங்கள். இயல்பாகவும் மெதுவாகவும் மூச்சு விடுங்கள். மூச்சை உள்ளிழுக்கும் போது ஜப வார்த்தையைச் சொல்லுங்கள். மனதிலிருக்கக் கூடிய வேறு எண்ணங்களை வெளியேற்றி விடுங்கள். இதுபோலத் தினமும் காலையில் 20 நிமிடங்களுக்குச் செய்யுங்கள். மனம் மறுமலர்ச்சிக்குத் தயாராகி விடும்.

அடுத்து மனதுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டக்கூடிய நூல்களைப் படியுங்கள். வாழ்க்கையில் முன்னேறுவதற்கான வழிகள், பொது வாழ்வில் வெற்றியும் பிரபல்யமும் அடைவதற்கான வழிகள் போன்ற உத்திகளை விவரிக்கும் நூல்களில் ஓரிரு பக்கங்களைப் படியுங்கள்.

**ஓரிரு வாரங்களுக்குள்ளேயே உங்களுக்கு வாழ்க்கையில் பிரகாசமான பகுதிகள் தென்படத் தொடங்கும். இருண்ட பகுதிகளைத் தன்னம்பிக்கையுடன் எதிர்கொள்கிற, மனப்பாங்கு வளரும். நீங்கள் உயர்வடைவீர்கள் என்பதில் ஐயமில்லை. உங்களுடைய மனதுக்குள் இவ்வளவு சந் தோஷங்கள் புதைந்து கிடந்தனவா என்று நீங்களே ஆச்சரியப் படுவீர்கள்.**

# மகிழ்ச்சி ஊற்றாகப் பெருக...

## உச்சகட்ட மகிழ்ச்சி

குழந்தைகள் குதூகலமாக விளையாடுவதைப் பார்த்திருக்கிறீர்கள். பிரபல சங்கீத வித்வான் தனக்கு மிகவும் பிடித்த ஒரு பாடலைப் பாடும் போது கண்களை மூடிக் கொண்டு தன் பாட்டைத் தானே ரசித்து மகிழ்வதைப் பார்த்திருக்கிறீர்கள். ஆசிரியர் அவருக்கு மிகவும் பிடித்தமான ஒரு பாடப் பகுதியை மாணவர்களுக்கு மகிழ்ச்சி பொங்க விளக்குவதைப் பார்த்திருப்பீர்கள். ஆட்டக்காரர்களும் நடனமணிகளும் தமது உடலும் உள்ளமும் இசைந்து ஒத்துழைக்கிற நிலையில் முகத்தில் ஒளியும் மகிழ்ச்சியும் பொங்கி வழிய இயங்குவதைப் பார்த்திருப்பீர்கள். மனதுக்குப் பிடித்தமான செயலில் ஈடுபடும் போது தோன்றுகிற இந்தச் சந்தோஷத்தை மிஹாலிசிக் ஸென்ட் மிஹாலயி (Mihaly

csikszent mihali) என்ற அமெரிக்க உளவியில் நிபுணர் மகிழ்ச்சிப் பெருக்கு (flow) என்று குறிப்பிடுகிறார். ஊக்குவிப்புகள், தூண்டல்கள், ஆபத்து வாய்ப்பு, வெற்றி ஆகியவற்றின் மூலமே மகிழ்ச்சிப் பெருக்கு ஏற்படும் என அவர் கூறுகிறார்.

சவால்கள் மனிதனுக்கு உயிரியல் தன்மையில் இன்றியமையாதவை. சவால்கள் ஒரு அவசியத் தேவை. சவால்களைச் சமாளித்து வெற்றி பெறும் போது நமக்குத் தோன்றுகிற மேலாதிக்க உணர்வும் ஒரு அவசியத் தேவை. காதலுறவில் ஏற்படும் இன்பம் நம்மை இனப்பெருக்கம் செய்ய ஊக்குவிக்கிறதைப் போல சவால்களை எதிர்கொண்டு வெற்றி கொள்வது நம்மை வலுமிக்கவராகவும், வெற்றிகரமானவராகவும் ஆக்கி, மனித இனம் நீடித்து நிலைப்பதற்கு உதவுகிறது.

ஒரு கடினமான காரியத்தில் தீவிரமாக முனைவது களைப்பூட்டுவதற்கு மாறாகக் களிப்பூட்டவே செய்யும். தமது வழக்கமான தினசரி நடவடிக்கைகள் சுவாரசியமானவையாக இருப்பதாக உணர்கிறவர்கள் குறைந்த மன ஆற்றலைச் செலவழிக்கிறார்கள். மனதை ஒருமைப்படுத்தச் சிரமப்படுகிறவர்கள் அதிக ஆற்றலைச் செலவழித்து விரைவில் களைப்படைகிறார்கள். குழந்தைகளை விளையாடச் சொன்னால் நாள் பூராவும் விளையாடும். வீட்டுப் பாடத்தைச் செய்யச் சொன்னால் ஒரு மணி நேரத்தில் களைத்துப் போய் விடும் என்பது பெற்றோரின் அனுபவம்.

மகிழ்ச்சிப் பெருக்கு நிலையில் நமது மனம் உச்ச அளவுத் திறனுடன் பணியாற்றுகிறது. அதன் காரணமாக நமக்குச் சந்தோஷம் ஏற்படுகிறது. வேலையில் நாட்டம் தோன்றுகிறது. ஒழுங்கு ஏற்படுகிறது. ஆக்கல் திறன் மேம்படுகிறது. மகிழ்ச்சிப் பெருக்கு இல்லாத போது மனதைக் குவியப்படுத்த முடிவதில்லை. பணியில் திருப்தி ஏற்படாமல் அலுப்பு மிஞ்சுகிறது.

மகிழ்ச்சிப் பெருக்கை அதிகப்படுத்த இரண்டு வழிகள் உள்ளன.

ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்குமுன் ஒரு சடங்கு செய்யுங்கள். ஓரிரு நிமிடங்களுக்குக் கடவுளை நினைத்துத் தீவிரமாகப் பிரார்த்தனை செய்யலாம். ஓவியர்கள் ஓவியத்தை வரையத் தொடங்குமுன் வர்ணப் பெட்டிகளையும், தூரிகைகளையும், இதர உபகரணங்களையும் ஒரு குறிப்பிட்ட வகையில் ஒழுங்காக அடுக்கி வைத்துக் கொண்டு அதையே சிறிது நேரம் லயித்துப் பார்த்துக் கொண்டிருப்பார்கள். அலுவலகத்தில் தட்டச்சர் தமது தட்டச்சுப்

பொறியை அன்புடன் துடைத்துத் தடவிக் கொடுத்து விட்டுக் காகிதங்களை ஒழுங் காக அடுக்கி வைத்துக் கொள்வதும் ஒரு விதமான சடங்குதான்.

மனது குவிந்து லயிக்க வேண்டுமா னால் பணியில் எந்தக் கட்டத்தைச் செய்து கொண்டிருக்கிறோமோ அதில் மட்டுமே கவனத்தைச் செலுத்த வேண்டும். ஒரு கடி தத்தைத் தட்டச்சு செய்து கொண்டிருக்கிற போது அதில் மட்டுமே கவனம் செலுத் துங்கள். அடுத்ததாகத் தட்டச்சு செய்ய வேண்டியிருக்கிற கடிதத்தைப் பற்றியோ, அன்றைக்குள் தட்டச்சு செய்து முடித்து விட வேண்டிய கடிதக் கட்டைப் பற்றியோ கவ லைப்படாதீர்கள். ஒவ்வொரு கணத்திலும் லயித்து விடுவதுதான் மகிழ்ச்சிப் பெருக்கை உருவாக்குவதற்கான உத்தி.

## புன்னகை ஆயுதம்

உடனடியாக உங்களுடைய மனதை மகிழ்ச்சியுள்ளதாக்க ஒரு வழி. ஈ...யென்று இளியுங்கள். சத்தம் கூட வர வேண்டாம். இளிப்பது போலப் பாசாங்காவது பண் ணுங்கள். இதைக் கிண்டலுக்காகச் சொல்ல வில்லை. நிஜமாக ஈ...யென்று இளித்தால் பத்தே விநாடிகளில் உங்கள் மனது லேசா கும் என்று காலிபோர்னியாப் பல்கலைக் கழகத்தின் உளவியல் நிபுணர்கள் சொல்லு கிறார்கள்.

முகத்தைக் கோபப்படுகிறதைப் போலச் சுளித்தால் உள்ளத்திலும் கோப உணர்ச்சி உண்டாகும். வெறுப்படைந் ததைப் போல முகபாவம் காட்டினால் உள் ளத்தில் வெறுப்புணர்ச்சி தோன்றும். பயந் ததைப் போலக் கண்ணை விரித்தால் உள் ளத்தில் பயம் தோன்றும். சந்தோஷமாகச்

வெங்காய-பஜ்ஜி போடுவது நமக்குத் தெரிந்ததே. ரவுண்டாக வெங்காயத்தை (கண்ணீருடன்) நறுக்கி மாவில் தோய்த்து எண்ணெயில் விட்டால் தனித்தனியாகக் கழன்றுவிடும். நீளவாட்டில் நறுக்கிய வெங்காயத்துடன் கடலை மாவு சேர்த்து அதிகம் நீர் சேர்க்காமல் பிசைய வேண்டும். அத்துடன் உப்பு, மிளகாய்ப் பொடி போடுவதோடு சிறிதளவு கொத்துமல்லி விதை, சீரகம் இரண்டையும் ஒன்றிரண்டாகப் பொடி செய்து சேர்க்கவும். பஜ்ஜி மொறு மொறு வென்று வருவதோடு தனி மணத்துடன் இன்னும் கேட்கச் செய்யும்.

- கே. கல்யாணி.

சிரிப்பதைப் போலப் பாசாங்கு செய்தால் உள்ளத்தில் மகிழ்ச்சியுண்டாகும்.

இதற்கு என்ன காரணம்? பல்வேறு உணர்ச்சிகளால் நமது முகத்திலுள்ள தசைகள் இறுகவோ தளரவோ செய்யும் போது, மூளைக்குப் பாயும் ரத்தத்தின் வெப்ப நிலை கூடவோ குறையவோ செய்யும் என்று மிஷிகன் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ராபர்ட் ஸஜாங்க் (Robert Zajonc) என்ற உளவியலார் கூறுகிறார்.

முகத்தில் மகிழ்ச்சியைக் காட்டினாலே உள்ளத்தில் மகிழ்ச்சியுண்டாகுமெனில் உடல் முழுவதுமே மகிழ்ச்சியாக இருப்பதாகப் பாவனை செய்தால் இன்னும் மேலான பலன்கள் உண்டாகும். தன்னம்பிக்கையையும் தன்னம்பிக்கையையும் பிரதிபலிக்கிற வகையில் முதுகை நேராகவும், மோவாயைத் தூக்கலாகவும் வைத்துக் கொண்டு சீரான பார்வையை முன்னால் செலுத்துங்கள். யாரையும் வெறித்துப் பார்க்காதீர்கள். அது மனதில் விரோதத்தை உண்டாக்கும். இத்தகைய ஒரு உடல் காட்சி, மூர்க்கத்தனமோ, விரோதமோ இல்லாத, உயர்ந்த தன் மதிப்பை வெளிப்படுத்தும். உங்களுடைய மகிழ்ச்சியூட்டும் பாவனைகளை மற்றவர்களும் கையாளத் தொடங்குவார்கள். அவர்கள் உங்களை மதிப்புடன் நடத்துவார்கள். அதனால் உங்களுடைய சுயமதிப்பும் உயரும்.

## பூரிக்குச் சில டிப்ஸ்



பூரி மாவைச் சப்பாத்தி போல் அல்லாது கெட்டியாகப் பிசைய வேண்டும். மாவு ஊறக் கூடாது. பூரியாக இடும் போது மாவைத் தொட்டுக் கொள்ளக் கூடாது. எண்ணெய் கறுப்பாகி விடும். வேண்டுமானால் எண்ணெய் தொட்டுக் கொள்ளலாம். மேலும் பிசையும் போது சிறிது எண்ணெய் சேர்த்துப் பிசைந்தால் விளம்பரங்களில் தோன்றுவது போல் ஒரு பளபளப்புடன் இருக்கும். பூரியை எண்ணெயில் போட்டுத் திருப்பிவிட்டு மறுபடியும் முதலில் போட்ட பக்கத்தைத் திருப்பிவிட்டுச் சிறிது நேரம் வைத்து எடுத்தால் அதிக நேரம் ''உப்பி'' இருக்கும். அவ்வளவு சீக்கிரம் அமுங்கிப் போகாது.

- எல். சுகந்தி.

## புதுப்பித்தல்

சிலரால் ஏன் மகிழ்ச்சியாக இருக்க முடிவதில்லை? இயற்கை அவர்களுக்கு மகிழ்ச்சியுடன் இருப்பதற்கான சாதனங்களை அளித்தேயிருக்கிறது. மூளையில் உச்சகட்ட மகிழ்ச்சியை உண்டாக்குகிற வேதிப் பொருள்கள் உள்ளன. நமது உணர்ச்சி நரம்பு மண்டலத்தில் உச்சகட்ட மகிழ்ச்சியை உண்டாக்குகிற ஒரு மகிழ்ச்சி மையமும் இருக்கிறது. ஆனால் சிலர் அந்த மகிழ்ச்சி எல்லைகளை எட்ட முடியாமல் தமது கால்களில் தாமே விலங்கு பூட்டிக் கொள்கிறார்கள்.

புதிய பொருள்களும் புதிய அனுபவங்களும் மூளையைத் தூண்டி விட்டு மகிழ்ச்சி மையங்களைக் கிளர்வடையச் செய்கின்றன. ஆனால் பலருக்குப் புதிய அனுபவங்களைப் பெறுவதற்கு வேண்டிய துணிச்சல் இல்லை. ''இந்த வயசுக்கு மேலே தலைக்குச் சாயமடித்தால் பார்க்கிறவர்கள் சிரிப்பார்கள், இந்த வயசுக்கு மேலே சங்கீதம் கத்துக்க முடியாது, சார்!'' என்பன போன்ற சாக்குகளைச் சொல்லுகிறவர்கள் புதிய அனுபவங்களைப் பெறும் வாய்ப்பை இழந்து, தமது வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்கிற வாய்ப்பையும் இழக்கிறார்கள்.

உங்களுடைய வாழ்வில் தடையேற்படுத்துகிற பயங்களை விரட்டுங்கள், உறவுகளை அரித்துக் கொண்டிருக்கிற கோபங்களை உதறுங்கள், நிறைவேறாத ஆசைகளால் தோன்றுகிற வெறுப்புகளை ஒழியுங்கள். மகிழ்ச்சியை விரட்டிப் பிடியுங்கள். உங்கள் வாழ்வு மேம்படும். புதிதாக ஒரு பொழுதுபோக்கில் டென்னிஸ், சங்கீதம், ஓவியம், ரோட்டரி அல்லது லயன்ஸ் இயக்கம் - தீவிரமாக ஈடுபடுங்கள். புதிய இடங்களுக்குப் பயணம் செல்லுங்கள். புதிய நண்பர்களைச் சம்பாதியுங்கள். புதிய அனுபவங்களைப் பெறுங்கள். புதுமைகள் உங்கள் உள்ளத்தில் கிளர்ஷட்டி மேலும் புதிய எண்ணங்களைத் தோற்றுவிக்கும். அவை உங்களுக்கு மகிழ்ச்சியூட்டும். உங்கள் உடல் நலமும் மனநலமும் குடும்ப நலமும் மேம்படும்.

- கே.என். இராமச்சந்திரன்.

வேலை செய்யும் வேளை
சுகமான அனுபவம்!



**SPL**
**WET GRINDERS**



*The Essential Machine for Every Kitchen.*

- சப்தமில்லாமல் ஓடும்.
- இட்லி பூப்பூவாய் ஆகும்.

**SPL AGENCIES**
170/3, North Usman Road, T.Nagar,
Madras-600 017. Phone: 8251479

ADSERVE

இன்றைக்கு ஏன் இந்த ஆனந்தமோ!
ஆனந்த பவன் ஸ்வீட்ஸ்தான் காரணமோ!

நினைத்தாலே இனிக்கும்
வட இந்திய தென் இந்திய
இனிப்பு, கார வகைகள்



அடையார்
**ஆனந்த பவன்**
ஸ்வீட்ஸ்
9, லேட்டிஸ் பிரிட்ஜ் ரோடு
அடையார் (சிக்னல் அருகே)
சென்னை-20 போன்: 411265

அடையார் ஆனந்த பவன் ஸ்வீட்டு! நிஜமா ரொம்ப டேஸ்ட்டு!

ADSERVE



வீட்டில் பெண்ணாய் வெளியே
ஆணாய்...
இருவரின் கடமையும் ஒருத்தியின்
தலையில்...

# இதுவா பெண் விடுதலை ?

பெயர்: சந்தியா; படிப்பு: எம்.பி.ஏ.,
தொழில்: மார்க்கெட்டிங் மானேஜர்
பொழுது போக்கு: துணி துவைத்தல், பாத்திரம் கழுவுதல் வீடு பெருக்கி சுத்தம் செய்தல், குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளுதல், கணவன் மற்றும் மாமனார் மாமியாருக்கு பணிவிடை செய்தல், கடைக்கு சென்று மளிகை, காய்கறிகள் வாங்குதல் இத்யாதி.

அவள் ஒரு சராசரி இந்தியப் பெண். அவளுக்கும் சில கனவுகள் உண்டு. மேற்கொண்டு படித்தல், ஃபாரின் டூர் போதல், ஒரு நாவல் எழுதுதல்... இப்படியெல்லாம். ஆனால் நேரம்...? காலை எழுந்ததிலிருந்து இரவு படுக்கப் போகும் வரை வீட்டிலும் ஆஃபிஸிலுமாய் வேலை, வேலை, வேலை. அவள் கனவுகள் இல்லறம் என்ற இனிய சிறையில். அவளுக்கு வேண்டியதெல்லாம் அம்மாவும், அனுசரணையான உதவும் கணவன், வசதியாய் வீட்டு வேலைகளில் உதவும் சாதனங்கள். சூர்யா மற்றும் ஸ்விஃப்ட் மிக்ஸியைப் போல.

**Surya and Swift Mixies.**

*புதுமைப் பெண்ணுக்கேற்ற*
*அரிய படைப்புகள்*

**டீலர்கள் மற்றும்**
**பெண் விற்பனையாளர்கள்**
**(Canvassers) தேவை.**

பெண்கள் வீட்டிலிருந்தபடியே சூர்யா காஸ் ஸ்டவ், மிக்ஸி, இஸ்திரிப்பெட்டிகளை விற்கலாம். மேலும் விவரங்களுக்கு சத்யா எண்டர்பிரைசஸை தொடர்பு கொள்ளவும்.

**சூர்யா பெண்மணி**
**போட்டி**

சந்தியா போன்ற எந்த இந்தியப் பெண்ணும் இந்த போட்டியில் கலந்து கொள்ளலாம்.
மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்க :
சத்யா எண்டர்பிரைசஸ்,
செஞ்சுரி பிளாசா, 560-562, அண்ணாசாலை
தேனாம் பேட்டை, சென்னை - 600 018.
தொ.பே.: 454766, 452332

இருவரும் ஒரு பக்கெட் தண்ணீருடன் அந்த நெருப்புச் சட்டிக்கு மிக அருகில் வந்துவிட்டார்கள் —

முழு பக்கெட் தண்ணீரையும் அதற்குள் கொட்டிடணும் - ஓ.கே.?

# பூதக் கண்ணாடி

கதை / படம் } சிஜி...



எங்க ரகசியத்தைப் புரிஞ்சுக்கிட்ட உங்களைத் தீர்த்துக்கட்டிட வேண் டியதுதான்...
விடு எங்களை.. ....
விடு அவளை!
எங்களுக்கெந்த ரகசியமும் தெரியாது... விடு எங் களை..
வீட்டோரமா நெருப்பு இருந்தா ஆபத் தாச்சேன்னு அதை அணைச் சாட வந்தோம்..






அனிட்டா எட்டி அந்தச் சண்டாளனைப் பிடிக்க அவன் இழுத்துச் செல்லும் வேகத்தில் அது அப்படியே கவிழ்ந்து...

...அந்த நெருப்புக் கொப்பரை பக்கவாட்டில் உருளத் தொடங்கியது!




அவர்கள் சட்டென்று விலகிக்கொள்ள— பாய்ந்து அது அந்தக் குழிக்குள் விழுந்ததுதான் தாமதம், உடனே......

ஐயோ! இனி நாங்க செத்தோம்!

எல்லாம் போச்சு!

...அங்கே நடந்த காட்சியை ரமா, அனிட்டாவால் ஜீரணிக்கவே முடியவில்லை—

தொடரும்.

நான் ஒரு தனியார் கம்பெனியில் வேலை செய்து கொண்டிருக்கிறேன். பள்ளியில் தமிழ் மீடியத்தில் படித்த தனால் இங்கிலீஷ் கிராமர் என்றால் எனக்கு கொஞ்சம் அலர்ஜி.

ஒவ்வொரு வருடமும் பரீட்சைக்குத் தேவையான இங்கிலீஷ் சம்மரிகளைப் படித்து, மனப்பாடம் செய்து, பரீட்சை களில் எப்படியோ பாஸ் செய்து விட்டேன். ஆனால்...



படிப்பை முடித்து விட்டு, வேலைக் குச் சென்றபோதுதான் ஆங்கிலத்தின் அவசியத்தை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

எங்களது ஹெட் ஆபீஸிலிருந்து வரும் அதிகாரிகள் ஆங்கிலத்தில் கேட் கும் கேள்விகளுக்கு ஆங்கிலத்தில் பதில் பேச முடியவில்லையே என்று பல சமயங்களில் வேதனைப்பட்ட துண்டு.

மேலும் அலுவலகத் தொடர்பான கடிதங்கள் எழுத அடுத்தவர்களது உதவியை நாடும் போது, இத்தனை வருஷம் சர்விஸ் ஆகிறது இது கூடத் தெரியவில்லையே" என்று அவர்கள் ஏளனமாகப் பேசுவதைக் கேட்கும் போது, எனக்கு அழுகையே வந்துவிடும்.

என்ன செய்யலாம் என்று யோசித் துக் கொண்டிருந்தபோது அதிர்ஷ்ட வசமாக விவேகானந்தா கல்வி நிலையத் தின் விளம்பரம் கண்ணில் பட்டது.

இது என்னை நாடி வந்துள்ள நல்ல வாய்ப்பு என்ற நம்பிக்கையுடன் விவேகா னந்தா கல்வி நிலையம் நடத்தும் தபால் முறைப் பயிற்சியில் சேர்ந்தேன். என் நம்பிக்கை வீண் போகவில்லை. ஆம்...

ஆங்கில இலக்கணத்தை அனைவருக் கும் புரியும் வகையில் அறிமுகப்படுத்தி, வாக்கியங்களை அமைக்கும் முறை பற்றி எளிய முறையில் சொல்லிக் கொடுத்து, தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் சரளமாகப் பேச பல பயிற்சிகளைத் தொகுத்து வழங்கி, ஓர் ஆசிரியர் நம்மிடம் நேரில் உரையாடுவதைப் போல பயிற்சி முறை மிகவும் எளிய முறையில் அமைக்கபபட்டுள்ளது.

ஆர்வமுடன் இப்பயிற்சியை மேற் கொண்டதன் பலனாய் இப்பொழுது

# நாடி வந்த நல் வாய்ப்பு!..

என்னால் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடிகிறது. இலக்கணப் பிழை ஏற் பட்டு விடுமோ என்ற பயமின்றி கடி தங்கள் எழுத முடிகிறது.

மிகக் குறுகிய காலத்தில் என்னை ஆங்கில மொழியில் புலமை பெறச் செய்த விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு நான் என்றென்றும் கடமைப் பட்டுள்ளேன்.

Mrs. S. விசாலாட்சி

---

நீங்களும் வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் ஆங்கிலப் பயிற்சி பெறலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு.
விவரங்களுக்கு கீழ்க்கண்ட முகவரியில் உடனே தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**தபால் பெட்டி எண்: 4986**
**9, நடேசன் தெரு, தி. நகர்,**
**சென்னை-600 017.**

NAGA

எல்லாவற்றிலும் 'ரெடிமேட்' ஆகி விட்ட இன்றைய நவயுகத்தில் வித விதமான கலர்ப் பொம்மைகள் நிரந்தர கொலுவான 'ஷோகேசி'ல் இடம் பெற்றிருந்தாலும் நவராத்திரி ஆரம்பிக்கும் ஒவ்வொரு வருடமும் இவ் வருட ஸ்பெஷல் பொம்மை என்ன? என்று ஆவலுடன் எதிர்பார்க்கத் தூண்டுவது காதி கிராமோத்யோக் பவன்தான்.

கடந்த 24 வருடங்களாக பல புதிய முறைகளைக் கையாண்டு இக் கைவினைத் தொழிலின் பெரும் முன்னேற்றத்திற்குக் காரணமான திரு. சி. டி. வி. இராகவுலு, குமாரி புஷ்பா போன்றவர்களைச் சந்தித்த போது -

கேள்வி : இந்தக் காலத்தில் புதுமையான பலவித பொம்மைகள் வந்தாலும் அந்தக் கால தண்டராயன் பொம்மைக்கு ஈடாகுமா? என்று பல வீடுகளில் பெரியவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதில் என்ன சிறப்பு?

பதில் : பொம்மைகள் பார்வைக்கு மிகச் சிறிய அளவில் இருந்தாலும் கை, கால் என்று தனித்தனியாக உள்ளே கம்பி கொடுத்துத் தாண்டராயன் பொம்மையைச் செய்திருப்பார்கள். வடிவம் தத்ரூபமாக அமைவதால் பார்ப்பதற்கு அழகாக இருக்கும். இப்பொழுது செய்கின்ற காகிதக் கூழ் பொம்மைகளில் இதைப் போன்று வடிவமைப்பினைப் பெறலாம். மிகப் பெரிய பொம்மையானாலும் எடை மிகவும்

# அமெரிக்காவுக்குப் போகும் கொலு!





கிழங்குகளை ரோஸ்ட் செய்யும் போது மொத்த எண்ணெயையும் உடனே ஊற்றாமல், கொஞ்சம் கொஞ்சமாக ஊற்றிச் செய்தால் எல்லா பக்கமும் பொன்னிறமாக வறுபடும்.

- உமா.

குறைவு. எடுத்துச் செல்வதும் சுலபம்.

**கேள்வி :** தண்டராயன் பொம்மைகளுக்கு அடுத்து எத்தகைய பொம்மைகள் தத்ரூபமாக வடிவமைப்பதற்குச் சுலபம்? மேலும் மக்கள் எத்தகைய பொம்மைகளை விரும்பி வாங்குகிறார்கள்?

**பதில் :** உலோக வகைகள் தெய்வத் திருவுருவங்கள் செய்வதற்கு அதிகமாக பயன்படுத்தப்படுகின்றன. தீர்க்கமான நாசி, அழகிய வாய், என்று சிறப்பாக முகபாவம் அமையும். நம் நாட்டினரைப் போலவே, வெளிநாட்டவர்களுக்கும் உலோக தெய்வ வடிவங்களில் நாட்டம் அதிகம். மேலும் பிறந்த குழந்தையின் சுண்டு விரலில் பாதி உயரமே உள்ள இந்தப் பறவைகளைப் பார்த்தீர்களா? பறவையின் மூக்கும் பாதமும் இச்சிறு வடிவில் மிக அழகாக அமைந்திருக்கின்றன. மெலிதான களிமண்ணால் ஆன இவைகள் அச்சில் வார்த்தாலும் ஆலையில் வைக்கப்படாமல் வெயிலில் உலர வைத்து வண்ணம் பூசப்பட்டவை. இதன் வண்ணமும் வடிவமும் கண்களை விட்டு அகலாதவை. ஆனால் ஒன்று இங்கே சொல்ல வேண்டும். என்னதான் புதுரக பொம்மைகள் வாங்கிக் கொலுவினைச் சிறப்புறச் செய்தாலும் களிமண்ணாலான தெய்வ பொம்மைகளை முதலில் வாங்கும் வழக்கத்தை தமிழ் நாட்டு மக்கள் விடவில்லை. காகிதக் கூழ் பொம்மைகளும், கொண்டப்பள்ளி, சென்னப்பட்டினாவிலிருந்து வரவழைக்கப்படுகின்ற மரத்தூள் பொம்மைகளும் நவராத்திரி சமயத்தில் மக்களால் விரும்பி வாங்கப்படுகின்றன.

**கேள்வி :** ''தமிழ்நாட்டுக் கைவினைஞர்கள் செய்யும் பொம்மைகள் மட்டும் தான் இங்கு விழாவில் இடம் பெறுகின்றனவா?''

**பதில் :** ''24 வருடங்களுக்கு முன்பு 25,000 ரூபாய்க்குப் பொம்மைகளைத் தருவித்த நாங்கள் இன்று சுமார் 5,00,000 ரூபாய்க்குப் பொம்மைகளை பல மாநில கைவினைஞர்களிடமிருந்தும் பெறுகின்றோம். கடலூர், பண்ருட்டி, பாண்டிச்சேரி, வேலூர் போன்ற இடங்களிலிருந்து மட்டுமல்லாமல், சுண்ணாம்புகளாலான பொம்மைகள், கோலாலம்பூர், மரத்தூள்களாலான பொம்மைகள் கொண்டப்பள்ளி, சந்தனம் ரோஸ்வுட் பொம்மைகள் மைசூரில், கங்கைக்கரை கரு மணலைக் கொண்டு செய்யப்பட்ட பொம்மைகளை வங்காளம், கிருஷ்ணாகர் சிகப்பு சாண்டல் வகைப் பொம்மைகள் காளஹஸ்தி, திருப்பதி என்று அந்தந்த மண்ணின் தரத்திற்கேற்ப, அங்குள்ள மக்களின் வாழ்க்கைச் சூழ்நிலையினை ஒட்டி வடிவமைக்கப்பட்ட பொம்மைகளை நாட்டின் பல பாகங்களிலிருந்தும் வரவழைக்கின்றோம்.''

**கேள்வி :** ''இவ் வகை கைவினைஞர்களின் வருவாய் பெருக்கத்திற்குத் தாங்கள் ஏதேனும் புதிய முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறீர்களா?''

**பதில் :** ''நம்மூர் பொம்மைகளுக்கு இந்திய மண்ணில் மட்டுமல்ல, அமெரிக்கா, ரஷ்யா போன்ற நாடுகளிலும் மவுசு அதிகரித்திருக்கிறது. நவராத்திரி பொம்மைக் கொலுவினைக் காதிகிராமோத்யோக் மற்றும் பிற நிறுவனங்கள் வருடா வருடம் புதுப் புது முறையில் கொண்டாடுவதால் இம் முயற்சிகள் வெளிநாட்டினரைப் பெரிதும் கவர்ந்திருக்கின்றன. அமெரிக்க தொலைக்காட்சியில் இங்கு நடைபெற்ற பொம்மைக் கொலுவினை படமெடுத்து இடம்பெறச் செய்தது அதற்கு அத்தாட்சியாகும். எங்களால் ஆதரிக்கப்பட்ட கைவினைஞர்கள் இன்று ரஷ்யாவிற்கும் பிற நாட்டிற்கும் நேரடியாகத் தொடர்பு கொண்டு பொம்மைகளை ஏற்றுமதி செய்கிறார்கள். இராமாயண இதிகாச பொம்மைகளை வாங்குவதில் சிங்கப்பூர் மலேஷிய மக்களுக்கு விருப்பம் அதிகம். மார்க்கெட்டில் எது அதிகமாக விற்பனையாகும், மக்களின் ரசனை தற்போதைய நிலைமை என எல்லாவற்றையும் மனதில் கொண்டு நாங்களும் பெருமளவில் ஆர்டர்களைக் கைவினைஞர்களுக்குத் தருவோம்.''

பொம்மைகளை வாங்குகிறார்களோ இல்லையோ, இவர்கள் விற்பனைக்காக வைக்கும் கொலுவைப் பார்க்கவே தினமும் பெரும் கூட்டம் வரும் என்கிறார் புஷ்பா.

- **கீதாஜி.**

அட்டை வண்ணப்படம் :
ஓம் சுப்ரமணியம்

அட்டையில் :
குமாரி ஹேமா பட்டாபிராமன்.

**கேட்டவரம் தரும் திருத்தலங்கள்**

ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ். சக்தி வாய்ந்த பதினாறு திருத்திலங்களின் மகிமைகள், சொல்லவேண்டிய ஸ்தோத்திரங்கள் மற்றும் படங்களுடன்.

விலை ரூ. 18.00

(அம்மன் பதிப்பகம், 212, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 004)

**பத்ம புராணம்**

மஹா விஷ்ணுவின் பல்வேறு அவதார மகிமைகளைக் கூறும் பத்மபுராணத்தைத் தமிழில் வழங்கியிருப்பவர் எஸ். பி. ராமச்சந்திரன்.

விலை ரூ. 50.00

(தாமரை நூலகம், 7 என். ஜி. ஓ. காலனி, வடபழனி, சென்னை - 26)

# புக் ஷெல்ஃப்

**ஆயிரம் நீதிக் கதைகள் - பாகம் 3**

ஆசிரியர் நாடோடி தனது வாழ்க்கையில் நடந்ததில் இருந்து அர்ஜுனன், காந்திஜி, டாக்டர் சி. பி. எனப் பல்வேறு நிலைகளில் அனுபவங்களைத் தொகுத்து நீதிக்கதைகளாக வெளியிட்டிருக்கிறார்.

விலை ரூ. 30.00

(சாந்தி பதிப்பகம், 44, அண்ணாசாலை, சென்னை - 2.)

**ஸகல கார்ய ஸித்தி ஸ்ரீஸௌந்தர்ய லஹரி**

ஸௌந்தர்ய லஹரி ஸ்லோகங்களில் எந்தெந்த ஸ்லோகத்தை எந்த முறையில் பாராயணம் செய்தால் என்ன பலன் கிடைக்கும் எனச் சொல்கிறார் ஸோமதேவ சர்மா.

விலை ரூ. 10.00

(பவானி புக் சென்டர், 19, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33)

**நடுத்தர பட்ஜெட் வீடுகளுக்கான நல்ல பிளான்கள்**

விலை ரூ. 25.00

**ரேடியோ, டிரான்சிஸ்டர் அசெம்பிளிங் - மெக்கானிசம்**

விலை ரூ. 20.00

**இசைத் துணைவன்**

இசையைப் பற்றி ஸ்வரம், ஸ்வரஸ்தானம், ஆரோஹணம், அவரோஹணம் இவற்றைப் பற்றியெல்லாம் கூறுகிறது.

விலை ரூ. 18.00

**சந்தேகம் என்னும் நோயை விரட்டுவது எப்படி?**

விலை ரூ. 24.00




**பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் பாட்டுத் திறன்**

அமரத்துவம் பெற்ற பட்டுக்கோட்டையின் பாடல்களை விளக்கத்தோடு தொகுத்திருக்கிறார்கள்.

விலை ரூ. 16.00

(ஐந்தும் தொகுப்பு - மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு. பதிப்பு - மணிமேகலைப் பிரசுரம், த. பெ. எண் 1447, 4, தணிகாசலம் சாலை, தி.நகர்., சென்னை - 17)

**நல்ல நாள் பார்க்க சுலப வழிகள்**

நல்ல நேரம், சுந்தாய பலன், விருந்துண்ண, என்ன குழந்தை என அறிய இப்படிப் பல விஷயங்களைத் தொகுத்

திருப்பவர் ஜோதிடமணி துரைராஜ்.
விலை ரூ. 10.00

**புகழ்பெற்ற பொன்மொழிகள்**

திருமூலரிலிருந்து ரஸ்ஸல் வரை தொகுத்திருப்பவர் தமயந்தி.
விலை ரூ. 18.00

**பொது அறிவுக் களஞ்சியம்**

தொகுப்பு - மணிபாரதி
விலை ரூ. 16.00

(மூன்றும் - குமரன்/சுவாமிமலை பதிப்பகம், 2, முத்துக்கிருஷ்ணன் தெரு, தி. நகர், சென்னை - 17)

**வடிவுடை மாணிக்கமாலை**

வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் அருளியது.

(காந்தி பப்ளிகேஷன்ஸ், 44, அண்ணா சாலை, சென்னை - 2)

**உலக நாடுகளின் குளியல் முறைகள்**

மருத்துவரீதியாகச் செய்கின்ற குளியல் முதல் சாதாரண குளியல் வரை விளக்குபவர்கள் எம். எஸ். நாடார், மானோஸ்.
விலை ரூ. 12.00

(பூங்கொடி பதிப்பகம், 14, சித்திரைக் குளம், மேற்கு வீதி, மயிலாப்பூர், சென்னை-4)

**வெற்றியின் ரகசியம்**

ஆங்கிலத்தில் சார்லஸ் நியூட்டன் வாழ்வில் வெற்றியடைவதற்காகக் கூறிய யோசனைகளைத் தமிழில் தருபவர் எஸ். சங்கரன்.
விலை ரூ. 18.00

(கண்ணதாசன் பதிப்பகம், 12, கண்ணதாசன் சாலை, தி. நகர், சென்னை - 600 017)

**சிலேடைப் பூக்கள்**

கவிதைகள். ஆசிரியர் ரவிவர்மா
விலை ரூ. 12.00

**காந்திஜி உபதேசக் கதைகள்**

ஆசிரியர் பி. சி. கணேசன்

(இரண்டும் - கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை -600 017)

**மாறும் முகங்கள்**

வையவனின் குறு நாவல்களின் தொகுப்பு.
விலை ரூ/ 18.00

(தாரிணி பதிப்பகம்,. 323, நடேச நகர் முதல் பிரதான சாலை, விருகம்பாக்கம், சென்னை - 92)

**லேசர்**

லேசர் தோன்றியது முதல் இன்று பல்வேறு துறைகளில் லேசர் பயன்படுத்தப் படும் வரையிலான விஞ்ஞான முன்னேற்றத்தைக் கூறுகிறார் எம். எஸ். பி. முருகேசன்.
விலை ரூ. 30.00

(ஓசோன் 323, நடேச நகர் பிரதான சாலை, விருகம்பாக்கம், சென்னை - 92)

**பத்மினி நீயா?**

லீலா கோபாலனின் சிறுகதைத் தொகுப்பு
விலை ரூ. 14.00

(சூரியன் பதிப்பகம், 10, ஜெகதீஸ்வரன் வீதி, தி. நகர், சென்னை - 17)

**கடவுளை வணங்குபவன் காட்டுமிராண்டியா?**

கடவுள் இல்லை என்று சொல்பவர்களுக்குப் பதில் சொல்பவர் 'டயேஜே'
விலை ரூ. 8.00

(அறிவுப் பதிப்பகம், 38, ஆரியநாட்டுத் தெரு, பரங்கிப்பேட்டை, தென் ஆற்காடு - 608 502).

**விந்தைக்குரிய விடுகவிகள் 1000**

தொகுப்பு அரு. இயற்கவி
விலை ரூ. 26.00

(அறிவாலயம் த.பெ. 667, 107/7 கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14)

**உயிர் பூ**

இரு குறு நாடகங்கள், ஆசிரியர் வினோலியா
விலை ரூ. 5.00

(வான்மலர் இல்லம், கிறிஸ்டியன் மீடியா சென்டர், 116, நான்காம் தெரு, அபிராமபுரம், சென்னை - 18.)





*Would you run the risk of spoiling your precious things?*

# Not when you have the gentle and safe option

# Teepol

C A R E







**NATIONAL ORGANIC CHEMICAL INDUSTRIES LIMITED**

Registered Office: Mafatlal Centre, Nariman Point, Bombay-400 021.

Imageads/NOCIL/91332

# கொலுவுக்கு அழைக்கப் போறோம்!

நவராத்திரி கொலு வந்தாலே குழந்தைகளுக்குக் கொண்டாட்டம்தான். வருடம் முழுவதும் யூனிபாரம் என்ற பெயரில் ஒரே வண்ண உடையை அணிந்து அலுத்துப் போன குழந்தைகளுக்கும், பள்ளி மேடையில் ஏறி தங்கள் நடிப்பு, நடனத் திறமையைக் காட்ட வாய்ப்பில்லாத குழந்தைகளுக்கும் கொலு சமயம் நல்ல வாய்ப்பு கிடைக்கிறது. ஆம், வித விதமான உடைகளை அணிந்து, அலங்காரம் செய்து கொண்டு அழைக்கப் போகும் இடங்களில் பலர் பாராட்டை அள்ளிக் கொண்டு வரும் குழந்தைகள் முகங்களில் தான் எத்தனை மகிழ்ச்சி! எத்தனை பெருமிதம்!

நம் வீட்டிலுள்ள பொருட்களைக் கொண்டே விதவிதமாகக் குழந்தைகளை அலங்கரிக்கலாமே!



## 1) குஜராத்தி மங்கை

கொஞ்சம் குண்டான, சிவப்பான பெண் குழந்தைகளுக்குப் பொருத்தமான 'அலங்காரம் இது. தலையை 'பாப்' செய்திருந்தால் அப்படியே விட்டுவிட லாம். அல்லது லூசாக ஒற்றைப் பின்னல் பின்னி பட்டுநூல் கலர் குஞ்சலம் வைக்க லாம். முகத்தில் பளிச்சென்று பவுடர் பூசி, கன்னங்களில் ரூஜ், உதட்டில் லிப்ஸ்டிக் கண்களுக்கு மை என்று அலங்கரித்த பின் வண்ண ஸ்டிக்கர் பொட்டு ஒன்றை நெற்றி யில் ஒட்ட வேண்டும். புருவங்களின் மேல் வெள்ளைப் புள்ளி (முகப்பவுடரை நீரில் குழைத்தது) சிவப்புப்புள்ளி (ஆஷா அல்லது டியூப் சாந்து) என்று மாறி மாறி வைக்க வேண்டும். முடிவில் நான்கு புள்ளிகளை சிறு கோலம் போல வைக்க வேண்டும். தலையில் மெல்லிய நெத்திச் சுட்டி, மூக்கில் வளையம் கோர்த்த மெல்லிய சங்கிலி காதில் பெரிய அகலமான தொங்கட்டான் போட வேண்டும். கழுத்திலும் கையிலும் வீட்டிலுள்ள (தங்கம் வேண்டாம்) அணிகலன்களை நிறைய அணியலாம்.

புடைவை ரவிக்கை contrast ஆக இருக்கலாம்.பனாரஸ் பட்டு, ஜரிகை உள்ள காஞ்சி காட்டன், வெளிர் நிற பட்டுப் புடைவை இவற்றில் எதாவது ஒன்றை சாதாரண புடைவைபோல் அணி விக்க வேண்டும். முடிவில் தலைப்பைப் பின் பக்கமாகக் கொண்டு வந்து வலது கைக்கு அடியில் எடுத்து வருவதற்குப் பதில் வலது பக்கத் தோள் வழியாக முன்புறம் மேலிருந்து கீழாகக் கொண்டு வர வேண்டும். பின்பக்கம் இழுத்து எடுக்கா மல் தளர்வாக (முதுகு, வயிற்றின் பக்க வாட்டுப் பகுதி தெரியுமாறு) எடுத்து வர வேண்டும். முந்தானையை நன்கு ஜரிகை தெரியுமாறு விரித்து இடுப்பில் ஒரு ஒட்டியாணம்



## 3) ராதை.

தூக்கிப் போன பட்டுப்பாவாடையைப் பல குழந்தைகள் போட்டுக் கொள்ள மறுப்பார்கள். அவர்களுக்கு ராதை டிரஸ் கை கொடுக்கும். பாவாடை சட்டை போட்டபின் கடிதாரின் துப்பட்டா (மெல்லியது அல்லது ஜரிகை வேலைப்பாடு செய்தது) ஒன்றின் நடு நுனியை எடுக்க வேண்டும். பின் இரு ஓரங்களையும் கொசுவி பின்பக்கத்திலிருந்து கைகளின் அடிவழியாகக் கொண்டு வந்து சட்டையின்



(பின்னல் போட்டது போன் றது கடைகளில் கிடைக்கும்) கட்டிவிட் டால் மேக்கப் ரெடி.

## 2) ஆண்டாள்.

பாப் வெட்டிக் கொண்ட குழந்தைகளுக்குப் பக்கவாட்டில் கொண்டை போட்ட இந்த வேஷம் ஏற்றது. நேர்வகிடு எடுத்து ஒரு பக்க முடியைக் காதுப் பக்கம் ஒதுக்கி ஹேர்பின் குத்தி விட வேண்டும். மறுபகுதி முடியை ரப்பர் பேண்டால் குடுமி போல் போட்டுக் கொண்டு அதோடு சவுரி ஒன்றைக் கயிற்றால் கட்ட வேண்டும் (இறுக்கமாக இருப்பது அவசியம்) பின் சிறிய 'பன்' ஒன்றைப் பக்க வாட்டில் வைத்துச் சவுரியால் அதை மூடி ஹேர்பின் குத்த வேண்டும். மீதி சவுரி முடியை இரண்டாகப் பிரித்து பன்னைச் சுற்றிக் கொண்டு வந்து பின் பண்ணி விட வேண்டும். பூவைச் சுற்றிவிட்டு ஒரு தங்க நிறச் சங்கிலியை (மணி மாலை (அ) முத்து மாலை) கொண்டையின் நடுவிலிருந்து தொங்க விட வேண்டும். முகத்திற்குப் பவுடர், ரூஜ், லிப்ஸ்டிக் என்று மேக்கப் செய்து, கண்களுக்கு மைதீட்ட வேண்டும். நெற்றியில் சிவப்புச் சாந்தால் நீளமான நாமம் தீட்டி கீழே அர்த்த சந்திர வடிவில் வெள்ளைக் கீற்று இட வேண்டும். பட்டுப் புடைவையைக் கட்டி இடுப்பில் ஒட்டியாணம், கழுத்தில் பிளாஸ்டிக் ஆண்டாள் மாலை அணிவித்தால் டிரஸ் முடிந்து விடும். சட்டை சரியாக இல்லாவிட்டால் பெரியவர்கள் பிளவுஸைக் கைகளையும், இடுப்பையும் தேவையான அளவு பிடித்துத் தைத்துப் பயன் படுத்தலாம்.

முன்பக்கம் உள்ளே செருகி பின் பண்ண வேண்டும். (நுனி வெளியே தெரியுமாறு வேண்டுமானாலும் பின் பண்ணலாம்) தலையை இரட்டைப்பின்னலாக சவுரி வைத்து நீளமாகப்பின்னி ஒரே வண்ணத்திலுள்ள பட்டுக் குஞ்சங்களை வைத்துப் பின்னிவிட வேண்டும். பின் நெற்றிச்சுட்டி, தலையலங்காரம், மாட்டல் இவற்றைத் தலையில் மாட்டிவிட வேண்டும். தலையின் ஒரு பக்கத்தில் ஒரு வாழ்த்து அட்டையைக் கூம்பு வடிவில் செய்து அதை ஹேர் பின்களால் தலையில் குத்திவிட வேண்டும். அதன் மீது துப்பட்டாவின் நடு நுனியை எடுத்து மறைத்துப் பின் பண்ண வேண்டும். குஜராத்திப் பெண்ணைப் போலவே முகத்திற்கு மேக்கப் செய்ய வேண்டும். இடுப்பில் ஒட்டியாணம், கால்களில் கொலுசு, அல்டா (அல்லது மருதாணி) இவை மேலும் அழகு சேர்க்கும்.

## 4) கிருஷ்ணன்.

''அம்மா எனக்கு டிரஸ் கிடையாதா?'' என்று கிராப்புத் தலையும், டிராயருமாக வந்து நிற்கும் ஆண் குழந்தைகளை ஆபத்பாந்தவராக ரக்ஷிக்க இறைவன் எடுத்த (அம்மா மார்களும் தேர்ந்தெடுத்த) அவதாரம் கிருஷ்ணன். இடுப்பில் டிராயரை (லைட் கலர்) போட்டு, பெல்டால் இணைத்துவிட வேண்டும். பிறகு பட்டு வேஷ்டியை பஞ்ச கச்சமாகக் கட்டலாம். இது பெரியவர்கள் கட்டுவது போல இருக்காது. ஆயினும் பார்ப்பதற்கு பஞ்ச கச்சம் கட்டியது போல இருக்கும். (சின்னக் குழந்தையானால் பட்டு அங்கவஸ்திரம் கூடப் போதும்).




வேஷ்டியை இடுப்பைச் சுற்றிக் கொண்டு வரவேண்டும். இடது கைப் பக்கம் ஒருபங்கும், வலது கைப்பக்கம் இருபங்கும் நீளம் இருக்கும்படி பிடிக்க வேண்டும். முதலில் இடதுபக்க நுனியிலிருந்து சிறு சிறு கொசுவம் வைத்து இடுப்பில் செருகி, கீழ் நுனியை மட்டும் மடித்துக் கொண்டு வந்து மேலே அதே இடத்தில் செருக வேண்டும். (இப்போது ஒருகால் பக்கம் கச்சம் இருப்பது போல் இருக்கும்.) மறுபக்கத்தையும் இதே போல் கொசுவிச் செருகிவிட்டு, கீழ் நுனியை கால்கள் வழியாக பின் பக்கம் எடுத்து வந்து நுனியை மட்டும் பின்பக்கம் செருக வேண்டும். (சரிகை பின்பக்கம் மேலிருந்து கீழாகத் தெரியும்) பின் இடுப்பில் ஒட்டியாணம் அல்லது கலர் துணியை இறுக்கமாகக் (அப்போதுதான் வழியில் கிருஷ்ணர் டிராயருடன் நடப்பதைத் தவிர்க்கலாம்) கட்ட வேண்டும்.

மார்பின் குறுக்காக துப்பட்டாவைப் போட்டு வலது பக்கம் கீழே முடிச்சுப் போடலாம். பிளாஸ்டிக் பூ மாலையும் முத்துமாலையும் அணிவிக்க வேண்டும். கயிற்று வளையத்தில் காதிற்கு ஜிமிக்கி போன்ற தோட்டைக் கட்டி காது மடலில் சுற்றிக் கட்டிவிட வேண்டும். கிராப்புத் தலையை மறைக்க அட்டை கிரீடம் உதவும். வெள்ளையில் 'U' வடிவ நாமமும் நடுவில் சிவப்புக் கோடும் இழுக்க வேண்டும். லேசாக லிப்ஸ்டிக் போட வேண்டும். பழைய காலண்டரைச் சுற்றி மேலே ஒரு ஸில்வர் பேப்பரைச் சுற்றி ஒரு நுனியில் சில சாக்லேட் பேப்பர் பூக்களைக் கட்டி (குஞ்சம் போல) தொங்க விட்டால் புல்லாங்குழல் தயார்.

## 5) ஜப்பானியப் பெண்.

கொஞ்சம் வித்யாசமாக டிரஸ் செய்ய விரும்புகிறவர்கள் இதைத் தேர்ந்தெடுக்கலாம். தலை முடி நீளமாகவும் அடர்த்தியாகவும் உள்ள குழந்தைகளுக்கு ஏற்றது. சிறிய கண்களும், சப்பை மூக்கும் ஜப்பான் வேஷத்திற்கு விசேஷ லட்சணங்கள்.

தலைமுடியை முதலில் நெற்றிக்கு மேலே கட்டை விரல் பருமனுக்கு எடுத்து வாரி நுனியிலிருந்து உட்பக்கமாகச் சுற்றி ஹேர் பின்னில் குத்திவிட வேண்டும். (இந்த டிரஸ்ஸிற்குக் குறைந்தது 2 டஜன் ஹேர்பின்கள், 10 கொண்டை ஊசிகள், 2 டஜன் ஸேப்டி பின்கள் தேவை). இதே

போல் முன்பக்கம் காதுகளின் பக்கமுள்ள முடியையும் சுருட்டி ஹேர்பின்னால் குத்த வேண்டும். இப்போது பின்பக்கமுள்ள முடியை மூன்றாகப் பிரித்து நடுமுடியை வாரி உச்சந்தலை வரை கொண்டு வர வேண்டும். அங்கே ஒரு 'பன்'னைக் கொண்டை ஊசியால் குத்திவிட்டு அதன் மீது முடியைப் பரப்பி, சுற்றிக் கொண்டு வந்து பின் பண்ண வேண்டும். பின் மீதி இரு பகுதியையும் காதின் பின்பக்கம் முதலில் செய்ததுபோல் சுருட்டி பின் பண்ண வேண்டும். பின் பளிச்சென்ற வண்ணத்தில் பெரிய ஹேர் கிளிப்பை பக்க வாட்டில் பன்னுக்கு முன்புறம் குத்தி, கொத்தாக உள்ள (சிறு பூக்கள்) பூக்களைச் செருக வேண்டும். காதில் பிளாஸ்டிக் தோடும், கழுத்திற்கு முத்து மாலையும் போதும்.

இனி உடை. பெரிய பூக்கள் போட்ட சிவப்பு, ஆழ்ந்த நீலம், கருப்பு நிறப் புடைவைகள் ஏற்றது. அதே வண்ணச் சட்டையை அணிவிக்க வேண்டும். கீழே பைஜாமா போட்டுக் கொள்ள வேண்டும். புடைவையின் இரண்டு நுனிகளையும் சீராக பட்டையாக வரும்படி கொசுவ வேண்டும். ஒவ்வொரு நுனியையும் ஒவ்வொரு தோள்பட்டையிலிருந்து ஸ்லீவ் (sleeve) அளவிற்கு வரும்படி தொங்கவிட்டு இரு தோள்களிலும் பின் செய்ய வேண்டும். கைகள் மீது தொங்கும் நுனிகளை ஸ்லீவ் போல் வரும்படி வைத்து அடியில் வரிசையாக பின் பண்ண வேண்டும். இப்போது புடைவையின் மீதிப் பகுதி மாலை மாதிரி நீளமாகத் தொங்கும். இதன் வலது பக்கத் தோளிலிருந்து துவங்கும் விளிம்பை இடதுபக்க விலாப் பக்கமாக (cross) இடுப்பில் செருக வேண்டும். இதே போல் இடப்பக்க மும் செய்ய வேண்டும். இப்போது, முன் பக்கச் சட்டை முழுவதும் மறைந்து கழுத் துக்கு முன்புறம் 'வி' வடிவில் புடைவை இருக்கும். மீதி புடைவையைப் பட்டையாக மடித்து இரண்டு பக்கமுமாக முதுகுப்புறம் கொண்டு போய் தனித்தனியாகக் கொசுவி பின்பக்கம் செருக வேண்டும். இரண்டும் சேரும் பகுதியை இடுப்பிலிருந்து கால்வரை பின்களால் இணைக்க வேண்டும். இடுப்பில் பளிச்சென்ற வெளிர் நிற துப்பட்டா அல்லது ரவிக்கைத் துண்டை நடுவில் மட்டும் சற்று அகலமாக வந்து ஓரங்கள் குறுகுவது போல் மடித்து இடுப்பில் வைத்து, பின்பக்கம் பின் செய்ய வேண்டும். கால்களில் வெள்ளை ஸாக்ஸ், கட்ஷு, கையில் ஒரு ஜப்பான் விசிறி



இவை இருந்தால் போதும். ஜப்பான் பெண் அழகாகத் தயாராகிவிடுவாள்.

## 6) மலையாள மங்கை.

பாப் தலையுள்ள குழந்தைகளுக்கு மலையாளி டிரஸ் போடலாம். வகிடு எடுக்காமல் எல்லா முடியையும் வலது பக்கம் வரும்படி மொத்தமாக வாரி ஆண்டாள் கொண்டை மாதிரி போட்டு பூ சுற்ற வேண்டும். ஆழ்ந்த நிற பிளவுஸும் (கையில் ஜரிகை வைத்திருந்தால் நல்லது) கொஞ்சம் நீளமான ஷிம்மியும் அணிய வேண்டும். ஒரு வேஷ்டியைச் சாதாரணமாக வேட்டி கட்டுவதுபோல் இடுப்பில் கட்ட வேண்டும். மற்றொரு அங்க வஸ்திரத்தை ஒரு நுனியை மார்புப்பகுதியில் பிளவுஸின் கழுத்துக்குள் செருகி பின் பண்ணிவிட்டு மற்றொரு நுனியை சுற்றிக் கொண்டு வந்து பட்டையாக (புடைவைக்குக் கொசுவுவது போல்) கொசுவி அதே பிளவுஸ் பகுதியில் உள்ளே செருகி பின் பண்ணி விடவேண்டும். நேராகக் கீழே தொங்கும் பகுதியில் அகல வாட்டில் ஜரிகை நன்கு தெரியும்படி செய்ய வேண்டும். பவுடர், ரூஜ், லிப்ஸ்டிக், மை இவைகளுக்குப் பிறகு பளிச்சென்ற பெரிய மெரூன் கலர்ப் பொட்டும், சந்தனக் கீற்றும் அவசியம். காதில் பெரிய குடை ஜிமிக்கி, கழுத்தில் தங்க நிற மணி மாலைகள், கைகளில் கண்ணாடி, தங்க நிற வளையல்கள் இவை அணிந்தால் ''எந்தா, சுகம்தன்னே?'' என்று கேட்கத் தோன்றும்.

## 7) மடிசார் மாமி.

எவ்வளவு வித விதமான டிரஸ்கள் போட்டாலும் மடிசார் மாமிபோல் குழந்தைகளுக்கு டிரஸ் செய்வதே அழகுதான். ஒற்றைப்பின்னலை நீளமாகப்பின்னி குண்டு குஞ்சலம் வைத்து, அகலமான தோடு, பிரஸ் செய்யும் மூக்குத்தி, ஒரு நீள சங்கிலி, உள்கழுத்துக்கு நெக்லஸ் (காசிமாலை போடலாம்) ஒரு ஒட்டியாணம், தங்க நிற வளையல்கள், எளிய முக அலங்காரம், பனிச்சென்ற பெரிய மெரூன் பொட்டு, காலில் கொலுசு இவைதான் மாமியின் அலங்காரங்கள்.

இடுப்பில் டைட்டாக ஒரு ரிப்பனைக் கட்டிக் கொள்ள வேண்டும். இரண்டுபக்க சரிகை உள்ள ஆறுகஜம் புடைவையும், அதற்கு மேட்சாக பிளவுசும் தேவை. (கையில் சரிகை வைத்திருந்தால் நல்லது)

புடைவையின் உள் தலைப்பை நாலு விரற்கிடை அகலத்திற்கு நாலு கொசுவம் வைத்து இடது காலின் பின்பக்கம் கொசுவம் வருமாறு புடைவையைப் பிடிக்க வேண்டும். மீதிப் புடைவையை முன்பக்கமாகச் சுற்றி வலது கைவழியாகப் பின்பக்கம் எடுத்துச் சென்று கொசுவம் வைத்த பகுதியோடு இடுப்பில் இறுக்கமாக ஒரு முடிச்சுப் போட வேண்டும். மீண்டும் புடைவையை இடதுகை வழியாக முன்புறம் கொண்டு தூக்கி இடுப்பில் செருக வேண்டும். சுமார் அரையடி நீளம் விட்டு மீண்டும் மேல்பக்க பார்டரை வயிற்றுக்கு நேராகச் செருக வேண்டும். பிறகு மொத்தப் புடைவையையும் கச்சம் போலப் பின்பக்கம் கொண்டு செல்ல வேண்டும். முழங்கால் உயரத்திற்குக் கச்சத்தைப் பிடித்து ஒன்றரை மீட்டர் ரிப்பனின் நடுப்பகுதியில் (இரண்டு ரிப்பன்களை இணைத்துக் கொள்ளலாம்) கச்சத்தின் பகுதியைக் கட்டி, ரிப்பனின் இரு நுனிகளையும் பின்பக்கத்திலிருந்து இடுப்பு வழியாகக் கொண்டு வந்து முன்பக்கம் முடிச்சுப் போட வேண்டும்.

பிறகு கச்சம் போட்ட புடைவையின் ஒரு கரையை இடுப்பில் செருகி விட்டு, மீதிப் புடைவையை இடது புறமாகக் கொண்டு வந்து ஒரு சுற்று சுற்றி, வலது தோள்வழியாக மேலாக்கு போட்டு, இடுப்பில் இரண்டாக மடித்துச் செருக வேண்டும். கால்களின் இருபக்கக் கொசுவமும், ஒன்றுக்கொன்று இணையாக இருக்கும்படி இழுத்துச் சரி செய்ய வேண்டும். இதற்குக் கச்சம் போடும் முன் வலது பக்கப் புடைவைக் கரையை அந்தக் காலின் அடியில் (குதிகால்) பிடித்துக் கொள்ளலாம். (பெரியவர்கள் கூட விசேஷ சமயத்தில் ஆறுகஜம் புடைவையைச் சணல் கயிற்றின் உதவியுடன் இம்முறையில் மடிசார் கட்டிக் கொள்ளலாம்)

– லக்ஷ்மி சங்கர்

☛ அலங்காரம் செய்து கொண்டிருக்கும் குழந்தைகள் : சௌம்யா, சுகன்யா, சுபாஷிணி, பிரஸன்ன வெங்கடேஷ், சுஜாதா, சுதாபாரதி, பிரியா.

☛ உடை, ஒப்பனை உதவி : திருமதிகள். நிர்மலா, ப்ரேமா, முத்துலக்ஷ்மி, குமாரி உமா.



பதமாக பாலை காய்ச்ச பாவையருக்கு ஏற்ற
பாங்கான ஒரு மில்க் பாய்லர்

# Murugan

MILK BOILER



- பரிசளிக்க சிறந்தது
- உபயோகத்திற்கு எளிதானது
- சேலம் AISI 304 எவர்சில்வர் தகட்டில் வடிவமைக்கப்பட்டது.

இணையற்ற எமது மற்ற தயாரிப்புகள்
○ இட்லி குக்கர் ○ தோசைதிருப்பி
○ குழிக்கரண்டி ○ சாஸ்பான்
○ அன்னவெட்டு ○ சட்டுவம்
அனைத்து முன்னணி பாத்திர விற்பனையாளர்களிடம் கிடைக்கும்.

**முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்**
8/1, பொன்னப்ப செட்டி தெரு,
சென்னை-3. போன் : 582182

# பேன் தொல்லையா ?

மல்லிகை நறுமணம் கமழும் எண்ணெயில் தயாரிக்கப்பட்ட கென்ஸ் உபயோகித்து ஈறையும், பேனையும் அறவே ஒழியுங்கள். தலைமுடியை பாதுகாத்துக் கொள்ளுங்கள். எளிதில் உபயோகிக்கலாம். சக்தி வாய்ந்தது.

## கென்ஸ்

சிறந்த பேன் நாசினி. பேன்களை முற்றும் கொல்லும். ஈறுகளை அழிக்கும் மருந்தும் கலந்தது.

கேசத்திற்கு தேவையான அளவு எடுத்து தலையிலும், மயிர்க்கால்களிலும் நன்கு தடவவும். 20 நிமிடங்கள் கழித்து தலையை நன்கு அலசிக் குளிக்கவும். வாரம் ஒரு முறை உபயோகிப்பது நல்லது.





கென்ஸ் 55, 15 மி.லி.
அளவுகளில் கிடைக்கும்.




தஞ்சாவூர் — 613 007

பள்ளி செல்லும் சிறுமிகளுக்கும், பெரியவர்களுக்கும் மிகவும் உகந்தது.

EXELADS/PP 763/91

அன்னையும், பிதாவும் முன்னறி தெய்வம் என்பது தமிழ்ப் பழமொழி. பழமொழியின்படி ஒரு தாய், தந்தை இருவரும் இந்த உலகில் சராசரி ஒரு மனிதனைப் போல் வாழ்க்கை நடத்தினாலும் அவர்களுடைய குழந்தைகளுக்குத் தெய்வம் போல் எல்லா வகையிலும் உதவி செய்ய வேண்டும் என்பதை நினைவூட்டுகிறது.

தற்காலத்தில் இளந் தம்பதிகள் திருமணம் செய்து கொள்வதிலே அவர்களுடைய வாழ்க்கைக்குப் பொழுதுபோக்கு போலவும் சில இடங்களுக்குச் செல்லும் போது கௌரவமாக செல்வதற்கும், தம்பதிகளாக வாழ்கிறார்களே தவிர வாழ்க்கையின் உண்மையை அறிந்து கொண்டு வாழ்வதாகத் தெரியவில்லை.

வாழ்க்கை என்பது ஒருவருக்கொருவர் உதவி செய்வதோடு கூட மனதிலே அன்பை வளர்த்துக் கொள்வதற்கும், வாழ்க்கையிலே தியாகத்தை வளர்த்துக் கொள்வதற்கும், இளம் வயதிலே இன்பமாக இருப்பதற்கும் மாத்திரம் அல்லாமல் வாழ்நாள் முழுவதும் ஏன் மறுபிறவியிலும் கூட இன்பமாக வாழ்வதற்கும்தான் வாழ்க்கை.

தற்கால நாகரீகத்தில் வெளிநாட்டு நாகரீகம் போல் இன்றைக்கு நமக்குப் பிடித்த கணவனோடு வாழலாம், அல்லது பிடித்த மனைவியோடு வாழலாம்; பிடிக்காவிட்டாலும் சரி, அல்லது இதைக் காட்டிலும் மனத்திற்கு வேறு சந்தோஷத்தை அளிக்க கூடியவர்களாய் இருந்தாலும் சரி 'கண்டதே காட்சி' என்ற நிலையில் உலகாயத வாழ்க்கையோடு தொழிற்சாலையில் பணிபுரிவது போல் வீட்டிலும் நடப்பது ஒரு கடமைப் பணியென பணி செய்து வரக்கூடிய குடும்பங்கள் நிறைய ஆகி விட்டன. இதனால் பல குடும்பங்களில் மன ஒற்றுமை குலைகிறது.

ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையும் ஒரு மத அடிப்படையின் கீழ் அமைகிறது. ஒவ்வொரு மதத்திலும் கல்யாணம் செய்து கொள்ளும் தினத்தன்று தம்பதிகள் இன்னின்ன முறையில் இருக்க வேண்டும். என்று கூறப்பட்டிருக்கிறது. நம்முடைய இந்து சமயத்தில் அக்னி சாக்ஷியாகவும், ஏழு அடி காலெடுத்து வைப்பதன் மூலமாகவும் கல்யாணம் நடைபெறுகிறது. தாலி கட்டுவது, மோதிரம் மாற்றிக் கொள்வது, மாலை மாற்றிக் கொள்வது, துண்டு மாற்றிக் கொள்வது, ரிஜிஸ்தர் செய்து கொள்வது போன்றவைகள் எல்லாம் கல்யாணச் சடங்குகளில் இருந்தாலும், சப்தபதியும் அக்னியில் பொறி போட்டு ஹோமம் செய்வதும்தான் முக்கியமானது.

அக்னியில் எந்தப் பொருளைப் போட்டாலும் எல்லாம் எரிந்து போய் விடும். அக்னி சாக்ஷியாக நடைபெறும் எல்லா இடத்திலும் கல்யாணத்திற்கு முன்பாக நடந்திருந்த தெரிந்தோ, தெரியாமலோ செய்த எல்லாவித தவறுகளும்... எரிக்கப்பட்டு, பொசுக்கப்பட்டு விவாகம் புனிதச்சடங்காக ஆகிறது.

கன்னிகாதானம் என்று விவாகத்தைச் சொல்லப்படுகிறது. இந்தக் காலத்தை ஒட்டி, வயதான பிறகு கல்யாணம் செய்தாலும் கல்யாணத்தை கன்னிகாதானம் என்றுதான் சொல்லப்படுகிறது. ஒரு பொருளைத் தானம் கொடுக்கும் போது மனப்பூர்வமாக முழு மனதுடன், சந்தோஷத்துடன் கொடுப்பவர் திரும்பவும் பெறுவதற்கு ஆசைப்படாமல், முயற்சி செய்யாமல் தானத்தைக் கொடுப்பதுதான் தானத்தின் விளக்கம். எந்த ஒரு பொருளை கொடுத்தாலும் இது நம்முடையது அல்ல, இது உன்னைச் சார்ந்தது என்று இரண்டு வகையிலும் சொல்லித்தான் கொடுக்க வேண்டும். கொடுத்த பொருளை திரும்பப் பெறுவது தானத்தின் விளக்கமல்ல. இதன்படி கல்யாணம் நடந்தது முதல் தம்பதிகள் எந்தக் காரணத்தைக் கொண்டும் பிரிந்து போவது என்பதையோ, தாய் வீட்டிற்குத் திரும்பி வந்து விடுவதோ அல்லது தன்னிச்சையாக, சுதந்திரமாக இருப்பதையோ இந்து சமயம் அனுமதிப்பதில்லை.

தானம் கொடுத்த பொருளைக் காப்பதற்காக அவ்வப்போது தானம் கொடுத்தவரைப் பணம் கேட்பதும், பொருள் கேட்பதும் சாஸ்திரமுமல்ல, முறையுமல்ல. அது

# திருமணம்

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்.**



போல் கன்னிகாதானம் ஆகிக் கல்யாண மான பெண்ணிற்காக அந்தப் பொருளைக் கொண்டு வா, இந்தப் பொருளைக் கொண்டு வா என்று பெண்ணையோ, சம் பந்தியையோ பிள்ளை வீட்டார் கேட்பது சாஸ்திரமுமல்ல, முறையுமல்ல.

தற்காலத்தில் வரதக்ஷிணை கொடுமை யால் பல பெண்களுக்குக் கல்யாணம் ஆகா மல் இருப்பது மிகவும் வருந்தத்தக்கது. புனிதமான விவாகம் என்னும் சடங்கைப் பணத்தோடும், பொருளோடும் சம்பந்தப் படுத்தி அதனால் பெண்களைக் கஷ்டப் படுத்துவது மிகவும் தவறான செயலாகும்.

அதே போல் தற்காலத்தில் பெண்கள் சம்பாதிக்கிறார்கள். அதை வைத்துக் கொண்டு புருஷனுக்குப் பெண்கள் மீது சில சந்தேகங்கள் ஏற்படுகிறது. அதனால் பல பிரச்னைகளும் ஏற்படுகின்றன. இதே போலத்தான் ஆண், பெண் இருவரும் இணைந்து பல இடங்களில் உத்யோகம் செய்வதனால் பெண்ணிற்கும், ஆணின் மேல் சந்தேகம் ஏற்படுகிறது. இப்படி பரஸ் பரம் இருவருக்கும் சந்தேகங்கள் ஏற்படு கின்றன. இதோடு கூட இருவரும் சம்பாதிப் பதனால் இருவருடைய பணத்தையும் வைத்துக் கொண்டு மிகவும் சந்தோஷமாக இருக்க வேண்டிய தம்பதிகள் இந்தப் பணத் தினாலேயே பலவித பிரச்னைகள் ஏற்பட்டு கஷ்டமும் படுகிறார்கள்.

இதனால் வாழ்க்கையில் குழந்தை

களைக் கவனிப்பது, பெற்றோர்களைக் கவனிப்பது கூட குறைந்து போய் விடுகிறது. ஆகவே கட்டுப்பாடற்ற வாழ்க்கை பல குடும்பங்களிடையே வளர்ந்து வருகின்றன. தற்காலச் சூழ்நிலையில் இவையெல்லாம் தவிர்க்க முடியாத நிலையில் இருந்தாலும் பரஸ்பரம் நம்பிக்கையோடும், தார்மீகச் சிந்தனையோடும், ஈஸ்வர பக்தியோடும்... விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடன் நடந்து கொண்டால் தற்காலச் சூழ்நிலையில் கூட சமாளித்துக் கொள்ள வாய்ப்பு ஏற்படும்.

மற்ற மதத்தினர் போல் நம்முடைய விவாகம், நம்முடைய குழந்தைகள் இவைகள் எல்லாம் வெறும் மனச் சந்துஷ்டிக்கு மாத்திரம் ஏற்பட்டதல்ல. நல்ல தம்பதிகளாக நாமும் இருந்து, நல்ல குழந்தைகளைப் பெற வேண்டும். நம்முடைய முன்னோர்களுக்கும், நம்முடைய தேவதைகளுக்கும், நம்முடைய ரிஷிகளுக்கும் பலவிதமான பூஜைகளும், இறந்த பிற்பாடு ஆண்டு தோறும் செய்ய வேண்டிய சில கர்மாக்களும், கடமைகளும் நமக்கெல்லாம் இருக்கின்றன. மற்ற மதத்தினருக்கு இதுபோன்று கடமைகள் ஒன்றும் கிடையாது.

ஆகவே மனிதர்களாக, தம்பதிகளாக நாம் வாழ்ந்தாலும், நம்முடைய குழந்தைகளுக்குத் தெய்வீக அருள் அளிப்பதற்கும் தெய்வீகத் தன்மை பெறுவதற்கும் நம்மைப் பார்த்து மற்றவர்கள் நல்லெண்ணத்துடன் வெறும் ''போகப்'' பொருளாகப் பார்க்காமல் தெய்வீகத் தன்மையோடு பார்ப்பதற்கு உகந்தவர்களாக நம்முடைய வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்ள வேண்டும். உடல், மனித வடிவு, உள்ளம், செயல் எல்லாம் தெய்வீக, ஆன்மீகத் தொடர்புடையது என்ற உணர்வோடு ஒவ்வொருவருடைய வாழ்க்கையையும் வாழப் பழகிக் கொள்ள வேண்டும்.

இந்து சமயத்தில் வரதக்ஷிணை கொடுக்கும், வாங்கும் பழக்கம் என்பது கிடையாது. இதற்கு சாஸ்திர ஆதாரமும் கிடையாது. மத்தியில் வந்த ஒரு தவறான பழக்கம். அதே போல் இப்பொழுது நடத்துவது போல் விவாகரத்து (DIVORCE) என்பதும் இந்து சமயத்தில் சாஸ்திர முறைப்படி கிடையாது. உடைகளை மாற்றுவது போல், உத்தியோகத்தை மாற்றுவது போல் வாழ்க்கையை அடிக்கடி வெளிநாட்டு நாகரீகம் போல் மாற்றிக் கொள்வதற்கும் இந்து சமயத்தில் அனுமதி கிடையாது.

கணவனுக்காகவே மனைவி மனைவிக்காகவே கணவன், வியாதியினாலேயோ, தவிர்க்க முடியாத காரணத்தினாலேயோ குடும்ப வாழ்க்கையில் தம்பதிகளாக இருக்க முடியாத சூழ்நிலை இருந்தாலும், விவாகரத்து (DIVORCE) என்பது கிடையாது. தனித்து இருக்கலாம். வாழ்நாள் முழுவதும் கணவன், கணவன்தான்; மனைவி மனைவிதான். அதுதான் இந்து சமயத்தின் தனிச் சிறப்பு. இதை வைத்துத்தான் தாய் தந்தையர்களைப் பார்த்து ''அன்னையும் பிதாவும், முன்னறி தெய்வம்'' என்றெல்லாம் கூறப் பட்டது.

---

நவராத்திரி ஒன்பது தினங்களிலும் என்ன பாயசம் வைப்பது என்று, தினமும் காலையில் எழுந்து குழப்பம் கொண்டு 'டென்ஷன்' செய்து கொள்ளாதீர்கள். முதலிலேயே 'டைம்டேபிள்' போட்டுக் கொள்ளுங்கள். ஈஸியாகிப் போவதுடன், அம்பாளுக்கும் வகை, வகையாக பாயசங்களும், பிரசாதங்களும் செய்யலாம்.




சரஸ்வதி பூஜையன்று அரிசி, ப.பருப்பு, க.பருப்பு மூன்றையும் வறுத்து, பாலில் வேகவிட்டு, செல்லம் போட்டு, தேங்காய் அரைத்து விட்டுச் செய்யும் பாயசமே விசேஷமாகும்.

மற்ற தினங்களில் ப.பருப்புப் பாயசம், ஜவ்வரிசி பாயசம், ரவை பாயசம் (அ) கேஸரி, அவல் பாயசம் தேங்காய்ப் பாயசம், அக்காரவடிசல், சர்க்கரை சாதம், கற்கண்டு பொங்கல், பால் பாயசம் இவைகள் செய்யலாம். அக்காரவடிசல் : அரிசி, ப.பருப்பு 5:1 என்ற விகிதத்தில் கலந்து, வறுத்து, வேக வைத்து, வெல்லப்பாகு வைத்துக் (அரிசி : வெல்லம் 1:3 என்ற விகிதம்) கிளறி, நிறைய நெய்விட்டு, ஏலப்பொடி, முந்திரி சேர்க்க வேண்டும்.

- கமலா

# “ஸ்ரீராம் வடிவில் உதவிய ஸ்ரீராமன்”

*கல்கியில் வெளியான*
*“கைகொடுத்த கடன் தொகை”*
*போட்டியில் பங்கு பெற்ற*
*உண்மை சம்பவம்*

சின்னதாக ஒரு நிலம். அதில் சொந்தமாகக் கட்டப்பட்ட ஒரு வீடு – நடுத்தர வர்க்கத்தினரின் லட்சியக் கனவு! எங்களுக்கும் (நான் + என் கணவர்) அந்தக் கனவு இருந்தது. அது கனவாக மட்டும் நின்று விடவில்லை. கண்ணுக்கெதிரே நினைவாகும் தொலைவில் ஒரு நண்பர் மூலம் சில ஆண்டுகளுக்கு முன் நிதரிசனமாகியது.

ஆமாம். நியாயமான விலையில் அவர் மூலம் ஒரு ப்ளாட் விற்பனைக்கு வந்தபோது நாங்கள் அடைந்த பரபரப்புக்கு அளவே இல்லை. அவ்வளவு தான். தேவைப்படும் பணத்தை எப்படியெல்லாம் திரட்டலாம் என்று கணக்குப் போடத் தொடங்கினோம். இரவு பகல் அதே யோசனை. கூட்டல், கழித்தல், வகுத்தல், பெருக்கல். என்ன செய்தும் ரூ. 25,000 துண்டு விழுந்தது. அதனைச் சரிக்கட்ட எந்த வழியும் தென்படவில்லை.

அந்தச் சமயத்தில் நிலத்தின் உரிமையாளர் வேறு ஒரு செய்தியைச் சொல்லியனுப்பினார். “வேறு ஒருவர் கேட்டுக் கொண்டிருக்கிறார். இரண்டு மாதங்களுக்குள் நீங்கள் முடிவு தெரிவிக்கவில்லை என்றால் நிலம் அவருக்கு விற்பனையாகிவிடும்...”.

கைக்கெட்டியது வாய்க்கு எட்டாமல் போய் விடுமோ? குழப்பமான குழப்பம். ஸ்ரீராமில் ரூ. 30,000 சீட்டில் சேர்ந்து ஆறு மாதங்களே ஆகியிருந்தன. அதை எடுத்து விடலாமா? யோசனை. ஆரம்பத்திலேயே எடுத்தால் மிக அதிகமாகத் தள்ளி எடுக்க வேண்டியிருக்குமே! தயக்கம்! நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன ....

ஒருநாள் இரவு. மணி சுமார் எட்டு இருக்கும். முன் பின் தெரியாத ஒருவர் என் கணவரைத் தேடி வந்தார். தான் ஸ்ரீராம் சிட்ஸிலிருந்து வருவதாகச் சொன்னார். அந்த மாதக் குலுக்கலில் எங்களுக்குச் சீட்டு விழுந்திருக்கிறது என்றார். பூர்த்தி செய்வதற்கான படிவங்களைக் கொடுத்து விட்டுப் போனார்.

பூஜை அறைக்குப் போனோம். ஸ்ரீராமர் படத்தின் முன் படிவங்களை வைத்தோம். ‘ஸ்ரீராமா, ஸ்ரீராமின் வடிவில் நீதான் கை கொடுத்திருக்கிறாய்...’

நாங்கள் வாங்கிய முதல் ‘அசையாச் சொத்து’ அது. அதைப் பார்க்கும் போதெல்லாம் ‘ஸ்ரீராம்’ என்ற சொல்லை மனம் அசை போடுகிறது.

எஸ். மைதிலி,
சென்னை – 26.





# சச்சிய மாதா கோயில்

ஜோத்பூர் நகரத்துக்கு வட மேற்கில் 52 கி. மீ. தொலைவில் 'ஓசியா' என்னும் கிராமம் இருக்கிறது. கூர்ஜர பிரதிஹார அரசர்களும் சௌஹான் பரம்பரையினரும் எட்டாம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த போது 'ஓசியா கோயில்கள் கொண்ட நகரமாக விளங்கியதாம்.

இங்குள்ள 'சச்சிய மாதா' கோயில் தமிழ் நாட்டு மக்களுக்குச் சமயபுரம் கருமாரியம்மன் கோயிலைப் போல் ராஜஸ்தானியர்களுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது.

எட்டாம் நூற்றாண்டில் பிரதிஹார அரசர் ஒருவரின் ஆட்சியின் போது இப்பகுதியில் பிரளயம் வந்ததாம். அதில் அடித்துக் கொண்டு வந்த தேவியின் திருவுருவம் மரக் கிளையில் சிக்கிக் கொண்டதாம். தொடர்ந்தாற்போல் பல நாட்கள் மழை பெய்தும், தண்ணீரின் மட்டம் தேவியின் பாதத்துக்கு மேல் ஏறவில்லையாம். இந்த அதிசயத்தைப் பார்த்து சிலிர்த்துப் போன ஊர் மக்கள், பிரளயநீர் வடிந்ததும் ஒன்றுகூடி ஆலோசித்து, அந்த இடத்திலேயே மாதாவுக்குக் கோயிலை எழுப்பினார்கள் என்பது பூஜாரி கூறும் வரலாறு. கி. பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டில் கோயிலைப் புனருத்தாரணம் செய்வித்தார்கள்.

இன்று வெள்ளித் தோரணங்களும், பளிங்குப் படிகளும், அழகான நுழை வாயிலுமாகக் கோயில் பார்க்கச் செல்வச் செழிப்புடன் திகழுகிறது. மூலவ மூர்த்தி சச்சிய மாதா. பெண் குழந்தை ஒன்று திருக்கைகளில் வாளும், அங்குசமும், கேடயமும், திரிசூலமும் தரித்து மண்டியிட்டு அலங்கார பூஷிதையாக அமர்ந்துள்ளதைப் போன்ற தோற்றம். முகத்தில் சாந்தப் புன்னகை. பார்க்கப் பார்க்கக் கண்களும் மனமும் குளிர்ந்து போகிறது.

அடுத்த சன்னிதிகளில் சீதளமாதா, சண்டி, சூரியன் ஆகிய திருவுருவங்கள்.

சச்சிய மாதா பல்லாயிரக்கணக்கான ராஜஸ்தானியக் குடும்பங்களுக்கு குல தெய்வம். குழந்தைகளுக்கு முடி இறக்க இங்கு அழைத்து வருகிறார்கள்.

நவராத்திரி, தீபாவளி பண்டிகைகளின் போது மேளா நடக்கிறது. வீடுகளில் மணல் வாரி, சின்னம்மை போன்ற நோய்கள் கண்டால் சச்சிய தேவிக்கு வேண்டிக் கொண்டு அம்மை இறங்கியதும் கோயிலுக்குப் பிரார்த்தனை செலுத்த வருகிறார்கள். பாரத நாட்டின் பிராந்தியங்களும், பேசும் மொழிகளும் விஸ்தாரமானவையாகவும், பலவேறாகவும் இருந்தாலும் மனோபாவங்கள் ஒன்றே போன்றுள்ளதோ? இதைத்தான் அந்த மகாகவிஞர் 'செப்பு மொழி பதினெட்டுடையாள் எனிற் சிந்தனை ஒன்றுடையாள்' என்றாரோ?

- லக்ஷ்மி ரமணன்.

அயர்ன் பாக்ஸில் அதிக சூடாகி அதனால் துணியில் வைத்தவுடன் உருகி ஒட்டிக் கொண்டு விடும். அதனை எவ்வளவு சுரண்டினாலும் போகாது. அதற்குச் சுத்தமான ஆஸிட்டை (நகைக் கடைகளில் உபயோகப்படுத்துவது) லேசாக ஒரு குச்சியால் தடவி பிளேடால் சுரண்டினால் சுத்தமாகி 'பளிச்'சென்று ஆகி விடும்.

- மைதிலி சிவா.



# உடன்பாடுகள்

பானுகுமார்

லேட்டாக வருவதை வாடிக்கையாகக் கொண்டிருந்தனர் எங்கள் ஆபீஸில் சில பெண்மணிகள். பரக்கப் பரக்க ஓடி வருவதும், வியர்வையைத் துடைக்கக் கூட நேரமில்லாமல் மஸ்டரில் ஸைன் பண்ணுவதும், பின்னர் ஸீட்டில் உட்கார்ந்து ஆசுவாசப்படுத்திக் கொள்வதும்.... பார்த்தால் பாவமாக இருக்கும். ஏன் லேட்? என்று நான் கேட்க மாட்டேன். ஏதாவது வழக்கமான காரணமிருக்கும். யாருக்காவது உடம்பு சரியில்லை, வேலைக்காரி வரவில்லை.... இப்படி. கடிந்து கூறினால், பல வருடங்கள் என்கீழ் வேலை பார்த்த உரிமையில், ''உங்களுக்கென்ன சார் சொல்றதுக்கு, நாங்க படற பாடு எங்களுக்குத் தெரியும்'' என்பார்கள்.

எனக்கும் தெரியும். அதான் தினம் கதை கதையாகக் கத்திப் பேசிக் கொள்கிறார்களே. சில சமயங்களில் அழுகை சமாதானம் வேறு. இவ்வளவு கஷ்டத்துடன் ஏன்தான் வேலைக்கு வருகிறார்களோ என்று பரிதாபப் படத் தோன்றும். கூட்டுக் குடும்பத்தில் பெண்களுக்கு ஒரு விதப் பிரச்னை என்றால் தனியாக இருந்து குழந்தைகளை க்ரஷ்ஷிலோ, வேலைக்காரியிடமோ விட்டு விட்டு வருபவர்களுக்கு வேறுவிதப் பிரச்னை. ஆக மொத்தம் யாருமே நிம்மதியாக இல்லை.

அதிலும் ஸீனியர் க்ளார்க் கமலாவின் வேலைக்காரி அவளை மிகவும் படுத்தி எடுக்கிறாள். தினம் புதுக்கதை அவளைப் பற்றி கமலா தன் தோழிகளிடம் கூற.... அது விரும்பியோ விரும்பாமலோ என் காதிலும் விழும். மற்றவர் வீட்டு விஷயம் என்றால் யாருக்குத்தான் சுவாரசியம் இருப்பதில்லை.

''இன்னிக்குக் காலங்கார்த்தாலே மூஞ்சியைத் தூக்கி வெச்சுண்டு இருந்தாள். கேட்டா வயித்து வலியாம்....''

''நெஜமாகவே வலியோ என்னவோ?''

''வலியும் இல்லே ஒண்ணுமில்லே. எல

லாம் மாய்மாலம். எதிர்த்துப் பேச மாத்திரம் வயித்தை வலிக்கலியா. ஏற்கனவே நான் டென்ஷன்ல கிளம்பறேன். இதிலே இவ ளுக்குப் பதில் சொல்ல யாரால் முடியும். ஆயிரம் தடவை நான் சொல்லியிருக்கேன். இஷ்டமில்லாட்டி இரண்டு வேலை குறைச்சு செய்.... ஆனா எதிர்த்து வாயா டாதே என்று. கேட்டால் தானே?''

''உங்க ஹஸ்பெண்ட் ஒண்ணும் சொல்ல மாட்டாரா?''

''அவர் எனக்குத்தான் புத்தி சொல்வார். அவளும் நல்லா வசம் கண்டிருக்கா. எனக்கு உதவிக்கு வர மனுஷா இல்லே. இவளை விட்டா வேற கதி இல்லே... அதான் திமிர் காட்டறா.'' போகட்டும் விடு, என்று தோழிகள் சமாதானப் படுத்துவர்.

இரண்டு நாட்கள்கழித்து இதே விஷயம் வேறு கோணம் எடுக்கும்.

''இப்ப எப்படி இருக்கா உங்க வசந்தி?''

''சீ, பாவம்..... அன்னிக்கிக் கத்திட் டேனே தவிர சாயந்திரமே ஏண்டா கத்தி னோம்னு எனக்கே தோணித்து. நான் வீட்டுக் குள்ளே நுழையறச்சே காப்பி டிபனுடன் ரெடியாக காத்திண்டிருந்தா. இந்தப் பாசத் துக்கு என்ன சொல்றது? சொந்த மனுஷா கூட இப்படி இருக்க மாட்டா....''

''பாவம். நீயும் அவளை இனி ஒண் ணும் சொல்லாதே.''

''கோபத்திலே கத்தறாளே தவிர அவ ளுக்கு மனசு வெள்ளை. அப்புறம் யோசிச் சேன். என்னை விட்டா அவளுக்கு வேற நாதி இல்லே. வாய் முழ நீளமே தவிர... கெட்ட எண்ணம் இல்லே.''

''அதானே முக்கியம்.''

தாற்காலிகமாக இரண்டு மூன்று நாட்க ளுக்கோ, ஒரு வாரத்துக்கோ இந்தப் பேச்சு முடிவடையும். மறுபடி ஆரம்பிக்கும்.

''இன்னிக்கு என்ன நடந்தது தெரியுமா ரத்னா.''

''என்ன?''

''நான் வசந்தியை வேலையை விட்டுப் போகச் சொல்லிட்டேன்.''

''ஏன் அவ்வளவு சீரியஸா என்னாச்சு.''

''நேத்திக்கு ரம்யாவை இவ ஸ்கேலால அடிச்சிருக்கா. கேட்டா ஹோம்வொர்க் பண்ண உட்காரலே. அதான் அடிச்சாளாம். ஒரு இரண்டு இடத்திலே நல்லா பட்டு காயம் வேற.''

''இவ ஏன் அடிச்சாளாம். சாயந்திரம் உங்கிட்ட சொல்ல வேண்டியதுதானே.''

''அதைக் கேட்டா நீங்க அடிக்கறதில் லையா. நான் அடிச்சா மட்டும் தப்பாங்கறா. நாங்க அடிக்கறதும் இவ அடிக்கறதும் ஒண்ணா? நாங்க பெத்தவா, திட்டுவோம், அடிப்போம், கொல்லுவோம். இவ யாரு?''

''அப்புறம் என்னாச்சு?''

''என் ஹஸ்பெண்ட் சொல்லிட்டார். இவளைப் போகச் சொல்லிடு. வேற ஆளைப் பாருன்னு. வாய் மட்டும்தான் நீளம்னு நெனச்சா, இப்ப கையும் நீள்றது.''

ஒரு வாரம்கழித்து வசந்தி இருக்கிறாளா போய்விட்டாளா என்று அறிந்து கொள்ளும் க்யூரியாஸிடியுடன், ரத்னா துருவிக்

## லூச்சி :

கல்கத்தாவில் மிகவும் பிரபலமான பூரி வகை இது. இது இல்லாத கல்யாணம் இல்லை. இதையும், ரசகுல்லாவையும் எண்ணி, எண்ணி, போட்டி போட்டுக் கொண்டு சாப்பிடுவார்கள் ஆண்கள்.



மைதா 2 கிளாஸ், கோதுமை மாவு 2 கிளாஸ் போட்டுக் கலந்து 3/4 அல்லது 1 கிளாஸ் டால்டா சேர்த்துப் பிசைவார்கள். அதாவது டால்டாவை சிட்டிகை சமையல் சோடா சேர்த்து நுரை வரும் வரை அடித்து, மாவையும், உப்பையும் போட்டுப் பிசறி சிறிதளவு நீர் சேர்த்துப் பிசைந்து, உருட்டி (சிறு சிறு உருண்டைகளாக) அப்பளம் போல் இட்டுப் பொரிப்பார்கள். வாயில் போட்டால் கரையும் இந்தப் பூரி நல்ல வெண்மை நிறத்தில் இருக்கும்.

சில சமயம் இதில் அரிசிப் பொரி போட்டு, நொறுக்கி, உருளைக்கிழங்கு காரக்கறி போட்டுக் கலந்து அவர்கள் சாப்பிடும் போது, நம் வாயில் நீர் ஊறும்.

- கமலா.

## நான் விரும்பித் தேர்ந்தெடுத்தது பட்டர்ஃப்ளை ஸ்டாண்டர்டு பிரஷர் குக்கர் ஏனெனில் அது "மூன்று மடங்கு பாதுகாப்புடையது"




தரமான ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கர்கள் மற்றும் பாத்திரங்களைப் பொறுத்தவரை பட்டர்ஃப்ளை தயாரிப்புகள் மீது எனக்கு எப்பொழுதும் அபார நம்பிக்கை. ஆகவேதான் அலுமினிய ப்ரஷர் குக்கர் ஒன்று தேவைப்பட்ட போது பட்டர்ஃப்ளையின் தயாரிப்போடு மற்றவைகளை ஒப்பிட்டு பார்த்தேன்.




முதலாவதாக, அழுத்தம் அதிகமானால் உருகி, நீராவியை பாதுகாப்பாக வெளியேற்ற, கவனமாக வடிவமைத்த சேஃப்டி வால்வு பட்டர்ஃப்ளை ஸ்டாண்டர்டில் இருப்பதைத் தெரிந்து கொண்டேன்.



இரண்டாவதாக, கூடுதலான பாதுகாப்பிற்கு "கேஸ்கட் ரிலீஸ் சிஸ்டம்" இருப்பதையும் புரிந்து கொண்டேன்.




இதோடு மூன்றாவதாக, தேவைக்கேற்ற அளவு அலுமினியத்தில் உருவாக்கப்பட்ட அதிக உறுதியான தேகம் கொண்ட "பட்டர்ஃப்ளை ஸ்டாண்டர்ட் குக்கர்" உச்ச பாதுகாப்பிற்கு மட்டுமல்ல, நீண்ட நாள் உழைப்பிற்கும் என அறிந்து கொண்டேன்.

கைப்பிடியோடு கூடிய சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் உள்பாத்திரங்கள் அழகுக்கு அழகு கூட்டுவதால் பட்டர்ஃப்ளை ஸ்டாண்டர்டு குக்கர் என்னுடைய பொருத்தமான தேர்வு மட்டுமல்ல, உங்களுடையதும் கூட!



**பட்டர்ஃப்ளை ஸ்டாண்டர்டு**

**பாதுகாப்பு! உறுதி!! அதிக நாள் உழைப்பு!!!**




**இலவசம்!**
சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் அன்னவெட்டி மற்றும் கரண்டி!

எல்லா முக்கிய கடைகளிலும், கூட்டுறவு சிறப்பங்காடிகளிலும் கிடைக்கும்.

Pratibha:BLR:2590:GA:T

கவிஞரின்
நெஞ்சக் கற்பனை
காகித மீது;
டிசைன் கலைஞரின்
நெசவுக கற்பனை
நிகரிலா நேர்த்திப்
பருத்தித்
துணிமீது.

பருத்தி
பேண்டீஸ்
மாதர் ஜட்டி
படைப்பு:விஜபி

# VIP Feelings

கேட்க....

''எங்க போறா? எங்கூடதான் அவளுக்குப் போட்டிருக்கு. எங்களுக்கும் அவளை விட்டா யாரு? புதுசா வேற ஆள் வைச்சா அவ மாத்திரம் அடிக்கமாட்டான்னு என்ன நிச்சயம்? சரி. போகட்டும் போ. ஏதோ உரிமைல அடிச்சுட்டா. விட்டுத் தள்ளுன்னு என் ஹஸ்பெண்ட் சொல்றார். இனிமே குழந்தையைத் தொட்டா சீட்டைக் கிழிச்சுடுவேன்னு வார்ன் பண்ணிட்டேன்.''

இதற்கப்புறம் ஒன்றும் நடக்காமல் ஒரு மாதம் வரை கழிந்தது. திடீரென்று ஒரு நாள் முகத்தில் கோபம் சிகப்பு நிறத்துடன் கொந்தளிக்க, கமலா ஆபீஸுக்குள் நுழையும்போது 'ஏதோ நடந்திருக்கிறது'. என்பது புரிந்தது.

பதினொரு மணி வரை வேலை மும்முரத்தில் அவளால் யாருடனும் பேச முடியவில்லை. அதற்குமேல் வேலைப்பளு சற்று குறையவே, ரத்னா டீ கப்புடன் அவள் எதிரில் வந்து உட்கார்ந்தாள்.

''ஏன் கமல்? ஏன் ஒரு மாதிரியா இருக்கே?'' கமலா கண்களில் கண்ணீர்... இதோ கொட்டி விடுவேன் என்று எட்டிப் பார்த்தது.

''இந்த உலகத்திலே நன்றி விசுவாசமே இல்லே. என்ன நல்லது செஞ்சாலும் அதுக்குப் பலன் இல்லே.''

''ஏன் இப்படி வெறுத்துக்கறே.''

''நேத்திக்கித் தலைவலின்னு பர்மிஷன் போட்டுட்டு மூணு மணிக்கே வீட்டுக்குப் போனேனா... கதவைத் திறந்த வசந்தி பேயறஞ்ச மாதிரி நிக்கறா. ஆறு மணி வரை நான் வரமாட்டேங்கற தைரியத்தில.... வீடியோல பிக்சர் பாத்திண்டிருக்கா. கூட பக்கத்து வீட்டு வேலைக்காரி. காஸெட் வாங்க எங்கேந்து பணம்னு கேட்டப்ப திரு திருன்னு முழிக்கறா?''

''எங்கேந்து கிடைச்சுதாம்.''

''நேத்து காலம்பற நான் குளிக்கறச்சே என் பர்ஸ்லேர்ந்து இருவது ரூபாய் எடுத்திருக்கா. இவளுக்கு ஏன் இந்தத் திருட்டுப் புத்தி? நல்ல சோறு சாப்பிட்டா நல்ல எண்ணம் வராதா?.... இதிலே வாரத்துக்கு ஒரு நாள் நாங்க பாக்கறச்சே கூட அவளும் பாக்கறா. அப்புறம் தனியா என்ன சினிமா? அதுவும் பணம் திருடி.''

ரத்னா ஒன்றும் பதில் சொல்லவில்லை. கமலா தொடர்ந்தாள்.

''இதிலே வயித்தெரிச்சல் என்னன்னா. என் ஹஸ்பெண்ட் எனக்கு அட்வைஸ் பண்றார். சினிமான்னா யாருக்குமே ஒரு வீக்னெஸ். அதுவும் அவ லெவல்லே அது ஒரு வெறியே ஆயிடும். பணத்தைப் பூட்டாம திறந்து வெச்சது உன் தப்புதான். யாருக்குமே திருடத் தோணும். இந்தத் தடவை வார்ன் பண்ணி விட்டுடு. இனிமே நீ கேர்புலா இரு...ன்னு எனக்கு சொல்றார்.''

''அவர் சொல்றது சரிதானே....''.

''ஏதோ போ. ஒவ்வொரு சமயம் இந்த வேலையைத் தலை முழுகிட்டு நிம்மதியா இருக்க மாட்டோமான்னு தோணுது.''

இதற்கப்புறம் மூன்று நான்கு மாசம் ஒன்றும் நடக்கவில்லை. திருடிக் கையும் களவுமாகப் பிடிபட்டதில் வசந்தி திருந்தி விட்டாள் என்று நினைத்தேன். திடீரென்று கமலா ஒரு வாரமாக ஆபீஸ் வரவில்லை. அவள் கணவனின் ஃபோன் மட்டும் வந்தது. அவள் இன்னும் பத்து நாட்களுக்கு வர



### பால் கொழுக்கட்டை :

கல்கத்தாவில் ஒரு சிலர் இந்தக் கொழுக்கட்டை செய்வார்கள். புழுங்கல் அரிசியைக் கழுவிக் காயப் போட்டு மிஷினில் அரைத்து வந்து சலித்து, கொழுக்கட்டை மேல் மாவு போல் கிளறவும். தேங்காய்ப் பூரணம் வழக்கப்படி செய்யவும். உருண்டையாக அல்லாமல் நீள்வாக்கில் உளுத்தம் கொழுக்கட்டை போல் (சோமாசி போல்) உள்ளே பூரணம் வைத்து 7,8 கொழுக்கட்டை செய்யவும்.

1 லிட்டர் பால், 2 லிட்டர் தண்ணீர் கலந்து பெரிய பாத்திரத்தில் இட்டு அடுப்பில் வைத்து கொதி வரும் போது 7, 8 கொழுக்கட்டைகளை மெதுவாக விடவும். மேலும் 7,8 கொழுக்கட்டை செய்வதற்குள் அவைகள் வெந்து மிதக்கும். அடுத்த 7,8 கொழுக்கட்டைகளை இறக்கவும். இதே போல் 30, 35 கொழுக்கட்டை இந்தப் பால் அளவுக்குச் செய்யலாம். ஒன்றிரண்டு கொழுக்கட்டை கரையும், மற்றவை அப்படியே வெந்திருக்கும். ஏலப்பொடி, 1/4 கிலோ சீனி இவை சேர்த்து மெதுவாகக் கிளறி பின் பரிமாறவும். கொழுக்கட்டை பாயசம் என்றும் கூறலாம். அற்புதமான வாசனையோடும், அற்புதமான ருசியோடும் இருக்கும் இது.

- கமலா.

மாட்டாள் என்று. உடம்பு சரியில்லையோ என்று நினைத்தேன். விஷயம் என்ன வென்று தெரிந்து கொள்ள நானும் ரத்னா வும் இன்னொரு க்ளார்க்கும் கமலா வீட் டிற்குச் சென்றோம்.

நல்ல விஷயம்தான். வசந்திக்கு அடுத்த வாரம் கல்யாணம் என்று மட்டும்தான் என்னிடம் சொன்னாள். மறுநாள் ஆபீஸில் ரத்னா மூலமாக முழு விவரமும் தெரிந்தது.

கமலா வீட்டருகில் இருந்த ஒரு காரேஜில் வேலை பார்க்கும் ஒரு மெக்கா னிக்கை வசந்தி அடிக்கடி சந்தித்துப் பேசி யிருக்கிறாள். அக்கம் பக்கத்தினருக்கு விஷ யம் அரசல் புரசலாக தெரிந்திருந்தும் யாரும்

சார். ஏதோ சபலம். நல்ல காலம் பையன் ஏதோ நல்லவனாக இருக்கான்.''

''இப்ப என்ன கமலா லீவ் போடப் போறாங்களா... வேலைக்கு ஆள் கிடைக் கற வரைக்கும். இல்லே வேலையை விட்டுடப் போறாங்களா?''

''இல்லே. அந்தப் பையன் வசந்தி தொடர்ந்து இவர்கள் வீட்டுக்கு வேலைக்கு வர சம்மதிச்சானாம். கல்யாணம் ஆனதும் ஒரு வாரம் அவன் ஊர் கோவிலுக்குச் சென்று ஏதோ பிரார்த்தனை செலுத்திட்டு திரும்ப வந்துடுவாங்களாம். அதற்குப் பின் வசந்தி வேலைக்கு வருவாளாம். அதுவரை கமலா லீவ்தான்.''






இவர்கள் காதில் போடவில்லை. நமக் கென்ன என்று இருப்பதுதானே இன்றைய நாகரீகம். பழக்கம் முற்றிப் போய் நெருக்கம் அதிகமாக... ரிஸல்ட்... வசந்தி இரண்டுமாத கர்ப்பம்.

இது தெரியவந்து, கமலா அவள் கணவன் இருவரும் கத்தி, ரகளை செய்து, பின் அவனைக் கூப்பிட்டுக் கேட்டதில், தன் தவறை ஒப்புக்கொண்டு, வசந்தியைத் திருமணம் செய்து கொள்ள சம்மதித்தது புண்ணியம்தான். அவன் பெற்றோர் வந்து பேசி முடிவு செய்ய அடுத்த வாரம் வசந்திக் கும் கல்யாணம்.

''ஆனாலும் இந்தப் பெண்ணுக்கு ரொம்பத் துணிச்சல்'' ''மனுஷ சரீரம்தானே

''அப்புறம் வசந்திக்கு குழந்தை பிறந்தாலவுட்டு... என்ன செய்வாங்க?''

''ஏதாவது வழி தோணாமயா போயி டும்? அன்னிக்குப் பார்த்துக்கறது. இப்ப லேர்ந்து அதப்பத்தி கவலைப்பட்டு என்ன புண்ணியம். அப்பங்கறச்சே ஏதாவது வழி தோன்றும்.''

ஆமாம். நிச்சயம் தோன்றும். வேலை பார்த்தே ஆக வேண்டும் என்ற கட்டா யத்தில் உள்ள இவர்கள் மறுபடி மறுபடி மன்னிக்கும் இயல்பை வளர்த்துக் கொள்வ தோடு.... எத்தனை உடன்பாடுகள் செய்து கொள்ள வேண்டியுள்ளது என்பதை நினைத்து மலைப்பாக இருந்தது எனக்கு.

# இந்த மாதம் எப்படி? அக்.91




### மேஷ ராசி :

அசுவனி, பரணி, கிருத்திகை 1 - ஆம் பாதம்.

சூரியனால் சுகமுண்டு. பொருளும் புகழும் சேர வாய்ப்பு உண்டு. சுக்கிரனால் தனலாபம் உண்டு. ஆனால் மன வேதனையும் ஏற்படும். குருவின் பார்வையால் தீமைகள் கட்டுக்குள் அடங்கி நிற்கும். மாதத்தின் பிற்பகுதியில் அலைச்சலும், அமைதியின்மையும் ஏற்படும். எனவே சிலர் பதவி மாற்றத்தை எதிர்பார்க்கலாம். கலைஞர்களுக்குப் பாராட்டும் பரிசும் கிடைக்கும். நகை வாங்கும் யோகமும் உண்டு. உடல்நிலை சற்று பாதிக்கப்படலாம். புத்திரர்களால் நன்மை ஏற்படும். சுப காரியம் ஒன்றுக்கு ஏற்பாடாகும். திருமண நிகழ்ச்சியாகவும் இருக்கலாம். வீடு, வாகன யோகமாகவும் அமையலாம். இந்த ராசியில் பிறந்துள்ள இயக்குனர்களும், நடிகைகளும் ஆதாயம் அடைவார்கள். கருப்புக்கல் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு நஷ்டம் ஏற்பட வாய்ப்பு உள்ளது. ஆனால் அங்காரகன் அதை ஈடு செய்து விடுவார். எனவே கவலை வேண்டாம்.

### ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 - ஆம் பாதங்கள். ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதி நன்மையைத் தரத் தகுந்ததாக இல்லை. மூன்றாவது வாரத்திலிருந்து புதுக் கடன்கள் பட வேண்டியிருக்கும். நடிப்புத் துறையினர்க்குக் கூட புது ஒப்பந்தங்கள் நிராகரிக்கப்படலாம். சுக்கிரன் உதவும் நிலையில் உள்ளதால் குடும்பத்தில் சிக்கல்கள் இராது. மற்றபடி எதிலும் எச்சரிக்கைத் தேவை. நஷ்டமும், அவமானமும் கூட ஏற்படலாம். எனினும் மாதக் கடைசியில் அங்காரகன் அனைத்தையும் சமாளிக்கும் ஆற்றலை அளிப்பார். அரசுப் பணியாளருக்குச் சற்றுக் கூடுதலான வேலை பளுவும், அதற்கேற்ப தனலாபமும் கிடைக்க வாய்ப்பு உண்டு. மற்றபடி சற்றுக் கடினமான மாதமே.

### மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3, 4 - ஆம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

சுக்கிரன் உதவும் நிலையில் இருந்தாலும் மற்ற கிரகங்கள் அனைத்துமே அனுகூல நிலையில் இல்லை. எனவே புது முயற்சிகள் வேண்டாம். பதவி மாற்றம் ஏற்படலாம். அதனால் அனுகூலமில்லை. கலைஞர்கள், கைவினைஞர்கள், மற்றும் கட்டிடக் காண்ட்ராக்டர்கள் சற்றே பயன் அடையலாம். சுப நிகழ்ச்சிக்கு ஏற்பாடாகலாம். வயிறும், கண்ணும் உபத்திரவம் தரலாம். அஷ்டமத்துச் சனீஸ்வரன் ஆட்சியில் உள்ளதால் கவலை வேண்டாம். அடுப்

படியில் பணிபுரியும் சகோதரிகள் சற்றுக் கவனமுடன் பணிபுரிய வேண்டும். தீக் காயங்களுக்கு வாய்ப்பு உண்டு. வங்கி ஊழியர்கள் ஏமாற்றப்படலாம். தலைமை அதிகாரிகள் பதற்றமும், படபடப்பும் அடையக் கூடிய சூழ்நிலை தெரிகிறது. எனவே நிதானத்தைக் கடைப்பிடிக்கவும்.

## கடக ராசி :

புனர்பூசம் 4 - ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

நல்லதொரு மாதம். தடைப்பட்டு வந்த சுபநிகழ்ச்சி நிறைவேறும். அது திருமண மாகவும் இருக்கலாம். அல்லது சொத்து சம்பந்தமான கோர்ட் விவகாரமாகக் கூட இருக்கலாம். எதிலும் வெற்றி, எப்படியும் வெற்றி என்ற நிலை மாதம் பூராவுமே தெரிகிறது. கடைசி வாரத்தில் மட்டும் சற்றுப் பணத் தட்டுப்பாடும் சுற்றத்தார் பகையும் ஏற்படலாம். பணிபுரியும் பெண்க ளுக்குப் பதவி உயர்வு, பரிசு என மகிழ்ச்சி யான சூழ்நிலை தெரிகிறது. வெளியூர்ப் பிரயாணமும் ஏற்படும். சுப நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வீர்கள். படத்துறை இயக் குநர், நடிக நடிகைகள், மற்றும் கலைஞர்கள் பாராட்டப்படக்கூடிய மாதம். பூச நட்சத் திரத்தில் பிறந்துள்ள நடிகைகளுக்குப் புது ஒப்பந்தங்களும், பண வரவும் கூடுதலாக இருக்கும். ஆயில்ய நட்சத்திரக்காரர்களின் வீட்டில் சுப நிகழ்ச்சி ஒன்று கட்டாயம் நடந் தேறும். அது பிறந்த தின விழா, அல்லது உபநயமாகக் கூட இருக்கலாம். கேதுவால் ஒரு சிலரின் உடல் பாதிப்படையலாம்.

## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1 - ஆம் பாதம்.

சுக்கிரன் சுகத்தையும் தனலாபத்தையும் தர இருக்கிறார். ஆனால் தேவ குரு அவற்றிற்கு அணை போட முயல்வார். ஆனால் அடுத்து வரும் நாட்களில் செல வினங்களுடன் கூடிய சுபச் செலவு ஒன்று காத்திருக்கும். புதனால் ஆரம்பத்தில் நன் மையும், கடைசி வாரத்தில் சுற்றத்தார் பகை யும் ஏற்படலாம். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். வெளியூர்ப் பிரயாணம் ஒன்று மகிழ்ச்சி தரத்தக்க நிலையில் அமை யும். மக நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குப் பதவி உயர்வு, எதிர்பார்த்த மாற்றம், பரிசு என லாப நிலையில் இருப்பார்கள். எனினும் வரவு குறைவாகவும் செலவு கூடுதலாகவும் இருக்கக்கூடிய மாதமாக அமையும். விவசாயிகளுக்குக் கூடுதலான இலாபம் உண்டு.

## கன்னி ராசி :

உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 - ஆம் பாதங்கள்.

சுக்கிரனால் சுகம் ஏற்படும். குடும்பத்தில் அமைதி இருக்கும். ஆனால் குருவினால் சுப விரயத்திற்கு இடமுண்டு. எனவே திருமணம் சம்பந்தமாகவோ, புதுமனை புகுவிழா போன்றதொரு சுப நிகழ்ச்சியாலோ பண விரயம் ஏற்படும். ஜென்ம ராசியில் முதலிரண்டு வாரங்களில் மூன்று கிரக சஞ்சாரம். எனவே மனதில் குழப்பம், எதிலும் தாமதம், சொல் தவறுதல் என பலவிதத்திலும் மன அமைதி கெட வாய்ப்பு உண்டு. ஆட்சி சனீஸ்வரன் சேதத் தைத் தவிர்க்கலாம். உடல்நிலையும் பாதிக்க லாம். எனவே விஷ்ணு ஸ்தோத்திரம் உகந்தது. எந்தத் துறையினரும் எச்சரிக்கை யுடன் செயல்பட வேண்டிய மாதம். மாதத்தின் பிற்பகுதியில் இராசிநாதனின் அருளால் எல்லாம் நல்லபடி முடியலாம்.

## துலா ராசி :

சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

பாவக் கிரகங்களால் பாவப் பலனே



### மூடி வைத்தியம் :

கல்கத்தாவில் நான் போன புதிதில் ஒருநாள் 'வயிற்று வலி' என்று துடிக்க, அக்கம் பக்கத்தவர்கள் 'மூடி சாப்பிட மூடி சாப்பிடு' சரியாகி விடும் என்று சொல்ல எனக்குப் புரியவில்லை.

ஒரு லிட்டர் அரிசிப் பொரி தட்டில் போட்டுக் கொண்டு கொடுத்து சாப்பிடு என்றார்கள். (அரிசிப் பொரிக்கு மூடி என்று பெயர் என்று அறிந்தேன்) பக்கத்தில் இருந்து சாப்பிட வைத்தார்கள். சாப்பிட்டு நீர் குடித்து, சற்றைக்கெல்லாம் வயிற்று வலி பறந்து விட்டது.

- கமலா.

அதிகம் தெரிவதால் எச்சரிக்கையுடன் செயல்படுங்கள். ஆகார விஷயங்களில் அக்கறை அதிகம் தேவை. பிரயாணத்தின் போது எச்சரிக்கையுடன் இருங்கள். பணப் புழக்கத்தில் உள்ளவர்கள் அவசரத்தி னாலோ, அல்லது அலட்சியத்தினாலோ பணத்தைப் பறிகொடுக்கும் சூழ்நிலை உருவாகலாம். குருவும் சுக்கிரனும் சேர்ந்தே நன்மை செய்ய இருப்பதால் மாணவர் களுக்குப் படிப்பில் கவனம் ஏற்படும். சுப நிகழ்ச்சி ஒன்றுக்காக பிரயாணம் ஒன்றை மேற்கொள்ள இருக்கிறீர்கள். அதில் ஆதாயம் உண்டு. எழுத்தாளர்கள் ஏற்றம் பெறுவர். எரிபொருள் துறை, மற்றும் இரும்பு இரசாயனத் துறையினர் சற்று நஷ்டமடையக்கூடும். எதிலும் அகலக் கால் வைக்க முடியாத மாதம். சுக்கிரனைத் தொழுங்கள். சுகத்திற்குக் குறைவு வராது. குருவைத் தொழுங்கள்; கெடுதல்கள் குறையும்.



## ஜவ்வரிசி முறுக்கு

தேவையான பொருட்கள் :
ஜவ்வரிசி - 1 கப்,
மைதா - 1 கப்,
அரிசி மாவு - 2 கப்,
தயிர் - $1\frac{1}{2}$ கப்,
நெய் - 1 ஸ்பூன்,
மிளகாய்ப் பொடி - 1 ஸ்பூன்,
உப்பு - $1\frac{1}{2}$ ஸ்பூன்.

செய்முறை :
முதலில் ஜவ்வரிசியை 3 மணி நேரம் (தயிர் புளித்திருந்தால்) அல்லது 10 மணி நேரம் (புளிக்காத தயிராயிருந்தால்) தயிரில் ஊறவைக்கவும். பின் அதில் உப்பு, நெய், மிளகாய்ப் பொடி ஆகியவற்றைச் சேர்க்க வும். பின் அக் கலவையுடன் அரிசி மாவு, மைதா ஆகியவற்றையும் சிறிது நீர் சேர்த்து முறுக்குக்குப் பிசைவது போல செய்யவும். பின் அதை முறுக்குப் பிழியும் எந்திரத்தின் மூலம் எண்ணெயில் பொரித்தெடுக்கவும்.

- ஜி. ஏ. லட்சுமி, சென்னை - 28.

### விருச்சிக ராசி :

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

மாதத்தின் முற்பகுதியில் பொன்னகை வாங்குவீர்கள். அல்லது அடகு மீட்பீர்கள். பயணத்தால் ஆதாயம் ஏற்படலாம். பத்தாம் இடத்துக் குருவினால் பலவிதமான அலைச் சல்கள் உண்டாகலாம். கேட்டை நட்சத்திரத் தில் பிறந்துள்ள மூத்தவர்கள் சற்றே உடல் நிலை பாதிப்புக்கு ஆளாக கேது காரணமாக நிற்கிறார். எனவே அவருக்கு அதிதேவதை யான கணபதிக்கு ஹோமம் செய்வதன் மூலம் அனைத்துக் கஷ்டங்களையும் நிவர்த்தி செய்து கொள்ளலாம். ஆட்சியில் உள்ள சனி ஆயுளுக்கு பங்கம் நிர்ணயிக்க மாட்டான். இரண்டாம் இடத்து ராகு இடரை உண்டு பண்ணலாம். எனவே துர்க்கை சம்பந்தமான வழிபாடு ஏற்றது. செவ்வாய்க் கிழமைகளில் இராகு காலத்தில் விளக்கேற்றி வழிபாடு செய்யுங்கள்.

### தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.

சுப நிகழ்ச்சி ஒன்றில் உங்களுக்கு மதிப் பும் மரியாதையும் கிடைக்கும். வஸ்திரலாப மாகவும் அமையலாம். அல்லது பொருளாக வும் கிடைக்கலாம். கலைஞர்களுக்கு நல்ல தொரு சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. நடிகை களுக்கு நல்லதொரு அதிருஷ்டம் காத்திருக் கிறது. அல்லது நடித்து முடித்த படம் நூறா வது நாள் விழாவை நோக்கி நடைபோடும். பாடகர்கள், ஆசிரியர்கள், அரசுத் துறை யினர் பாராட்டையும், பரிசையும் பெறு வீர்கள். இராகுவால் இழந்ததைப் பெறு வீர்கள். அது அடகுவைத்த நகையை மீட்கும் பணியாகவும் இருக்கலாம். அல்லது கை விட்டுப் போன பிதுரார்ஜித சொத்தாகவும் இருக்கலாம். இராசிநாதன் பார்வை உங்க ளுக்கு உகந்த நிலையில் உள்ளதால் புது முயற்சியில் ஈடுபடலாம்.

### மகர ராசி :

உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

குருசந்திரர்களின் சஷ்டாஷ்டக நிலை ஜாதகத்தில் அமைந்துள்ளவர்களுக்குச் சிர மம் உண்டு. இராசிநாதன் ஆட்சியில் உள்ள தால் அளவோடு நன்மையும் உண்டு. எனி னும் புது முயற்சிக்கு உகந்த நிலையில் இல்லை. மாதத்தின் கடைசிப் பகுதியில் புதனால் மாணவர்களுக்கு ஆதாயம் உண்டு.

கேது கொடுக்கலாம். ஆனால் ராகுவோ கெடுக்கலாம். எனவே வாகனத்தையுடையோர் எச்சரிக்கையுடன் கையாளுங்கள். மற்றபடி சுமாரான மாதம்தான்.

## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

ஆட்சியில் உள்ள சனி அருள் புரிவார். 71/2 சனியுடன் பாதிப்பும் அசுர தேவ குருக்களால் கட்டுப்படுத்தப்படும். அதனால் ஆதாயம் அதிகம். திடீர் ராஜ யோகத்திற்கும் வாய்ப்பு உண்டு. ராகு கண்டிப்பாகக் கோர்ட் விவகாரங்களில் ஜயம் ஏற்படுத்திக் கொடுப்பார். பதவி மாற்றம் மனம் போல அமையும். சில நடிகர்களுக்குத் திடீர் யோகம் அடிக்கும். பட ஒப்பந்தங்கள் எதிர்பார்த்ததற்கு மேலாக அமையும். கும்ப இராசிக்காரர்களுக்கு இதற்கு முன் இருந்த குடும்பப் பிரச்னைகள் குறையும். யாத்திரை உண்டு. உத்தியோகம் கிடைக்கும். எதிர்பார்த்து ஏமாந்த எந்த முயற்சியும் தற்போது வெற்றியைத் தரும் என்றாலும் ஐந்தாம் இடத்துக் கேதுவால் அதிகம் செலவு செய்தே பெற வேண்டி இருக்கும்.

## மீன ராசி :

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

சற்று சாதாரண மாதமே. ஆறாம் இடத்தில் உள்ள அசுர குரு தனலாபத்தைத் தர முயன்றாலும், தேவகுரு அதைத் தடுப்பார். உடல்நிலை பாதிப்பும் உண்டு. எனினும் 1 ஆம் இடத்து ஆட்சிச் சனி ஆயுளுக்கு உத்திரவாதம் அளிக்கிறார். கேதுவும் இராகுவும் சேர்ந்தே கெடுப்பார்கள். ஆயினும் புதனால் புகழும் உண்டு. அது மாதத்தின் இறுதியில் ஏற்படும். சற்று மந்தமான சூழ்நிலை எத்தகைய நிலையில் உள்ளவர்களும் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும்.

## இன்னல்களை எதிர்த்து வெற்றி நடை போட வேண்டுமா?

ஒரு சமயம் ஒரு தனிப்பட்ட ஜாதகர் விஷயமாக குருவுக்கும் சந்திரனுக்கும் சர்ச்சை தோன்றியது. அந்தக் குறிப்பிட்ட ஜாதகத்தில் ஒரு குறிப்பிட்ட தினத்தில், குறித்த நேரத்தில் அந்த ஜாதகருக்கு மாரகம் எனும் மரணம் சம்பவிக்கும் என சந்திரன் குருவிடம் திட்டவட்டமாக, அஷ்டமஸ்தானம் மாரகதசை, மாரகபுத்தி ஆகியவைகளைக் கணக்கிட்டுக் கூறினார். கோசார

# குழந்தைக்கு அஜீரணமா?

## தேவை
# நியுபான்
## அஜீரண நிவாரணி
## சிறந்த மூலிகைகள் அடங்கியது




**நியுபான்**
குழந்தைகளின்
அஜீரண நிவாரணி

குழந்தைகளின் அஜீரணம், பசியின்மை, வயிற்று வலி, வயிற்றுப் பொருமல், வாயு தொந்திரவு, எதுக்களித்தல், வாந்தி, மலச்சிக்கல் ஆகியவற்றைப் போக்க அனுபவமிக்க தாய்மார்கள் பாரம்பரியமாக வீட்டு வைத்திய முறையில், ஓமம், வசம்பு, திப்பிலி, சிற்றரத்தை, கடுக்காய், ஏலக்காய், சதகுப்பை, அதிமதுரம் போன்ற சிறந்த மூலிகைகளை பயன்படுத்தி கைகண்ட நிவாரணம் கண்டிருக்கிறார்கள்.

மேற்கண்ட சிறந்த மூலிகைகளை தேவையான அளவு சேர்த்து விஞ்ஞான முறையில் நியுபான் தயாரிக்கப்பட்டுள்ளது.

குழந்தைகள் விரும்பி சாப்பிடக் கூடியது. தொடர்ந்து கொடுப்பது நல்லது. அஜீரணத்தை தவிர்க்கும். பின் விளைவுகள் ஏதுமில்லை. பாதுகாப்பானது.




தஞ்சாவூர் - 613 007

EXELADS/PP 761/91

ரீதியாகவும் குருவின் பார்வை சாதகமாக அமையாத நிலை. எனினும் சந்திரனின் கணக்கு தவறு என குரு எண்ணினார். அதனால் சந்திரனிடம் அந்தக் குறிப்பிட்ட நேரத்தில் அந்த ஜாதகரை மறைந்திருந்து பார்த்து மாரகம் எப்படிச் சம்பவிக்கும் என்பதைக் கவனிக்கலாம் எனத் தீர்மானம் செய்தனர்.

அந்தக் குறிப்பிட்ட நாளும், நேரமும் வந்தது. அந்த ஜாதகருக்கு 60 வயது நடக்கின்ற சமயம் வேறு. அவர் அந்தச் சமயத்தில் தன் வீட்டு ஊஞ்சலில் உட்கார்ந்து அதை ஆட்டிக் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் ஊஞ்சல் கட்டப்பட்ட உத்திரத்தின் வழியாக பாம்பு ஒன்று நெளிந்து வந்து ஒரு கம்பியின் வழியே கீழே இறங்க ஆரம்பித்தது. ஊஞ்சலின் நாதங்கியைப் பிடித்து பாம்பு இறங்கத் தொடங்கியது. குரு பகவான் அதைக் கவனித்துக் கொண்டிருந்தார். சந்திரன் குருவைப் பார்த்துத் தனது கணக்கு பலிக்கும் நிலை பாம்பின் மூலம் வந்துள்ளது எனக் குறிப்பாகக் காட்டினார். அவரும் குருவைப் போலவே அந்த நிகழ்ச்சியைப் பார்த்த வண்ணம் இருந்தார். அந்தப் பாம்பு நாதங்கியைத் தழுவி இறங்க முயற்சித்த நேரத்தில் அந்த ஜாதகர் தன்னையறியாமல் ஊஞ்சலை வேகமாக ஆட்டினார். மேலே பாம்பு ஊருவது அவருக்குத் தெரியாது. திடீரென்று தன் மேல் இரத்தத் துளிகள் படுவதை உணர்ந்த அவர் அண்ணாந்துப் பார்க்க அங்கே நாதங்கியின் இடுக்கில் பாம்பு ஒன்று சிக்கி தலைநசுங்கித் தொங்குவதைப் பார்த்துப் பயந்து குதித்திறங்கவும் பாம்பு அந்த நேரத்தில் துண்டு பட்டுக் கீழே விழவும் சரியாக இருந்தது.

சந்திரனுக்கோ ஒரே அதிசயம். அவரது கணக்கு எப்படித் தோல்வி அடைந்தது? குருவின் பார்வை கூட ஜாதகத்தில் இல்லையே என எண்ணி குருவைப் பார்த்தார். அப்போது தேவகுரு ''சந்திரா, ஜாதகத்தின்படி உன் கணக்கும் சரிதான். எமனின் பாசக் கயிறு பாம்பின் ரூபத்தில் வந்ததும் உண்மை. ஆனால் உள்ளபடியே நாம் இருவரும் சற்று முன்னால் வழக்கத்திற்கு மாறாக, ஒரு சேர அந்த ஜாதகரைப் பார்த்துக் கொண்டிருந்தோமல்லவா! எனவேதான் அவர் காப்பாற்றப்பட்டார். குரு பார்த்திடில் கோடி தோஷம் விலகும் என்பதும், குரு - சந்திர சங்கமப் பார்வை ஆயிரக்கணக்கான தோஷங்களை நீக்கவல்ல கஜகேசரி யோகத்தைத் தரவல்லது என்பதும் உண்மை. எனவேதான் அவர் காப்பாற்றப்பட்டார். உன் கணக்கில் ஒரு சிறு குறை. அதாவது அவரது மகன் ஜாதகத்தில் கர்மதசை வரவில்லை. மனைவியின் மாங்கல்ய பாக்கியம் பலமாக அவளது ஜாதகத்தில் இருக்கிறது. இவற்றைக் கவனிக்காமல் அவரது ஜாதகத்தை மட்டும் வைத்து நீ பலன் கணக்கிட்டு விட்டாய். ஆனால் நானோ அவைகளையும் கவனித்து விட்டுத்தான் அவருக்குக் கண்டம் ஏற்படும். ஆனால் மாரகம் ஏற்படாது என்பதை உணர்ந்தே உன்னுடன் வந்து அவரைப் பார்க்கச் சம்மதித்தேன். நமது பார்வை நேரடியாக அவர் மீது விழுந்ததால் அவர் மாரகத்திலிருந்து காப்பாற்றப்பட்டார்'' என விளக்கினார்.

இப்படி ஒரு பழங்கதையை ஒரு ஜோதிடர் என்றோ கூறியதை இங்கு சொல்வதற்குச் சில காரணங்கள் உண்டு.

ஒருவரது கையில் குருமேட்டில் இரண்டு செங்குத்துக் கோடுகளும் (x-y) இருந்து, சந்திரமேட்டில் ஒரு கோடு (s-t) குருமேட்டை நோக்கியிருந்தால் அவருக்குக் குரு சந்திரயோகம் உண்டு. வேறு ரேகைகள் தாறுமாறாக இருந்தால் அதை எப்படிக் கண்டுபிடிப்பது என அநேகருக்குச் சந்தேகம் தோன்றி விடுகிறது. கையில் எவ்வளவோ ரேகைகள் இருக்கலாம். ஆனால் படத்தில் உள்ளது போல் ரேகைகள் குருசந்திர மேட்டில் இருந்தாலே போதும். அத்துடன் கிரக சந்திகள் (m) நன்கு அமைந்திருக்க வேண்டும். இப்படி இருப்பவர்களுக்கு ஆயுள், ஆரோக்கியம் அஷ்ட ஐஸ்வரியம் ஆகியவை குறைவின்றி நீடித்து, நிலைத்து நிற்கும். அத்துடன் வெகு ஜன பாராட்டும் பரிசும் கிடைக்கும். சமுதாயத்தில் உன்னதமான இடம் அமையும். அரசியலில் மேதையாகவும், பல நாடுகளுக்குச் செல்லும் வாய்ப்பு உள்ளவராகவும் இருப் பார். அத்துடன் சத்புத்திரர்களைப் பெறும் பாக்கியமும் உடையவராக இருப்பார். எண்ணற்ற இன்னல்கள் வந்தாலும் அவற்றை எளிதாக எதிர்த்து நின்று வெற்றி நடைபோடுவார்.

**- ஜெயலட்சுமி கிருஷ்ணன்.**



